ராபின்சன் குடும்பம்

யோஹன் டேவிட் வைஸ்

தமிழில்

சிவன்

# 1

ஆறு நாட்களாகக் கடலில் இடைவிடாத புயல், அதற்குப் பிறகும் புயலின் தீவிரம் அதிகமானதே தவிரக் குறையவில்லை. கடலில் பயணம் செய்து கொண்டிருந்த எங்கள் கப்பல் சூழல் காற்றில் சிக்கி, வழிதவறி விட்டது. கப்பலின் கேப்டனுக்கே, கப்பல் அப்பொழுது எந்த இடத்தில் இருக்கிறது என்பது தெரியவில்லை. பாய்மரங்கள் உடைந்து கடலில் எங்கெல்லாமோ விழுந்துவிட்டன. பாய்மரத் துணிகள் நார்நாராகக் கிழிந்து விட்டிருந்தன. பல இடங்கிளல் ஓட்டை விழுந்து, கப்பலுக்குள் கடல்நீர் புகுந்து கொள்ளத் தொடங்கியிருந்தது. நடுக்கடலில், திசையும் தேசமும் தெரியாத சூழ்நிலையில், கடவுள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தனை செய்தபடி இருந்தோம்.

திடீரென்று புயலின் கடுமையான இரைச்சலையும் மீறி “நிலம்... நிலம்...” என்ற கூச்சல் கப்பலின் மேல்தளத்திலிருந்து எழுந்தது. அதே சமயம் பெருத்த அதிர்ச்சியுடன் கப்பல் பெரும்பாறை ஒன்றின் மீது மோதிச் சட்டென்று நின்றுவிட்டது.

“எல்லாமே அழிந்துவிட்டது. உடனே படகுகளை இறக்குகங்கள்!” கப்பலின் கேப்டன் கூவினார்.

குழந்தைகள் நடுங்கியபடியே வந்து என்னைத் தழுவிக் கொண்டனர். அவர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டு, உண்மை நிலையை அறிவதற்காக நான் மேல்தளத்திற்குச் சென்றேன். கண்டபடி வீசியடித்துக் கொண்டிருந்த பெரிய அலைகள் என் கால்களைத் தடுமாறச் செய்தன.

கல் மழைபோல் விழுந்த நீர்த்துளிகள் கண்களைக் குருடாக்கின. தட்டுத்தடுமாறி ஒதுக்குப்புறமான ஓர் இடத்தில் நின்றபடி சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒன்றுகூட மீதமில்லாமல் எல்லாப் படகுகளும் கடலில் இறக்கப்பட்டிருந்தன. மாலுமிகள், கேப்டன் உட்பட எல்லோரும் கப்பலிலிருந்து வெளியேறி விட்டிருந்தனர். துரதிர்ஷ்டவசமாக ஒருவர் கூட எங்களைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை!

இந்த நிர்க்கதியான சூழ்நிலையிலும் கப்பலின் முன்புறம் மட்டும் நீர்மட்டத்திற்கு மேல் சற்று உயரத்தில் இருந்தது. இது மனதிற்கு ஓரளவு ஆறுதல் அளித்தது. அப்படியானால், நாங்கள் தங்கியிருக்கும் அறை கடல் மட்டத்திற்கு மேலாகவே உள்ளது. சற்றுத் தொலைவில் - தெற்குச் திசையில் மனித நடமாட்டமற்ற கரைப்பகுதி ஒன்று தட்டுப்பட்டது.

நான் கீழ்த்தளத்தை அடைந்து குடும்பத்தினரிடம் ஆறுதல் ஏற்படுத்த முயன்றேன்: “தைரியமாக இருங்கள்! கப்பலின் முன்பகுதி நீர் மட்டத்திலிருந்து உயரத்திலேயே உள்ளது. புயல், நாளைக்குள் ஓய்ந்துவிடக் கூடும். விரைவிலேயே நாம் கரையை அடைந்து விடலாம்!”

சிறிய குழந்தைகள் என்னுடைய வார்த்தைகளைக் கேட்டுப் பயம் தெளிந்தனர். ஆனால், மனைவிதான் நிலைமையை உணர்ந்து மிகவும் கலங்கினாள். எனவே அவள் கூறினாள்:

“இந்த நிலைமையில் நாம் இன்று இரவு தூங்க முடியும் என்று தோன்றவில்லை. எனவே சாப்பிடலாம். உடலுக்குத் தெம்பையும், உள்ளத்திற்கு நம்பிக்கையும் பெறலாம்.”

கப்பலில் உணவுப் பொருள்கள் ஏராளமாக இருந்தன. சாப்பாட்டிற்குப் பிறகு சின்னக் குழந்தைகள் மூவரும் படுத்துவிட்டனர். பெரிய பையனாகிய ஃபிரிட்ஜ் மட்டும் உறங்காமல் எங்களுடன் அமர்ந்திருந்தான்.

“அப்பா, நாம் எப்படிக் கரைக்குச் செல்வது என்று யோசிக்கிறேன். அம்மாவும் தம்பிகளும் பத்திரமாகச் செல்ல ஒரு வழி செய்துவிட்டால், பிறகு நாம் இருவரும் நீந்தியேகூடச் செல்லலாம்” ஃபிரிட்ஜ் கூறினான்.

அவன் தெரிவித்த நல்ல யோசனைக்காக அவனைப் பாராட்டினேன். பிறகு அதன்படியே செயல்படத் தொடங்கினேன். கப்பலில் தக்கை

போன்ற நெட்டி மரத்தால் செய்யப்பட்ட பீப்பாய்கள் சில இருந்தன. முதலில் அவற்றைத் தேடி எடுத்தோம். பெரிய பெரிய பீப்பாய்கள். கரையை அடைந்து விட்டால் பயன்படும் என்று கத்திகள், கயிறு போன்ற இன்றியமையாத பொருட்கள் சிலவற்றையும் எடுத்து வைத்தோம். அதற்குள் ஃபிரிட்ஜ் களைப்படைந்து விட்டதால் உறங்கச் சென்றான். நானும் என் மனைவியும் இரவு முழுவதும் கண் விழித்தபடியே கப்பலைக் கண்காணித்துக் கொண்டிருந்தோம்.

பொழுது விடிந்தபோது தென்பட்ட கடலின் அமைதி எங்களுக்கு மகிழ்ச்சியளித்தது. புயல் அடங்கிவிட்டிருந்தது. கடலின் கொந்தளிப்புப் பெருமளவு குறைந்திருந்தது.

“நமது கப்பலின் மாலுமிகள் எல்லோரும் எங்கே போய்விட்டார்கள் அப்பா?”

“ஏன் நம்மை மட்டும் விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்?”

குழந்தைகள் ஒவ்வொருவரும் இவ்வாறு கேள்வி கேட்டனர்.

“நம்மைக் கடவுளிடம் ஒப்படைத்துவிட்டு அவர்கள் போய்விட்டார்கள். அதுவும் நம்மைக் காப்பதற்காகவே இருக்கலாம்!” நான் அவர்களுக்குப் பதிலளித்தேன்.

துணிச்சல் மிகுந்தவனான ஃபிரிட்ஜ், “நாம் நீந்தியே கரையை அடைந்துவிடலாம்” என்றான். பன்னிரண்டு வயதான எர்னஸ்ட் புத்திக் கூர்மை கொண்டவன் என்றாலும், பதற்றப்படுபவன். இரண்டாவது மகனான எர்னஸ்ட், “ஒரு தெப்பத்தைக் கட்டித் தப்பிக்கலாமே!” என்றான்.

“தெப்பம் கட்ட வெகுநேரமாகும். அப்படியே கட்டினாலும் இந்தச் சூழ்நிலையில் அதைக் கரைசேர்ப்பது அவ்வளவு சுலபமல்ல. அதனால், அதைப் பற்றி யோசிப்பதற்கு முன்னால், கப்பலில் வேறு என்னென்ன பொருள்கள் இருக்கின்றன என்று பார்க்கலாம்!” என்றேன்.

கப்பலின் ஸ்டோர் ரூம் எனப்படும் பொருள்களின் பாதுகாப்பு அறைக்குச் சென்றேன். உணவுப் பொருள்களும், குடிநீரும் எவ்வளவு உள்ளதென்று பார்த்தேன். மூத்தவனான ஃபிரிட்ஜ், ஆயுத அறைக்குள் நுழைந்து துப்பாக்கி, தோட்டாக்கள் போன்றவற்றைக் கொண்டு

வந்தான். இரண்டாவது மகனான எர்னஸ்ட், கப்பலின் தச்சுப் பட்டறைக்குச் சென்று மர வேலை செய்வதற்கான கருவிகளை எடுத்து வந்தான். ஆறு வயது நிரம்பிய கடைசிப் பையன் ஃபிரான்ஸிஸ் ஒரு பெட்டி நிறையத் தூண்டில்களையும், மீன் பிடிக்கும் கயிறுகளையும் எடுத்து வந்தான். மீன்பிடித்து உயிர் வாழும் நிலை, ஒருவேளை ஏற்படலாம் என்று கருதினேன். அதற்காக அவனைப் பாராட்டினேன். பத்து வயது நிறைந்த மூன்றாவது மகனான ஜாக், கேப்டனின் அறையைத் திறந்தான். உருவத்தில் பெரிய நாய்கள் இரண்டு வெளியே பாய்ந்து வந்தன. இரண்டு நாட்களாகப் பட்டினி கிடந்த அவற்றை, ஜாக் இழுத்துக்கொண்டு வந்தான். இவை தவிர, 'ஒரு பசுமாடு, ஒரு கழுதை, இரண்டு வெள்ளாடுகள், ஒரு செம்மறி ஆடு, ஒரு பெரிய பெண்பன்றி ஆகியவற்றைக் கப்பலின் வெவ்வேறு அறைகளில் கண்டதாகவும், அவற்றுக்குத் தீனி வைத்துவிட்டு வந்த'தாகவும் கூறினான்.

"ஜாக்கின் நாய்களைத் தவிர, மற்ற எல்லா விலங்குகளும் நமக்குப் பயன்படும்!" நான் கூறினேன்.

"கரையை அடைந்து விட்டால், வேட்டையாடுவதற்கு நாய்கள் நமக்கு உதவுமே அப்பா!" என்றான் ஜாக்.

"அதுவும் உண்மைதான். முதலில் நாம் கரையை அடைவது எப்படி?" நான் கேட்டேன்.

"இதோ... இந்த மரப் பீப்பாய்களில் உட்கார்ந்து மிதந்து கொண்டு போகலாமே. ஸ்காட்லாந்திலுள்ள தாத்தா வீட்டுக்குளத்தில் நான் இதே போல் பலமுறை மிதந்து விளையாடி இருக்கிறேன்!"

"ஜாக், உண்மையிலேயே இது நல்ல யோசனை. ரம்பம், சுத்தியல், ஆணி போன்றவற்றை உடனே எடுத்து வாருங்கள். முயற்சி செய்வோம்." என்றேன்.

குழந்தைகள் விரைவாகச் செயல்பட்டனர்.

கப்பலின் பின்புறத்தில் மிதந்து கொண்டிருந்த மரப் பீப்பாய்களில் நான்கைக் கீழ்த்தளத்தில் எடுத்துச் சென்றோம். ஒவ்வொன்றையும் நெடுக்குவாட்டில் இரண்டிரண்டாக அறுத்து, எட்டுத் துண்டுகளாக்கினோம். இந்த எட்டுத் துண்டுகளின் அடிப்பகுதியையும் ஒரு நீண்ட பலகையுடன் இணைத்தோம். பக்கப் பகுதிகளிலும்

பலகைகளை வைத்து ஆணிகளால் இறுக்கினோம். இந்த அரைத் தொட்டிகள் அசையாமல் இருப்பதற்காக அவற்றையும் ஆணியடித்து இணைத்தோம். ஏறத்தாழப் பயணத்துக்கு உதவும் ஒரு படகு தயாராகிவிட்டது. மிகவும் கனமாக இருந்த அந்தப் படகைச் சிரமத்துடன் நீரில் தள்ளினோம். முன்னெச்சரிக்கையாகப் படகின் ஒரு முனையில் கயிற்றைக் கட்டிப் பிடித்துக் கொண்டேன். இல்லாவிட்டால், படகு அலையால் அடித்துச் செல்லப்பட்டிருக்கும். நீர்ப்பரப்பை அடைந்த படகு ஒருபுறம் சாய்வாக மிதந்தது. எனவே, நேராக மிதப்பதற்காக அதன்மீது கனமான பொருட்கள் சிலவற்றைப் போட்டு வைத்தோம். படகு உடனே நேராக மிதக்கத் தொடங்கியது

இதையெல்லாம் செய்து முடிக்கவே மாலை நேரமாகிவிட்டது. அதனால், இன்று இனிமேல் கரைக்குப் புறப்படுவது முடியாத காரியம் என்று தோன்றியது. எனவே அன்றும் கப்பலிலேயே தங்குவது என்று தீர்மானித்தோம். காலையிலிருந்து சுறுசுறுப்பாக வேலை செய்த குழந்தைகள், இரவு உணவு உண்டவுடன் களைப்பினால் படுத்துத் தூங்கிவிட்டனர். கப்பல் எந்த நேரத்திலும் உடைந்து சிதறக்கூடும் என்று தோன்றியதால், குழந்தைகளும், மனைவியும் நீரில் மிதக்கும் லைஃப் பெல்ட் எனப்படும் மிதவை உடையை அணியும்படிச் செய்தேன்.

நல்லவேளையாக அப்படி எந்தவித அபாயமுமின்றி இரவு நகர்ந்தது.

## 2

மறுநாள் விடிவதற்கு முன் நாங்கள் எழுந்து விட்டோம். காலை நேரப் பிரார்த்தனைக்குப் பிறகு குழந்தைகளை அருகே அழைத்துக் கூறினேன்:

“கடவுள் கருணை காட்டினால், நாம் அனைவரும் பாதுகாப்பான இடத்தை அடைவோம். முதலில் கப்பலிலுள்ள விலங்குகளுக்கு உணவு அளியுங்கள். மேலும் ஒரு சில நாட்களுக்குத் தேவையான தீனியையும் அவற்றின் அருகே வைத்துவிட்டு வாருங்கள். என்றாவது ஒருநாள் நாம் அவற்றைக் கொண்டு செல்ல நேரலாம். எனவே, நமக்குக் கரையில் உடனடியாகப் பயன்படக்கூடிய பொருள்களை மட்டும் முதலில் முடிந்தவரையில் திரட்டுங்கள்.”

விரைவிலேயே துப்பாக்கிகள், வெடிமருந்து, உணவுப் பொருள்கள்,

கூடாரம் அமைக்கப் பயன்படும் தார்ப்பாய்த் துணிகள், கத்தி, கோடரி, ரம்பம், தூண்டில், இரும்புக்குடம் போன்ற பொருட்கள் மேல்தளத்திற்கு கொண்டு வரப்பட்டன. கனத்துக்காக நாங்கள் படகில் போட்டு வைத்திருந்த பொருள்களை எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக மேற்குறிப்பிட்ட பொருள்களை ஏற்றினோம்.

கோழிகள் பரிதாபமாக அலறின. எனவே, அவற்றையும் உடன் எடுத்துச் செல்ல முடிவு செய்தேன். கோழிகளையும், சேவல்களையும் படகிலிருந்து ஒரு தொட்டியில் போட்டு, மரமூடியால் மூடினேன். பறந்தோ அல்லது நீந்தியோ எப்படியும் கரை சேர்ந்துவிடும் என்ற நம்பிக்கையில் வாத்து, புறா போன்றவற்றைத் திறந்து விட்டேன்.

முதல் தொட்டியில் என் மனைவி ஏறி உட்கார்ந்தாள். ஏறுவதற்கு முன்பாகக் கனமான ஒரு சாக்குப் பையை இரண்டாவது தொட்டியில் போட்டான். ஃபிரான்ஸில் உட்கார்வதற்காக மெத்தை போடுகிறாள் என்று நினைத்தேன். மூன்றாவது தொட்டியில் ஃபிரிட்ஜும், ஆறாவது தொட்டியில் ஜாக்கும், ஏழாவது தொட்டியில் எர்னஸ்ட்டும், கடைசித் தொட்டியில் நானும் உட்கார்ந்துகொண்டோம். நான்காவது, ஐந்தாவது தொட்டிகளில் நாங்கள் சேகரித்த பொருள்கள் நிறைந்திருந்தன. நான் படகைச் செலுத்தத் தொடங்கினேன். ஆரம்பத்தில் படகு நின்ற இடத்திலேயே சுற்றிச்சுற்றி வந்தது. பிறகு ஒருவாறாக முன்னோக்கி நகரத் தொடங்கியது.

நாங்கள் புறப்பட்டதைக் கவனித்த நாய்கள் டர்க், ஃபுளோரா இரண்டும் நீரில் குதித்துப் படகின் பின்புறமாக நீந்தத் தொடங்கின. நாய்கள் சோர்வடைந்தபோது, எங்களது படகில் கட்டியிருந்த மிதவையைப் பிடித்துக் கொண்டு நீந்தின. நல்லவேளையாக அவை படகிற்குள் தாவவில்லை!

கடல் வெகு அமைதியாக இருந்தது. வானம் தெளிவாக இருந்தது. சூரியன் தகதகவென ஒளிர்ந்தது. கரையை நோக்கிப் படகு நகர்ந்து கொண்டிருந்தது. உடைந்துபோன கப்பலிலிருந்து வெளியேறிய பொருள்கள் வழியெங்கிலும் மிதந்து கொண்டிருந்தன. அதில் சேதமடையாத ஒரு பெரிய பீப்பாயும் இருந்தது. நானும் ஃபிரிட்ஜும் அதைப் பிடித்து எங்கள் படகின் பின்புறமாகக் கட்டினோம்.

நிலப்பகுதி கண்களுக்குத் தெரிந்தது. கூர்மையான பார்வை கொண்ட ஃபிரிட்ஜ், முதலில் தென்னை மரங்களைப் பார்த்தான். “ஆகா...

தேங்காய் பறித்துச் சாப்பிடலாம்!” என்றான்.

எங்கள் படகிற்கு நேராகத் தட்டுப்பட்ட கடற்கரை, பாறைகள் நிறைந்த இடமாகத் தென்பட்டது. இடதுபுறத்தில் மணல்கரை இருப்பதாகத் தோன்றியது. ஆனால், அலைகள் எங்கள் படகைப் பாறைகளின் பக்கமாக இழுத்துச் சென்றன. கடைசியில் வாத்துகள் போன வழியைப் பின்பற்றி, குறுகலான கால்வாய் ஒன்றின் வழியாக எங்கள் படகைச் செலுத்தினோம். தகுந்த ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கரை ஏறுவதற்காகப் படகை நிறுத்தினேன்.

படகு நின்றதும் பெரிய குழந்தைகள் தரையில் குதித்தனர்.

“அப்பா, தேங்காய்!” ஃபிரான்ஸிஸ் கூறினான்.

“விரைவிலேயே சாப்பிடலாம்” என்றபடி அவனை கரையிறக்கிவிட்டேன்.

எங்களுக்கு முன்பாகக் கரையேறிவிட்ட நாய்கள் எங்களைச் சுற்றிச்சுற்றி வந்து வாலாட்டிக் குதித்தன; மகிழ்ச்சியால் குரைத்தன. வாத்து, புறா போன்றவையும் எங்களைக் கண்டு மகிழ்ந்ததாகத் தோன்றியது. அருகிலிருந்த பாறைகளின் மீதிருந்த பெங்குவின் பறவைகள் குரலெழுப்பின. சிவந்த நாரைக் கூட்டமொன்று எங்களது தலைக்கு மேல் வட்டமிட்டது. இவ்வளவு பறகைள் இருக்கும் போது உணவிற்குப் பஞ்சம் வராது என்றே தோன்றியது.

முதலில் நாங்கள் பத்திரமாகக் கரையிறங்கக் கருணை புரிந்த கடவுளுக்கு நன்றி தெரிவித்துவிட்டுப் படகிலிருந்த பொருள்களைக் கரையில் இறக்கிவைக்கத் தொடங்கினோம். பிறகு வசதியான இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கூடாரம் அமைப்பதில் ஈடுபட்டோம். மெத்தைபோல் பயன்படுத்த உலர்ந்த புற்களையும், சன்னமான செடிகளையும் முடிந்த அளவுக்குச் சேகரித்து வருமாறு குழந்தைகளிடம் கூறினேன். அவர்கள் திரும்பி வருவதற்குள் கற்களைக் கூட்டி அடுப்பு ஒன்றை அமைத்துக் கொடுத்தேன். என் மனைவி ஒரு பானையில் நீரைக் கொதிக்க வைத்தாள். நான் உலர்ந்த சூப்புக் கட்டிகள் சிலவற்றை உலையில் போட்டேன். மனைவி ஃபிரான்ஸிஸின் துணையுடன் சமையலில் ஈடுபட்டாள்.

ஃபிரிட்ஜ் ஒரு துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஆற்றங்கரை ஓரமாக

வேட்டையாடக் கிளம்பினான். எர்னஸ்ட்-கடற்கரைப் பக்கமாகவும், ஜாக் பாறைகள் இருந்த பக்கமாகவும் நடந்தனர். நான் படகுடன் கட்டிக் கொண்டுவந்திருந்த இரண்டு பீப்பாய்களையும் எடுத்து வரப் புறப்பட்டேன்.

திடீரென்று ஜாக்கின் அலறல் குரல் கேட்டது. பக்கத்திலிருந்து கைக்கோடரியை எடுத்துக் கொண்டு குரல் வந்த திசை நோக்கி ஓடினேன். முழங்காளலவு நீரில் ஜாக் நின்று கொண்டிருந்தான். பெரிய கருமீன் ஒன்று அவனது கால்களைக் கவ்விக் கொண்டிருந்தது.

“சீக்கிரம் வாருங்கள் அப்பா. ஒரு பெரிய மீனை நான் பிடித்திருக்கிறேன்.” மறுபடி குரல் கொடுத்தான்.

“அப்படியோ, அதை என்னிடம் விடு.”

“அது முடியாது. அதுதான் என் காலைக் கவ்விக் கொண்டிருக்கிறது!”

நான் சிரிப்பை அடக்க முடியாமல் அவனை நெருங்கினேன். கருமீன் உடனே அவனை விட்டுத் தப்பிச் செல்ல முயன்றது. கைக்கோடரியால் அதன் முதுகில் ஓங்கி ஒரு போடுபோட்டுத் தரையில் இழுத்துவிட்டேன். ஜாக் அதைத் தனது இரண்டு கையாலும் தூக்க முயன்றான். அது ஒருமுறை வாலைச் சுழற்சி வீசியது. ஜாக் யாரோ பிடித்துத் தள்ளிவிட்டது போல் பொத்தென்று மணலில் போய் விழுந்தான். இருவருக்கும் சிரிப்பு வந்தது. பின்பு ஜாக் ஒரு கல்லை எடுத்து அதன் தலையில் போட்டுக் கொன்றான்! பிறகு அதை இழுத்துச் சென்று அவனது அம்மாவிடம் கொடுத்தான்.

“அம்மா, இங்கே பாருங்கள், எவ்வளவு பெரிய கருமீன்! கூரான பல்லால் இது என் காலைக் கடித்துத் துண்டாக்கியிருக்கும். நான் காலில் மாலுமிகளின் கால்சராயை அணிந்திருந்ததால் நல்லவேளை... தப்பித்தேன்.”

“இந்தத் தற்பெருமைதானே வேண்டாம் என்பது. நான் ஓடி வந்திருக்கவில்லையென்றால், இந்நேரம் உன் கால் துண்டாகிப் போயிருக்கும்!” நான் குறுக்கிட்டுக் கூறினேன்.

எர்னஸ்ட், கடற்கரையில் சில சிப்பிகளைக் கண்டதாகவும் கால்களை நனைக்க வேண்டாம் என்பதால் அவற்றை எடுத்து

வரவில்லையென்றும் கூறினான்.

“இப்பொழுதைய நிலையில் ஒவ்வொருவரும் நம்மால் முடிந்த வேலைகளைச் செய்ய வேண்டும். கால் நனைந்தால் என்ன, விரைவிலேயே உலர்ந்துவிடும். போய் உடனே அவற்றை எடுத்து வா!” என்று கூறினேன்.

“அது மட்டுமல்ல, பாறைகளுக்கு நடுவே உப்பு படிந்திருப்பதையும் பார்த்தேன் அப்பா!”

நான் மீண்டும் அவனைக் கடுமையாகப் பேசினேன். எழுந்து சென்ற எர்னஸ்ட் சற்று நேரத்தில் உப்பை எடுத்து வந்தான். அதில் மண் கலந்திருந்ததால் மறுபடியும் அவனைத் திட்டத் தொடங்கினேன். என் மனைவி அந்த உப்பை நீரில் கரைத்து வடிகட்டி சூப்பில் ஊற்றினாள்.

சூப் தயாரானது. ஃபிரிட்ஜ் இன்னும் திரும்பி வரவில்லை. சூப்பை ஊற்றிக் குடிக்கப் பாத்திரங்களோ, ஸ்பூன்களோ எங்களிடம் இல்லை.

“தேங்காய் ஏதாவது கிடைத்தால் அதை இரண்டாக உடைத்து சிரட்டைகளால் கரண்டி செய்யலாம்” எர்னஸ்ட் ஆலோசனை கூறினான்.

“உண்மைதான். ஆனால், அப்படி எதுவும் இல்லையே? எளிதில் கிடைக்கக்கூடிய எதையாவது சொல்!” நான் கூறினேன்.

“அப்பா.... சிப்பிகள்?”

“இது நல்ல யோசனை. உடனே போய்க் கொண்டு வாருங்கள்!” என்றேன்.

எர்னஸ்ட்டும், ஜாக்கும் ஒன்றாக ஓடினர். விரைவிலேயே நிறையச் சிப்பிகளுடன் திரும்பி வந்தனர். அதே சமயம், ஃபிரிட்ஜும் கைகளைப் பின்னால் கட்டியபடி வருத்தத்துடன் திரும்பி வந்தான்.

“ஏதாவது கிடைச்சதா?” நான் கேட்டேன்.

“ஒன்றும் கிடைக்கவில்லை!”

அவனடைய தம்பிகள் அவனுக்குப் பின்னால் சென்று, அவன் ஒளித்து

வைத்திருந்த பொருளைக் கண்டுபிடித்தனர். அவனிடம் அகூட்டி விலங்கின் குட்டி ஒன்று இருந்தது.

உடைந்த கப்பலிலிருந்து மிதந்து வந்த பெட்டிகள், பலகைகள், வேறு சில பொருட்களையும் பார்த்ததாகவும், மாலுமிகள் யாரையும் பார்க்கவில்லையென்றும் அவன் கூறினான். சற்று நேரம் கழித்து "கப்பலிலிருந்து நாம் பசுமாட்டைக் கொண்டு வந்திருக்கலாம். இந்த பிஸ்கட்டுகளைப் பாலில் தோய்த்துத் தின்றால் ருசியாக இருக்குமே" என்றான்.

"சற்றுப் பொறுமையாக இரு. நாளைக்குப் பார்க்கலாம்!" என்றேன் நான்.

ஜாக், சிப்பியைக் கத்தியால் பிளக்க முயன்றான். அவனது வெகு நேரத்திய முயற்சி பலனளிக்கவில்ல. நான் அவற்றை அவனிடமிருந்து வாங்கித் தணலில் வைத்தேன். அந்தச் சூட்டில் அவை தாமாகவே திறந்து கொண்டன. சிப்பியின் உள்ளே இருந்த இறைச்சியைத் தின்ற பிறகு, சிப்பியை சூப் குடிக்கும் கரண்டியாகப் பயன்படுத்தினோம். ஆனால், சிப்பி ஓட்டின் சூட்டைத் தாங்க முடியாமல் கைகள் கொப்பளித்தன.

எர்னஸ்ட் தான் மறைத்து வைத்திருந்த மற்றொரு பெரிய சிப்பியை வெளியே எடுத்தான். பிறகு அதில் சூப்பை ஊற்றி ஆற வைத்தான். 'இவ்வாறு தன்னலத்துடன் நடக்கக்கூடாது!" என்று அவனைக் கடிந்தேன். அந்தச் சிப்பியை நாய்களுக்கு உணவு வைக்கக் கொடுக்கும்படி கூறினேன். எனது கண்டனம் அவன் மனத்தை வருத்தியது. மௌனமாக அதைக் கொடுத்து விட்டான். நாய்கள் கண்மூடித் திறப்பதற்குள் சூப்பைக் குடித்து முடித்தன. இருந்தும் அவற்றின் பசியடங்கவில்லை. நாங்கள் எல்லாரும் சூப் குடிப்பதில் மூழ்கியிருந்தபோது, நாய்கள் அகூட்டிக் குஞ்சை இழுத்துச் சென்று துண்டு துண்டாகக் கிழித்தன.

ஃபிரிட்ஜின் கோபம் எல்லை கடந்தது. அதனால் துப்பாக்கியின் குழாய்ப்பகுதி வளையும் அளவிற்கு நாய்களைத் துப்பாக்கியால் ஓங்கி அடித்தான் அவன். அடி வாங்கிய நாய்கள் அலறியபடியே ஓடின. பின் கண்களிலிருந்து மறைவது அவற்றின் மீது கற்களை வீசியெறிந்தான். அவனுடைய ஆத்திரத்தையும், சிறிய குழந்தைகளுக்கு மத்தியில் அவன் இவ்வாறு முரட்டுத்தனமாக நடந்து கொண்டதையும் நான் கண்டித்தேன். மன்னிப்பு கேட்ட அவனிடம் நாய்களை உடனே

அழைத்து வருமாறு கூறினேன்.

நாய்களுடன் திரும்பி வந்தபோது அவனது கண்களில் நீர் நிறைந்தது: “நான் இவ்வளவு அடித்த பிறகும் நாய்கள் என்னைக் கண்டவுடன் என் கைகளை நக்கிக் கொடுத்தன. நான் நீட்டிய பிஸ்கட்டுகளைக் கூட அவை முதலில் கவனிக்கவில்லை!” என்றான்.

நாங்கள் சாப்பாட்டை முடித்துக் கொண்டபோது மாலை நேரமாகிவிட்டிருந்தது. கோழிகளும் வாத்துகளும் எங்களையே சுற்றிச் சுற்றி வந்தன. என் மனைவி சாக்குப் பையிலிருந்த தானியத்தை எடுத்து அவற்றுக்கு முன்னால் இறைத்தாள். இந்தச் சாக்குப் பையைத்தான் அவள் கப்பலிலிருந்து எடுத்து வந்திருந்தாள்.

“கோழியும், வாத்தும் பிஸ்கட்டுகளின் தூளை விரும்பிக் சாப்பிடுமே. அதையே போடலாம். இந்தத் தானியங்களை விதைக்க முடிந்தால் பிற்பாடு அறுவடை செய்யலாம்.” என்றேன் நான்.

அருகிலிருந்த பாறைகளின் இடுக்குகளில் புறாக்கள் ஒண்டிக் கொண்டன. ஆற்றங்கரையை ஒட்டிய நாணல் புதர்களுக்குள் வாத்துகள் மறைந்து கொண்டன. இந்தத் தீவில் மாலை நேரம் என்பதே உண்மையில் இல்லை. பகல் நேரம் சட்டென்று இரவாக மாறியது. இதைப் பார்த்துக் குழந்தைகள் வியப்படைந்தனர். நிலநடுக்கோட்டை ஒட்டியுள்ள பகுதிகளில் இயற்கை இப்படித்தான் இருக்கும் என்று நான் அவர்களுக்கு விளக்கினேன். பகல் பொழுது மிகவும் வெப்பமாக இருந்தது போலவே, இரவு நேரம் மிகவும் குளிராக இருந்தது. ஒருவரை ஒருவர் தழுவியபடி நாங்கள் உறங்கிப் போனோம். அந்தத் தீவில் எங்களது முதல் நாள் இரவு எந்தவிதமான சிக்கலும் இல்லாமல் இவ்வாறு கழிந்தது!

## 3

சேவல் கூவியதும் கண் விழித்தேன். மேற்கொண்டு என்ன செய்வது என்பது பற்றி, முதல் வேலையாக மனைவியுடன் பேசினேன். காணாமற்போன மாலுமிகளைத் தேடிக் கண்டுபிடிப்பதே முதல் வேலையாக இருக்கட்டும் என்று இறுதியில் தீர்மானித்தோம். மாலுமிகளைத் தேடுவதுடன் தீவைச் சுற்றிப் பார்த்ததாகவும் இருக்கட்டும். இதற்காக நானும் ஃபிரிட்ஜும் தீவுக்குள் செல்வது

என்றும், மனைவியும் மற்ற குழந்தைகளும் கூடாரத்திலேயே தங்குவது என்றும் முடிவு செய்தோம்.

அந்தக் குழந்தைகளும் எங்களுடன் வரவிரும்பினர். "இந்தச் சமயம் வேண்டாம். எங்களது பயணம் நீண்டதாகவும் தொல்லைகள் நிறைந்ததாகவும் இருக்கலாம். அவற்றை நானும் ஃபிரிட்ஜும் தாங்கிக் கொள்வோம். ஃபுளோராவை உங்களுக்குக் காவலாக விட்டுவிட்டு, டர்க்கை மட்டும் எங்களுடன் அழைத்துச் செல்கிறோம்!" என்றேன்.

ஒரு பெரிய துப்பாக்கி, இரண்டு கைத்துப்பாக்கிகள், கைக்கோடரி, தண்ணீர்க் குடுவை, பிஸ்கட்டுகள் போன்றவற்றை எடுத்துக் கொண்டு நாங்கள் புறப்படத் தயாரானோம்.

காலை உணவுக்குப் பிறகு மற்ற குழந்தைகளை அழைத்து எச்சரித்தேன்: "உங்களது துப்பாக்கிகளைப் பத்திரமாகவும், தயாராகவும் வைத்திருங்கள். படகின் அருகிலேயே இருங்கள். ஏதாவது நெருக்கடி ஏற்பட்டால் மட்டும் இடம் மாறுங்கள். அம்மா சொல்வதை மீறி எதையும் செய்யாதீர்கள்!"

புறப்பட்டபோது சற்றுத் தயக்கம் தோன்றியது. கண்களில் நீர் சுரந்தது. முன்பின் பழக்கமில்லாத இந்தத் தீவில் எப்படிப்பட்ட சோதனைகள் காத்திருக்கிறதோ? பிறகு மனத்தைத் தேற்றிக் கொண்டு நடக்கத் தொடங்கினோம். விரைவிலேயே நாங்கள் அங்கிருந்த ஆற்றங்கரையை அடைந்தோம்.

ஆற்றின் கரைகள் உயரமாகவும் செங்குத்தாகவும் இருந்தன. எனவே கரையோரமாக நீண்ட தூரம் நடந்த பிறகு ஆற்றைக் கடந்தோம். மறுகரையில் நெடுக வளர்ந்து, உலர்ந்துவிட்ட புற்களின் நடுவே நடக்கத் தொடங்கினோம். திடீரென்று எங்களுக்குப் பின்புறத்திலிருந்து புற்களின் ஊடாகச் சலசலப்புக் கேட்டது.

நாங்கள் திடுக்கிட்டு நின்றோம். ஃபிரிட்ஜ் துப்பாக்கியை உயர்த்தி அந்தத் திசையில் குறிபார்த்துக் காத்திருந்தபோது, எங்கள் டர்க் வந்து எதிரே நின்றது.

"நேற்றைய உன்னுடைய கோபமும், இப்பொழுது ஏற்பட்ட பயமும் எப்படி இருக்கின்றன? நீ அவசரப்பட்டிருந்தால் என்ன நடந்திருக்கும் பார்த்தியா? இதனால்தான் 'ஆத்திரப்படுபவனுக்கு புத்தி மட்டு'

என்கிறார்கள்!” ஃபிரிட்ஜிடம் நான் கூறினேன்.

பேசிக் கொண்டே நடந்த நாங்கள் மீண்டும் கடற்கரைக்கு வந்து சேர்ந்தோம். அந்தத் தீவின் இயற்கை அழகு மனத்தைக் கவர்ந்தது. சுற்றுமுற்றும் பார்த்தோம். மனிதர்களின் காலடிச் சுவடுகள் எதுவும் கண்களுக்குத் தென்படவில்லை. “அப்பா, நம்மை விட்டுவிட்டு ஓடிப் போனவர்களக்காக நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?” ஃபிரிட்ஜ் கேட்டான்.

“அதற்குப் பல காரணங்கள் உண்டு. முதல் காரணம், தீமை செய்தவர்களுக்குப் பதிலாகதீமை செய்வது கிறிஸ்தவ மதமாகாது. இரண்டாவது, இப்பொழுது அவர்கள் நமக்கு உதவி செய்யக்கூடும்; அல்லது அவர்களுக்கு நம்முடைய உதவி தேவைப்படலாம். ஏனென்றால் அவர்கள் கப்பலிலிருந்து எந்தப் பொருளையும் எடுக்காமல் புறப்பட்டுப் போயிருக்கிறார்கள்!”

“நாம் இப்படிச் சுற்றிக் கொண்டிருப்பதற்குப் பதிலாகக் கப்பலுக்குப் போனால் மற்ற விலங்குகளையாவது காப்பாற்ற முடியுமே?”

“உண்மைதான் ஃபிரிட்ஜ். பல கடமைகள் ஒரே நேரத்தில் எதிர்ப்பட்டால், மிக முக்கியமானதையே முதலில் செய்ய வேண்டும். மனித உயிர்களைக் காப்பாற்றுவது என்பது மிருகங்களைக் காப்பாற்றுவதைவிட உயர்ந்தது இல்லையா?” நான் கேட்டேன்.

கடற்கரையிலிருந்து நாங்கள் வேறு வழியாகத் திரும்பி மீண்டும் தீவிற்குள் சென்றோம். இரண்டு மைல் தூரத்தைக் கடந்த போது காடு ஒன்று தென்பட்டது. அங்கிருந்த சிறிய ஓடையின் கரையில் சற்று நேரம் ஓய்வெடுத்தோம். சுற்றிலும் பலவகையான வியப்பிற்குரிய பறவைகள் கூவியும், பாடியும் இரைச்சலிட்டும் பறந்தன. ஒவ்வொரு பறவையின் இறக்கைகளும் வெவ்வேறு வண்ணத்திலிருந்தன. ஒவ்வொன்றும் அழகழகான தோற்றத்துடன் மனத்தைக் கவர்ந்தது.

தொலைவில் மரக்கிளை ஒன்றில் குரங்கு தென்படுவதாக நினைத்த ஃபிரிட்ஜ் அதை நோக்கி நடந்தான். மேற்புறம் பார்த்தவாறே நடந்த அவனது கால்களை ஏதோ ஓர் உருண்டையான பொருள் இடறியது. அதைக் கையில் எடுத்துக் கொண்டு, “இது ஏதோ பறவையின் கூடுதானே அப்பா?” என்று கேட்டான்.

“இல்லை ஃபிரிட்ஜ். மேற்புறத் தோல் சிதைந்து நார்கள் உரித்துபோன ஒரு தேங்காய்தான் இது. இந்த நார்களைச் சரியாக உரித்து உடைத்துப் பார்த்தால் உள்ளே தேங்காய் இருக்கும்.”

இதைத் தொடர்ந்து அவனுக்கு ஏற்பட்ட சந்தேகங்கள் கேள்விகளாக வெளிப்படவே, நான் தேய்காயின் அமைப்பு மற்றும் இயல்புகளை விளக்கினேன். காட்டிற்குள் நடந்து கொண்டே இருந்தோம். நாங்கள் எதிர்பார்த்ததைவிட அந்தக் காடு மிகவும் பெரியதாகவே இருந்தது. ஃபிரிட்ஜ் வாய் ஓயாமல் கேள்விகள் கேட்டுக் கொண்டே வந்தான். நானும் இயன்றவரை அவனது கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டே வந்தேன்.

வழியில் கிடைத்த மற்றொரு இளநீர் எங்களுக்கு மகிழ்ச்சியூட்டியது. தொடர்ந்து நடந்தோம். முடிவில் காட்டின் நெருக்கம் குறையத் தொடங்கிக் கடற்கரை கண்களுக்குத் தெரிந்தது.

விசித்திரமான ஒரு மரம் ஃப்ரிட்ஜைக் கவர்ந்தது. சுரைக்காயைப் போல் பெரிய பெரிய காய்கள் அதன் அடிமரத்திலிருந்தே காய்த்திருந்தன.

“இந்தக் காயின் தோல், குடுக்கை போன்ற பலவிதப் பாத்திரங்களைச் செய்வதற்குப் பயன்படும். பழங்குடி இனத்தவர் இந்தத் தோலில் நீரைக் கொதிக்க வைப்பார்கள்!” நான் கூறினேன்.

“இந்தப் பழத்தைச் சாப்பிட முடியாதா?”

“சாப்பிடலாம். ஆனால், எந்தவிதமான சுவையும் இருக்காது!”

“இதில் எப்படி நீரைக் கொதிக்க வைக்கிறார்கள் பழங்குடி மக்கள்? தோல் தீப்பிடித்து எரிந்துவிடாதா?”

“காயைத் தீயில் வைக்கமாட்டார்கள்.”

“பிறகு எப்படி அப்பா நீரைக் கொதிக்க வைக்க முடியும்? நீங்கள் சொல்வது ஏதோ மந்திர வித்தை போல் உள்ளதே?”

“மந்திரமுமில்லை; மாயமுமில்லை. நாம் பொதுவாகச் சிந்தித்து எதற்கும் விடை தேடுவது இல்லை! தங்களுக்கு விளங்காத ஒரு விஷயத்தை உடனே அற்புதம், மந்திரம் என்றெல்லாம் கூறி மக்கள் ஒதுக்கி

விடுகிறார்கள்.”

“சொல்லுங்கள் அப்பா...”

“அதாவது, வம்பு எதற்கு என்பதற்காகப் பெரியவர்கள் வார்த்தையை அப்படியே கண்ணைமூடி ஏற்றுக் கொள்வது ஒருவகையில் சிந்திக்காததற்குச் சமம்தான். சரி, கேட்டுக் கொள். இந்தக் காயை இரண்டாக வெட்டுவார்கள். ஒவ்வொரு பாதியிலும் ஒரு கைப்பிடியைப் பொருத்துவார்கள். பிறகு அதில் வேக வைக்க வேண்டிய மீனையோ, இறைச்சியையோ போட்டு அதன் மீது பழுக்க காய்ந்த தணல் போன்ற கற்களைப் போட்டு மூடுவார்கள். இப்படித்தான் இந்தக் குடுவையைப் பயன்படுத்துவார்கள்!” விளக்கினேன்.

ஃபிரிட்ஜ், கத்தியின் உதவியால் ஒரு காயை இரண்டாகப் பிளக்க முயன்றான். கத்தி மழுங்கியதே தவிர, காய் பிளவுபடவில்லை. நான் ஒரு கயிற்றை எடுத்துக் காயின் நடுவே குறுக்காகப் போட்டுச் சுற்றி முறுக்கினேன். பிறகு கயிறின் சிராய்ப்பு விழுந்த பகுதியில் கத்தியால் கீறினென். நெடுநேரம் இப்படி செய்த பிறகு காய் இரண்டாகப் பிளந்தது. ஃபிரிட்ஜ் வியப்படைந்தான்.

“அனுபவம்தான் உதவுகிறது” என்றேன்.

பிற்பாடு இதேபோல் நாங்கள் நிறைய காய்களை அறுத்துப் பலவகையான பாத்திரங்களைச் செய்தோம். அவற்றின் வடிவம் உலர்ந்து சுருங்கிக் கோணல்மாணலாக மாறி விடாமலிருக்க அதற்குள் மணலை நிரப்பி வெயிலில் காய வைத்தோம். திரும்பி வரும்போது அவற்றை எடுத்துக் கொள்ளலாம் என்று கருதி அங்கு சில அடையாளங்களையும் வைத்துவிட்டுப் புறப்பட்டோம்.

அந்தத் தீவிலிருந்த மலையின் ஒரு பகுதி கடலை ஊடுருவியிருந்தது. கடுமையான முயற்சிக்குப் பிறகு மலையின் உச்சியை அடைந்தோம். ஏறிய பிறகு எங்களுக்குத் தென்பட்ட காட்சி மிகவும் மகிழ்ச்சியளித்தது. பச்சைப் பசேல் என்று வளம் நிறைந்த நிலப்பகுதி ஒருபுறமும், வெள்ளை வெளேர் நிறத்தில் நுரையுடன் கடற்கரைப்பரப்பும், கருநீல நிறத்தில் கடல்பரப்பும் அழகாகத் தெரிந்தன. இருப்பினும் மாலுமிகளின் சுவடே எங்கும் இல்லாதிருந்தது, வருத்தத்தையே ஏற்படுத்தியது.

மலையிலிருந்து இறங்கிச் சற்றுத் தூரத்தில் தென்பட்ட

தென்னந்தோப்பை நோக்கி நடந்தோம். வழியில் பலவகையான புல் செடிகளும் விதவிதமான குச்சிகளும் நிறைந்த சதுப்பு நிலப்பகுதி தென்பட்டது. எதற்கும் கைவசம் இருக்கட்டும் என்று ஒரு குச்சியை வெட்டினேன். அந்தக் குச்சியின் வெட்டுப்பட்ட பகுதியிலிருந்து வெண்ணிற நீர் சுரந்தது. சுவைத்துப் பார்த்தேன். இனித்தது. அப்போது தான் நாங்கள் கரும்புத் தோட்டத்தில இருப்பதை உணர்ந்தோம்.

எனக்கு முன்புறமாக நடந்து கொண்டிருந்த ஃபிரிட்ஜிடம், “நீயும் ஒரு குச்சியை வெட்டி வைத்துக்கொள்!” என்றேன்.

அவனும் ஒரு குச்சியை வெட்டியெடுத்துத் தலையின் மேற்புறமாகச் சுழற்றினான். கண்ணில் தென்பட்ட சிறுசிறு பாம்புகளைப் பயமுறுத்துவதற்காகத்தான் அப்படிச் சுழற்றினான். அதனால் அவனது கையிலும், முகத்திலும் சாறு வடிந்தது. சுவைத்துப் பார்த்த பிறகு அது கரும்பு என்பதை அவனும் தெரிந்துகொண்டான். உடனே வீட்டிலுள்ள மற்றவர்களுக்குக் கொடுப்பதற்காக பத்துப் பன்னிரண்டு கரும்புத் தண்டுகளை வெட்டியெடுத்து ஒரு கட்டாகக் கட்டினான்.

நாங்கள் மீண்டும் தென்னந்தோப்பை நோக்கி நடந்தோம். டர்க்கின் குரைப்பையும் எங்களது குரலையும் கேட்டுத் திடுக்கிட்ட குரங்குகள் சரசரவென்று தென்னை மரங்களின் மீது ஏறின. சற்று உயரத்துக்குச் சென்றதும் அவை எங்களைப் பார்த்துப் பற்களைக் காட்டி உறுமின. ஃபிரிட்ஜ் உடனே கரும்புக்கட்டைக் கீழே போட்டுவிட்டுத் துப்பாக்கியை எடுத்தான்.

“என்ன செய்யப் போகிறாய் ஃபிரிட்ஜ்? இதில் ஏதாவது ஒரு குரங்கைக் கொல்வதால் நமக்கு என்ன பிரயோஜனம்?” நான் கேட்டேன்.

“ஏன் அப்பா, நான் அவற்றைச் சுடக்கூடாதா? குரங்குகள் எல்லாம் அருவருக்கத்தக்க உயிர்கள் இல்லையா?”

“அவை உறுமுவதால் உனக்குக் கோபமா? கொல்வதற்குப் பதிலாக அவற்றை மற்றொரு நல்ல வழியில் நாம் பயன்படுத்த முடியும். எப்படியென்று யோசித்துப் பார்!”

பிறகு நான் சில கற்களைப் பொறுக்கி அவற்றை ஒவ்வொன்றாகக் குரங்குகளை நோக்கி வீசியெறிந்தேன். நான் வீசிய கற்கள் தென்னை மரத்தின பாதி உயரத்தைக் கூடத் தாண்டவில்லை. இருப்பினும்

குரங்குகள் ஆத்திரமடைந்து பதிலுக்குத் தேங்காய்களைப் பறித்து எங்களை நோக்கி எறிந்தன. அந்தத் தேங்காய் வீச்சுகளிலிருந்து எங்களது தலைகளைக் காத்துக் கொள்வது பெரும் பாடாயிற்று!

ஒருவாறு எங்களுக்கிடையே நிகழ்ந்த இந்தப் போர் ஓய்ந்தது. எங்களால் சுமக்க முடிந்த அளவு தேய்காய்களைச் சேகரித்தோம். பின்னர் அமைதியான ஓர் இடத்தில் உட்கார்ந்து கைக்கோடரியால் தேங்காயை வெட்டி முதலில் நீரைக் குடித்தோம். தேய்காய்த் தண்ணீர் அவ்வளவு ருசியாக இல்லை. பிறகு கத்தியால் உட்புற வழுக்கையைச் சுரண்டிக் கரும்புச் சாற்றுடன் கலந்து சாப்பிட்டோம். அது சுவையான விருந்தாக அமைந்தது,

நீண்ட காம்புகளையுடைய தேங்காய்கள் சிலவற்றை ஒன்றுடன் ஒன்று முடிந்து தோளில் போட்டுக் கொண்டேன். கரும்புக்கட்டை ஃபிரிட்ஜ் எடுத்துக் கொண்டான். நாங்கள் இருவரும் எங்களது கூடாரத்தை நோக்கி நடக்கத் தொடங்கினோம்.

## 4

கரும்புக்கட்டு விரைவிலேயே கனக்கத் தொடங்கியது.

“போகிற வழியில் தாகத்துக்காகப் பல இடங்களில் கரும்புச் சாற்றை நாமே பருக வேண்டியிருக்கும். அதனால் விரைவிலேயே சுமை குறைந்துவிடும்” என்று ஆறுதல் கூறினேன்.

வழியில் ஒரு தடவை நான் கரும்புச் சாற்றை உறிஞ்சும் விதத்தைக் கண்டு ஃபிரிட்ஜ் வியப்படைந்தான். கரும்பில் கணுவிற்கு அருகே காற்றுப் புகுமாறு ஒரு சிறு துளையிட்ட பிறகு, கீழ்ப்புறத்தில் வாயை வைத்து உறிஞ்சினால் விரைவாகச் சாறை உறிஞ்சலாமென்று அவனுக்கு உணர்த்தினேன். அதன் பிறகு வழியில் கரும்புகள் காலியாகும் வேகத்தைப் பார்த்து அவன் வியப்பு அடைந்தான். மற்றவர்களிடம் கொடுப்பதற்குக் கரும்புகள் மீதம் இருக்காதோ என்றுகூடப் பயந்தான்.

“வெட்டிய பிறகு நீண்ட நேரம் வெயிலில் இருந்தால் கரும்புச்சாறு புளிப்படைந்து விடும்!” என்றேன்.

“கரும்பு தீர்ந்தாலும் இளநீர் உள்ளது. அதைப் போதுமான அளவுக்குத் தகரக் குடுவையில் ஊற்றி வைத்திருக்கிறேன்.”

“இப்பொழுது குடுவையைத் திறந்த பார். அது புளித்துப் போயிருக்கும்.”

மூடியைத் திறந்தவுடன் குப்பென்று குடுவையிலிருந்து நுரையுடன் இளநீர் வெளிப்பட்டது. கொஞ்சம் எடுத்து நாக்கில் விட்டுச் சுவைத்துப் பார்த்துவிட்டு “மதுவைப் போல் இருக்கிறது!” என்றான்.

“இதேபோலத்தான் கரும்புச் சாறும், நீரில் கலந்த தேனும் விரைவில் புளித்துவிடும். அதிகமாகப் புளித்துப் போனால் காடியாக மாறிவிடும்” என்று விளக்கினேன்.

நாங்கள் குடுவைப் பாத்திரங்களைச் செய்து வைத்திருந்த இடத்தை அடைந்து, அவற்றை எடுத்துப் பையில் போட்டுக் கொண்டோம். மறுபடியும் நாங்கள் காட்டுப் பகுதியை அடைந்தபோது, டர்க் ஒரு குரங்குக் கூட்டத்தின் மீது பாய்ந்தது. நாங்கள் டர்க்கைத் திரும்ப அழைப்பதற்குள் ஒரு பெண் குரங்கைப் பிடித்து அதன் உடம்பைக் கிழித்துவிட்டது. அதனுடைய குற்றி வீறிட்டு அலறியபடியே பக்கத்திலிருந்த புல் பரப்பிற்குள் ஓடியது. ஃபிரிட்ஜ் நாயை இழுத்து வருவதற்காக ஓடினான். அதற்குள் நாய், குரங்கை சாப்பிடத் தொடங்கியிருந்தது. ஆனால், ஃபிரிட்ஜைக் கண்டு நடுங்கிய குரங்குக் குட்டி அவனுடைய தோள் மீது தாவித் தலைமுடியை இறுக்கிப் பிடித்துக் கொண்டது.

அவனுடைய மிரட்டலோ கூச்சலோ குரங்கு குட்டியைப் பயப்படுத்தவில்லை. நான் குரங்குக் குட்டியின் அருகே சென்று, அதன் முதுகை வருடியபடி சாப்பிடுவதற்குக் கொடுத்தேன். ஒரு கணம் தயங்கிய பிறகு, அது என்னுடைய கைக்கு வந்தது. ஃபிரிட்ஜ் அதை வளர்க்க விரும்பினான். நானும் அதற்கு ஒப்புக்கொண்டேன்.

குரங்குக் கறியைப் தின்பதில் டர்க் தீவிரமாக ஈடுபட்டிருந்ததால், நாங்கள் புறப்படத் தொடங்கினோம். அரை மைல் தூரம் செல்வதற்குள் டர்க் வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டது. அதன் நடவடிக்கைக்காக நாங்கள் டர்க்கைத் திட்டினோம். ஆனால், அதை டர்க் உணர்ந்து கொண்டதாகத் தெரியவில்லை!

டர்க்கைத் திரும்பவும் பார்த்தவுடன் குரங்குக்குட்டி ஃபிரிட்ஜை இறுகப்

பற்றிக் கொண்டது. உடனே அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. நாயின் கழுத்தைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டினான். குரங்குக் குட்டியின் கையில் கயிறின் மறுமுனையைக் கொடுத்து நாயின் மீது உட்கார வைத்தான். நாய் ஒரு விநாடி ஃபிரிட்ஜையும் குரங்கையும் மாறிமாறிப் பார்த்துவிட்டு குரங்கை சுமந்தபடி நடக்கத் தொடங்கியது.

குரங்குகளின் பழக்க வழக்கங்களைக் குறித்து பேசியபடி நாங்கள் ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தோம். மறுகரையில் ஃபுளோராதான் முதன் முதலாக எங்களை வரவேற்றது. இப்பொழுது ஃபுளோராவுடன் சேர்ந்து கொண்டு டர்க்கும் குரைத்தது. உடனே குரங்குக் குட்டி பயந்து நடுங்கியபடி மீண்டும் ஃபிரிட்ஜின் தோளைத் தொற்றிக் கொண்டு நகராமல் இருந்தது.

குடும்பத்தினர் எங்களை வரவேற்க காத்திருந்தனர். சிறிய குழந்தைகள் குரங்குக் குட்டியைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தனர். தொடர்ந்து கேள்வி மேல் கேள்விகளாகக் கேட்டனர்.

"கடவுளின் கருணையால் நாம் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டோம். ஆனால், நம்முடைய நோக்கம் நிறைவேறவில்லை. காணாமல்போன மாலுமிகளின் எந்தத் தடயத்தையும் காண முடியவில்லை!" என்று மனைவியிடம் கூறினேன்.

"அப்படியானால், கடவுளின் விருப்பப்படியே நடக்கட்டும். இனிமேல் அவர்களைப் பற்றிக் கவலைப்படுவதால் எந்தவிதப் பலனும் இல்லை. சரி, உங்களது சுமைகளைக் குழந்தைகளிடம் கொடுங்கள்!" என்றாள்.

ஜாக் என்னிடமிருந்த துப்பாக்கியையும், எர்னஸ்ட் தேங்காய்களையும், ஃபிரான்ஸிஸ் குடுக்கைகளையும், என் மனைவி என்னுடைய பையையும் வாங்கிக் கொண்டனர். ஃபிரிட்ஜ், தன்னுடைய துப்பாக்கியை எர்னஸ்டிடம் கொடுத்தான். ஆனால், அவனோ அம்மா தேங்காய்களை எடுத்துக் கொண்ட பிறகே அவனிடமிருந்து துப்பாக்கியை வாங்கினான்.

உடனே ஃபிரிட்ஜ், எர்னஸ்டிடம் "நீ முதலில் அம்மாவிடம் கொடுத்தவை தேங்காய்கள்!" என்றான்.

"அடக்கடவுளே... அப்படியானால் அம்மா, அதை என்னிடம் கொடுங்கள், துப்பாக்கியுடன் அதையும் சேர்த்தே எடுத்து வருகிறேன்!"

என்றான் எர்னஸ்ட்.

"வேண்டாம். வீனாக உனக்குச் சிரமம் ஏன்" என்றபடி தேய்காய்களை அம்மாவே வைத்துக் கொண்டாள்.

உடனே எர்னஸ்ட், "என் கையிலிருக்கும் இந்தக் குச்சிகளை எறிந்து விடலாம். அப்படியானால் துப்பாக்கி கனமாகத் தெரியாது!" என்றான்.

"அதெல்லாம் குச்சிகள் இல்லை, கரும்புகள்!" என்று குறுக்கிட்டான் ஃபிரிட்ஜ். உடனே அவனது தம்பிகள் மகிழ்ச்சியால் கும்மாளமிட்டனர். ஃபிரிட்ஜ் எல்லாருக்கும் கரும்பைப் பங்கிட்டுக் கொடுத்ததுடன், அதை எப்படி உறிஞ்சுவது என்பதையும் கற்றுக் கொடுத்தான்.

நாங்கள் கூடாரத்தை அடைந்தபோது அருமையான உணவு காத்திருந்தது. நடுவே தணல் எரிந்து கொண்டிருந்தது. தணலின் இருபுறமும் இரு கவட்டைக் குச்சிகளை ஊன்றி, அதன் மேல் குறுக்காக ஒரு குச்சியைப் போட்டு அதில் பல வகையான மீன்களைச் சுத்தப்படுத்தி வேக வைத்திருந்தாள் என் மனைவி. இதேபோல் மற்றொரு பகுதியில் வாத்துக்கறி வெந்து கொண்டிருந்தது. வாத்துக்கறியிலிருந்து வடியும் கொழுப்பு, கீழேயிருந்த சிப்பிகளின் மீது சொட்டிக் கொண்டிருந்தது. இரும்புப் பானை நிறைய சூடான சூப் இருந்தது. நாங்கள் எடுத்து வந்திருந்த பெட்டிகளில் சீஸ் எனப்படும் பாலடைக்கட்டி இருந்தது. சோர்வுடன் வந்த எங்களுக்கு இவை உற்சாகமூட்டின. இருந்தாலும் எனக்கு ஒரு விதத்தில் கவலை ஏற்பட்டது. மனைவியிடம் கேட்டேன்: "நம்முடைய வாத்துகளில் ஒன்றையோ, இரண்டையோ கொன்று விட்டாயே? நான் அவற்றை வளர்த்து ஒரு பண்ணையாக்க வேண்டுமென்று நினைத்திருந்தேன்!"

"கவலைப்படாதீர்கள். அது நம்முடைய வாத்து அல்ல; எர்னஸ்ட் கடற்கரையிலிருந்து பிடித்து வந்த வாத்து!" என மனைவி ஆறுதல் கூறினாள்.

"அம்மா... வாத்து அல்ல, அதன் பெயர் பெங்குவின்!" என்று திருத்தினான் எர்னஸ்ட்.

"சரி மீதிப் பேச்சை அப்புறம் வைத்துக் கொள்ளலாம். எர்னஸ்டின் கண்கள் தேங்காயின் மீதே பதிந்திருக்கின்றன. முதலில் அதை அவனுக்குக் கொடுங்கள்!" என் மனைவி கூறினாள்.

ஃபிரிட்ஜ் தேங்காய்களை உரித்து, வெட்டிக் குழந்தைகளுக்குக் கொடுத்தான். குழந்தைகள் மறக்காமல் குரங்குக் குட்டிக்கும் கொஞ்சம் தேங்காய் கொடுத்தனர்.

நாங்கள் சாப்பிடத் தொடங்கினோம். ஒவ்வொருவரும், அன்று அவரவர் செய்த சாகசங்களைக் கூறினர். மீன்கள் மிகவும் சுவையாக இருந்தன. பெங்குவினின் இறைச்சி மிக உலர்ந்து வற்றியது போல் கடினமாக இருந்தது. அதை அதிகமாக யாரும் விரும்பவில்லை.

சாப்பாட்டின் இறுதிக் கட்டத்தில் “இளநீர் மதுவை எல்லாருக்கும் வழங்கிவிடலாமா?” என்ற கேட்டான் ஃபிரிட்ஜ்.

“அப்படியானால் முதலில் நீ குடித்துப் பார்த்துவிட்டுச் சொல்!” என்றேன்.

கொஞ்சம் எடுத்துக் குடித்த உடனே முகம் சுளித்தான். “காடியாகி விட்டது!” என்றான்.

“எதிர்பார்த்ததுதான். பரவாயில்லை. பெங்குவின் இறைச்சியுடன் அதை ஊற்றிச் சாப்பிட்டால் நன்றாக இருக்கும்!” என்றேன்.

எல்லோரும் புளித்துக் காடியான இளநீரை இறைச்சியில் ஊற்றிச் சாப்பிட்டோம்.

சாப்பிட்டு முடித்தபோது இருள் கவியத் தொடங்கியது. என் மனைவி நேற்றைக் காட்டிலும் இன்று உலர்ந்து புற்களை அதிகமாகச் சேகரித்திருந்தாள். எனவே, முதல் நாளைவிட படுக்கை மேலும் மெத்தென்று இருந்தது.

முதல் நாள் போலவே கோழிகள் கூடார உச்சியிலும், வாத்துகள் புதரிலும் சென்று ஒண்டிக் கொண்டன. ஃபிரிட்ஜும், ஜாக்கும் குரங்குக்குட்டியைத் தங்களுக்கு மத்தியில் படுக்க வைத்துக் கொண்டனர்.

நாங்கள் படுத்த சற்று நேரத்திற்கெல்லாம் கோழிகளின் கூவலும் நாய்களின் தொடர்ந்த குரைப்பும் என்னை எழுப்பிவிட்டன. மனைவியும் ஃபிரிட்ஜும் என்னுடன் எழுந்தனர். துப்பாக்கியை எடுத்துக்கொண்டு வெளியே ஓடினோம்.

எங்களது இரண்டு நாய்களையும் நரிக்கூட்டம் ஒன்று சூழ்ந்திருப்பது நிலவொளியில் தெளிவாகத் தெரிந்தது. தைரியம் மிகுந்த நாய்கள் ஏற்கனவே மூன்று நான்கு நரிகளைக் கொன்றுவிட்டிருந்தன. எனவே மற்ற நரிகள் நாய்களை வட்டமாகச் சூழ்ந்து கொண்டிருந்தன. நரிகள், நாய்களின் கழுத்தை நெரிக்கும் வாய்ப்பை எதிர்நோக்கிக் காத்திருந்தன.

ஃபிரிட்ஜும் நானும் குறிபார்த்துச் சுட்டோம். இரண்டு நரிகள் இறந்து விழுந்தன. இரண்டு நரிகள் காயமடைந்தன. மற்றவை ஓட்டம் பிடித்தன. டர்க்கும், ஃபுளோராவும் காயம்பட்ட நரிகளின் மீது பாய்ந்து அவற்றைத் துண்டு துண்டாகக் கிழித்தன.

நாங்கள் மீண்டும் கூடாரத்திற்குள் வந்தோம். இத்தனை ஆரவாரச் சத்தத்திலும் குழந்தைகள் கண் விழிக்காமல் அவர்கள் பாட்டுக்குத் தூங்கி கொண்டிருந்தனர். மறுநாள், தான் கொன்ற நரியை, தனது தம்பிகளிடம் காட்டுவதற்காக ஒரு பாறை மீது போட்டு வைத்தான் ஃபிரிட்ஸ். பெரிய நரியை, நாய்களுக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டோம். அதன்பிறகு எந்த விதத் தொல்லையும் இல்லாமல் நாங்கள் படுத்துத் தூங்கினோம்.



# 5

மறுநாள் காலையில் கண் விழித்தவுடன், அன்று மேற்கொள்ள வேண்டிய பணிகள் குறித்துப் பேசினேன். உடைந்த கப்பலிலுள்ள மிருகங்கள் உட்படப் பயனுள்ள பொருள்களை எடுத்து வருவது முக்கியமானதாகத் தோன்றியது. இரண்டாவதாக, அந்தத் தீவில் நிலையான ஒரு வசிப்பிடத்தை ஏற்படுத்துவதும் முக்கியம். எனவே, நானும் ஃபிரிட்ஜும் அன்று கப்பலுக்குச் சென்று வருவது என்று தீர்மானித்தோம்.

“வெயில் உடம்பில் உறைப்பது வரை தூங்குவதா!” என்றபடி குழந்தைகளை எழுப்பினேன். ஃபிரிட்ஜ்தான் முதலில் எழுந்தான். உடனே இரவில் தான் கொன்றுவிட்ட நரியைப் பார்க்க வெளியே ஓடினான். நரியின் உடலை எடுத்து வந்து கூடாரத்தின் வெளியே தன் தம்பிகளுக்காகக் காத்திருந்தான்.

நாய்கள், தங்களது எதிரின் உடம்பைப் பார்த்ததும் குரைத்துப் பாயத் தொடங்கின. இந்தச் சத்தங்களைக் கேட்டு, அவனது தம்பிகள் ஒவ்வொருவராக வெளியே வந்தனர். குரங்கும் மெதுவாகத் தலையை

வெளியே நீட்டிப் பார்த்தது. நரியின் உடம்பைக் கண்டதும் அது சட்டென்று கூடாரத்தின் ஒரு மூலைக்குத் தாவி ஒளிந்து கொண்டது.

காலைநேரப் பிரார்த்தனைக்குப் பிறகு சாப்பிட உட்கார்ந்தோம். ஈரமற்ற பிஸ்கட்டைத் தவிர வேறு எதுவும் இல்லை. அத்துடன் தொட்டுக் கொள்வதற்குப் பாலடைக் கட்டி வேண்டுமென்று ஃபிரிட்ஜ் கேட்டான். எர்னஸ்டோ, ‘வெண்ணெய் இருந்தால் நன்றாக இருக்குமே’ என்றான் குறும்பாகச் சிரித்தபடி. நாங்கள் கடற்கரையிலிருந்து எடுத்து வந்த பெட்டி ஒன்றினுள் வெண்ணெய் இருப்பதை அவன் கண்டுபிடித்திருந்தான். வெண்ணெய் இருந்த டப்பாவில் ஒரு சிறிய ஓட்டை போட்டு, ஒரு குச்சியின் உதவியால் கொஞ்சம் கொஞ்சமாக வெண்ணெயை வெளியில் எடுத்தோம். ஒரு சுத்தமான சிரட்டையில் அதை நிரப்பினோம். டப்பாவின் மூடியை நீக்கிவிட்டால் வெண்ணெய் மொத்தமும் உருகிவிடும் என்பதால் அப்படியே விட்டு வைத்தோம்.

வெண்ணெய் தடவி, பிஸ்கெட்டுகளை நெருப்பில் வாட்டியெடுத்ததும் அவை மொறமொறப்பாக மாறின.

நாய்கள் எங்களுக்கு அருகே அமைதியாக நின்று கொண்டிருந்தன. நேற்று இரவு நரிகளுடன் சண்டை போட்டதால், அவற்றின் கழுத்துகளில் காயங்கள் ஏற்பட்டிருந்தன. என்னுடைய மனைவி அக்காயங்களைக் கழுவிவிட்டு மருந்தாக வெண்ணெய் தடவினாள். அம்மா உதவி செய்வதாக இருந்தால், நாய்களின் கழுத்தில் பாதுகாப்புப் பட்டை போட்டுவிடுவதாக ஜாக் சொன்னான். அம்மாவும் சம்மதித்தாள்.

சற்று நேரத்தில் நானும் ஃபிரிட்ஜும் கூடாரத்திலிருந்து புறப்பட்டோம். மற்ற குழந்தைகளிடம், அம்மா சொல்கிறபடி நடந்து கொள்ளுங்கள் என்று கூறிவிட்டு நடந்தேன்.

ஃபிரிட்ஜ் படகைப் பயணத்திற்குத் தயார் செய்யும்போது, நான் கடற்கரையில் ஒரு கம்பத்தை நட்டு அதில் வெள்ளைக் கொடி ஒன்றைப் பறக்க விட்டேன். ஏதேனும் அபாயம் ஏற்பட்டால் கொடியைக் கீழே இறக்குவதுடன் நான்கு முறை துப்பாக்கியால் சுட வேண்டுமென்று எச்சரித்தேன். ‘ஒருவேளை நாங்கள் இருவரும் அன்றிரவு கப்பலிலேயே தங்க வேண்டியிருக்கலாம்’ என்றேன். ‘அப்படித் தங்க நேர்ந்தால், நமது படகிலேயே இரவைக் கழியுங்கள்’ என்றாள் என் மனைவி.

குரங்குக் குட்டிக்குக் கறந்த, பசுவின்பாலைக் கொடுக்க வேண்டுமென்று

விரும்பிய ஃபிரிட்ஜ், குரங்கையும் தன்னுடன் அழைத்து வந்திருந்தான். படகு கிளம்பியது. ஆறு, கடலுடன் கலக்கும் பகுதியாக இருந்ததால், அங்கிருந்த நீரோட்ட வேகம் எங்களுக்கு உதவி செய்தது. சிரமமில்லாமல் கப்பலை நோக்கிப் படகைச் செலுத்தினோம்.

எங்கள் படகு கப்பலை நெருங்கியவுடன் படகைக் கட்டி வைத்துவிட்டு ஃபிரிட்ஜ் பசுமாடு இருந்த இடத்தைத் தேடி ஓடினான். அங்கிருந்த வீட்டு விலங்குகள் ஒவ்வொன்றும் எங்களைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தன. எல்லா மிருகங்களுக்கும் வேண்டிய அளவு தீனி கொடுத்து, தண்ணீர் வைத்துவிட்டு நாங்கள் சாப்பிட உட்கார்ந்தோம். வேலை நிறைய இருந்ததால் வேலை மும்முரத்தில் பிற்பாடு சாப்பிட நேரமிருக்காது என்று தோன்றியது.

சாப்பிடும்போதே என்னவெல்லாம் செய்யலாம் என்பது பற்றி விவாதித்தோம். எங்களுடைய படகிற்குப் பாய்மரத்தையும், பாயையும் அமைப்பதுதான் முதல் வேலை என்று குறிப்பிட்டான் ஃபிரிட்ஜ்.

“நாம் வரும்போது எதிர்க்காற்றையும் மீறிப் பயணம் செய்ய, ஆற்றின் நீரோட்டம் உதவியது. ஆனால், திரும்பிச் செல்லும்போது நீரோட்டத்தை எதிர்த்து நான் ஒருவனே துடுப்புப் போட முடியாது!” என்றான்.

“உன்னுடைய வேலையை முதலில் சுலபமாக்கிக் கொள்கிறாய். அப்படித்தானே?” நான் அவனைக் கேலி செய்தேன்.

இருப்பினும் அவனது ஆலோசனைப்படி முதலில் நாங்கள் பாய்மரத்தையும், பாயையும் அமைத்தோம். படகை வேண்டிய திசையில் சுலபமாகத் திருப்புவதற்கு வசதியாக முன்னும் பின்னும் இரண்டு துடுப்புகளைச் சுக்கான் போல் கயிற்றால் கட்டினேன்.

இந்த வேலைகளைச் செய்வதற்கு நீண்ட நேரமானது. இன்று தீவிற்குத் திரும்பிச் செல்வதென்றால் எதையும் எடுத்துக்கொண்டு போக முடியாது. எனவே இரவை அங்கேயே கழிப்பது என்று தீர்மானித்தோம்.

படகின் வேலைகள் முடிந்தவுடன் இருட்டுவது வரையில் எங்களுக்குப் பயன்படக்கூடிய பொருள்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டுபோய் படகில் வைத்தோம். கப்பலை யாராவது கொள்ளையடித்திருந்தால் கூட, இவ்வளவு துப்புரவாகச் செய்திருக்க

முடியாது. ஒருவேளை இந்தத் தீவில் நெடுங்காலம் தங்க நேரலாம் என்று நான் எண்ணியதால், வெடிமருந்துகள், துப்பாக்கி ரவைகள் போன்ற முக்கியமான பொருள்களை எடுத்துப் படகில் வைத்தேன். கேப்டனின் அறையிலிருந்து சாப்பாட்டிற்குப் பயன்படும் ஸ்பூன்கள், முள்கரண்டி, தட்டுகள், உயர்ந்த வகை மதுக்குப்பிகள் போன்றவை கிடைத்தன.

கப்பலின் சமையலறையில் பல வகையான பாத்திரங்களும், தானிய வகைகளும், உணவுப் பொருட்களும், ஒரு சாக்கு நிறைய உருளைக்கிழங்கும் கிடைத்தன. கப்பல் காற்றில் ஆடுவதைப் பார்த்தால் எந்த நேரத்திலும் அது நொறுங்கி விடலாம் என்று தோன்றியதால் எல்லாப் பொருட்களையும் வேகவேகமாகப் படகில் கொண்டுபோய்ச் சேர்த்தோம்.

படுத்து உறங்கப் பயன்படும் கேன்வாஸ் துணியாலான ஊஞ்சல் கட்டில்கள், கம்பளிகள், படுக்கை விரிப்புகளையும் ஒன்றுவிடாமல் எடுத்தேன். ஃபிரிட்ஜ், துப்பாக்கிகள், நீண்டவாள்கள், வெடிமருந்துப் பீப்பாய், வேட்டைக்கத்தி போன்றவற்றை எடுத்து வந்தான். மேலும் கந்தகம் நிறைந்த ஒரு பீப்பாய், நெருப்புப் பெட்டிகள், கயிற்றுச் சுருள்கள், தார்ப்பாய் கட்டுகள் (பாய்மரத் துணியாகப் பயன்படுத்த வைத்திருந்தவை) போன்றவற்றையும் படகில் ஏற்றினோம். இவ்வளவு பளுவையும் தாங்கிய படகு, ஏறத்தாழ நீர்மட்டத்தை அடைவது போல் தாழ்ந்தது. கடல் மட்டும் அப்போது அமைதியாக இல்லாதிருந்தால், எங்கள் படகு நீரில் மூழ்கியே போயிருக்கும்!

இரவில் தீவின் கடற்கரையில் நெருப்பு மூட்டியிருப்பது தெரிந்தது. எனவே, தீவில் இருப்பவர்களுக்கு எந்தவிதமான ஆபத்தும் இல்லை. உடனே நாங்கள் கப்பலில் விளக்குகளை ஏற்றி உயரத்தில் தொங்க விட்டோம். எங்களது சைகையின் பொருளைக் கரையிலிருப்பவர்களும் புரிந்து கொண்டனர் என்பதற்கு அடையாளமாகக் கரையிலிருந்து இரண்டு முறை வெடிச்சத்தம் கேட்டது.

நாங்கள் அமைதியுடன் இரவுநேரப் பிரார்த்தனையை முடித்துவிட்டுப் படகின் தொட்டிக்குள்ளேயே உறங்கத் தொடங்கினோம்.

# 6

றுநாள் காலையில் சூரியன் உதிப்பதற்கு முன்பே கப்பலின்

மேல்தளத்தை அடைந்த நான், கப்பலிலிருந்த பைனாகுலர் என்கிற தொலைநோக்கி மூலம் கூரைப் பகுதியைப் பார்த்தேன். என்னுடைய குடும்பத்தினர் இன்னும் தூக்கத்திலிருந்து விழிக்கவில்லை என்று தோன்றியது. ஃபிரிட்ஜ் காலை உணவிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். வழக்கத்தை விடச் சீக்கிரமாக எழுந்த என் மனைவி கரையில் நின்றபடி, கப்பலைப் பார்ப்பது தெரிந்தது. கொடியை ஏற்றி இறக்குவதன் மூலம் நாங்கள் பரஸ்பரம் 'நலமாக இருக்கிறோம்' என்ற செய்தியை பரிமாறிக் கொண்டோம்.

"இந்த வீட்டுப்பிராணிகளைக் கரைசேர்க்க என்ன செய்யலாம்? கப்பலின் நிலையைப் பார்த்தால் விரைவிலேயே கப்பலுடன் சேர்ந்து அவையும் அழிந்துவிடும் என்று தோன்றுகிறது! நான் ஃபிரிட்ஜிடம் கூறினேன்.

அவற்றுக்காக முதலில் ஒரு தெப்பம் கட்டும் யோசனையைத் தெரிவித்தான். அது சுலபமல்ல; அது மட்டுமின்றி ஆடுகளை மட்டும்தான் தெப்பத்தில் ஏற்ற முடியும். கழுதை, பசுமாடு, பெண்பன்றி போன்றவற்றைத் தெப்பத்தில் ஏற்றினால், அவற்றைக் கரைக்குக் கொண்டு செல்வது கடினம். எனவே வேறு யோசனை கூறுமாறு சொன்னேன்.

"அப்படியானால் அவற்றின் உடம்பிலேயே தெப்பத்தை அமைத்துவிட்டால், அவை படகின் பின்னாலேயே நீந்தி வந்துவிடுமே!" என்றான் ஃபிரிட்ஜ்.

உண்மையிலேயே நல்ல யோசனை! இதைத் தெரிவித்ததற்காக நான் ஃபிரிட்ஜைப் பாராட்டினேன். பிறகு 'அது சாத்தியமா?' என்றும் யோசித்தோம். உடனேயே அதைச் செயல்படுத்திப் பார்த்து விடுவது என்று ஓர் ஆட்டின் இருபுறத்திலும்-வயிற்றுப் பகுதிகளிலும் இரண்டு மிதவைப் பீப்பாய்களைக் கட்டிக் கரைநோக்கிக் கடல்நீரில் எறிந்தோம். போட்டவுடன் நீரில் முழகிய ஆடு, சற்று நேரத்தில் நீர் மட்டத்திற்கு வந்து நன்றாக மிதந்தபடி நீந்தத் தொடங்கியது. சோர்வுற்றபோது அசையாமல் நின்றது. எனினும் அது மூழ்கிவிடாமல் மிதந்து கொண்டே இருந்தது.

எங்களது முயற்சி வெற்றி பெற்றது. நான் திருப்தி அடைந்தேன். கடலில் குதித்து நீந்திய ஃபிரிட்ஜ் அந்த ஆட்டை மீட்டுக்கொண்டு வந்தான். பிறகு சிறிய-பெரிய பீப்பாய்கள், தார்ப்பாய் போன்றவற்றால் மற்ற

விலங்குகளுக்கு மிதவைகள் அணிவித்தோம். இந்த மிதவைகள் அவற்றின் உடம்பிலிருந்து நழுவி விடாமல் இருப்பதற்காக அவற்றின் உடலுடன் கயிற்றை இணைத்துக் கட்டினோம். பிறகு ஒவ்வொன்றின் கழுத்திலும் நீண்ட கயிறுகளைக் கட்டிக் கடலில் தள்ளினோம். பெண் பன்றிதான் மிதவையைக் கட்டும்போதும், கடலில் வீசும்போதும் சற்று முரண்டு பிடித்தது.

மேற்கொண்டு தாமதிக்கக் கூடாது என்பதால் நாங்களும் படகில் ஏறிக்கொண்டோம். விலங்குகளைப் பிணைத்திருந்த கயிறுகளின் முனைகளைப் படகின் பின்புற முனையில் வலுவாகக் கட்டினோம். இப்போது காற்று எங்களுக்குச் சாதகமாக வீசியது. பாய்கள் புடைத்துக் காற்று நிறைந்து நின்றன.

பாய்களைப் பொருத்தாமல் நாங்கள் துடுப்புகளை மட்டும் பயன்படுத்தியிருந்தால், விலங்குகள் எங்களின் வேகத்தைக் குறைத்துப் பின்புறமாக இழுத்திருக்கும்!

காற்றின் உதவியால் எங்கள் படகு விரைவாக நகர்ந்தது. தொலைநோக்கியின் உதவியுடன் மறுபடியும் கூரைப்பகுதியைப் பார்த்தேன். நாங்கள் புறப்படுதற்கு முன்பாகவே எங்கள் வீட்டினர் கரையிலிருந்து தீவிற்குள் செல்வது தெரிந்தது. அவர்க்ள மறுபடி வரவே இல்லை.

படகு வரைந்து கொண்டிருந்தது. நாங்களும் விழிப்பாகவே இருந்தோம். சற்றுத் தூரம் சென்றதும் திரும்பிப் பார்த்த நாங்கள் திடுக்கிட்டோம்.

“கடவுளே! நாம் தொலைந்தோம். பெரிய சுறாமீன் ஒன்று நம்மைத் தாக்க வருகிறது!” ஃபிரிட்ஜ் அலறினான்.

எனக்குக் கோபமும் அதே சமயம் பயமும் தோன்றியது. இருப்பினும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, “பதற்றப்படாதே, துப்பாக்கியைத் தயாராக வைத்துக்கொள். சுறாமீன் நம்மை நெருங்கும்போது சுட்டுத்தள்ளு!” என்றேன்.

எங்களுக்குப் பின்புறம் சுறா மிக வேகமாக நீந்தி வந்தது. ஆடுகளில் ஒன்றைக் கவ்வ முயன்றது. ஃபிரிட்ஜ், சரியாகக் குறிபார்த்து இரண்டு முறை சுட்டான். குண்டுகள் சுறாமீனின் தலையைத் துளைத்தன. உடனே அது நீருக்குள் மூழ்கி மறைந்தது. அது மறைந்த இடத்தைச்

சுற்றிலும் நீரில் அதன் ரத்தம் படர்ந்து பரவியது. சுறா மறுபடியும் கோபத்துடன் தாக்க வரக்கூடும் என்று நினைத்தேன். நல்லவேளையாக அப்படியெதுவும் நிகழவில்லை!

“பயப்பட வேண்டாம் அப்பா... சுறாமீன் மோசமாகக் காயமடைந்திருக்கிறது!” ஃபிரிட்ஜ் தன்னுடைய குறி தவறவில்லை என்கிற பெருமை தொனிக்கப் பேசினான்.

அதன்பிறகு எந்தவிதச் சிரமுமின்றி நாங்கள் கடற்கரையை அடைந்தோம். கயிறுகளை அவிழ்த்து விட்டதும் விலங்குகள் மகிழ்ச்சியால் துள்ளிக் கரையேறி ஓடின.

என் குடும்பத்தினர் யாரும் கரைக்கு வராமற் போனதால் என்னுள் பயம் எழுந்தது. சற்று நேரத்திற்குள் அருகிலேயே அவர்களது குரல் கேட்டதும் ஆறுதலடைந்தேன். விரைவிலேயே எங்களைப் பார்த்துவிட்டு ஓடோடி வந்தனர்.

கால்நடைகள் உட்பட ஏராளமான பொருள்களை இம்முறை நாங்கள் கொண்டு வந்திருப்பதைக் கவனித்த என் மனைவி வியப்படைந்தாள்.

“இதற்கெல்லாம் காரணம், ஃபிரிட்ஜின் யோசனைதான். ஆகவே நாம் அவனுக்கு நன்றி சொல்ல வேண்டும்!” என்று நான் குறிப்பிட்டேன். என் மனைவி எங்கள் இருவரையுமே பாராட்டினாள்.

ஃபிரான்ஸிஸ் படகிலிருந்த சிவப்புநிறக் கொடியைப் பார்த்து மகிழ்ந்தான். எர்னஸ்ட்டும் மற்றவர்களும் படகிற்குள் குதித்து, பாய்மரம், கொடி போன்றவற்றைத் தொட்டுப் பார்த்தப் பாராட்டையும் மகிழ்ச்சியையும் தெரிவித்தனர். ஜாக், இதிலெல்லாம் ஈடுபாடு இல்லாதவனாகக் கால்நடைகளை அணுகினான்.

முதலில் ஆடுகளை நெருங்கி அவற்றின்மீது கட்டப்பட்டிருந்து பீப்பாய்களைக் கழற்றினான். தன் உடல் மீது கட்டப்பட்டிருந்த பீப்பாயை உதறித் தள்ளுவதற்குக் கழுதை பெரும்பாடு பட்டது. இந்தக் காட்சியை வேடிக்கை பார்த்த ஜாக் விழுந்து விழுந்து சிரித்தான். கழுதைக்கு உதவ முயன்றான். ஆனால், அது அவனது உதவியை ஏற்றுக் கொள்ளவில்லை. பிறகு அவன் அதன முதுகிலேறிச் சவாரி செய்யத் தொடங்கினான். இந்த வேடிக்கையைப் பார்த்தவர்கள் எல்லாருமே சிரித்தோம். ஜாக் கழுதையின் மேலிருந்து இறங்குவதற்கு

உதவி செய்தேன். அப்போதுதான் அவனது இடுப்பில் கிடந்த மஞ்சள்நிறத் தோல் பெல்ட்டைப் பார்த்தேன். அதில் இரண்டு கைத் துப்பாக்கிகளையும் செருகி வைத்திருந்தான்.

“இந்தப் பெல்ட் எங்கிருந்து கிடைத்தது?” என்று நான் கேட்டேன்.

எங்கிருந்தும் கிடைக்கவில்லை. நானே தயார் செய்தேன். அதோ நாய்களின் கழுத்தைப் பாருங்களேன்!” ஜாக் சுட்டிக் காட்டினான்.

நரிகளின் தாக்குதலிலிருந்து காப்பாற்றவதற்காக அவற்றின் கழுத்துகளிலும் ஜாக் அழகான பெல்ட்டுகளைக் கட்டியிருந்தான். அந்தப் பட்டைகளிலிருந்து ஆணிகளின் கூரான விளிம்புகள் வெளிப்புறமாகத் துருத்திக் கொண்டிருந்தன. அவன் பட்டைகளைத் தயார் செய்ததாகவும், அவனுடைய அம்மா அவற்றைத் தைத்துக் கொடுத்ததாகவும் ஜாக் மறக்காமல் குறிப்பிட்டான்.

இதற்காக நான் அவர்கள் இருவரையும் பாராட்டினேன். தன்னைக் கேட்காமல் தான் கொண்டு வந்து வைத்த நரியின் தோலை உரித்து பெலட்டுகளைச் செய்ததால் ஃபிரிட்ஜ் மனம் வருந்தினான். இருந்தாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

என்னுடைய மனைவி சமையல் வேலையில் ஈடுபட்டாள். நான் கால்நடைகளின் மீதிருந்த மிதவைகளை அப்புறப்படுத்தினேன். பெண்பன்றி மட்டும் எங்களை அருகே நெருங்கவிடவில்லை. உடனே எர்னஸ்ட் இரண்டு நாய்களையும் பன்றியை நோக்கி ஏவினான். நாய்கள் இரண்டும் பன்றியின் இரண்டு காதுகளையும் கவ்வியபடி இழுத்து வந்து எங்களுக்கு முன்னால் நிற்க வைத்தன. அதன் பிறகுதான் நாங்கள் அதன் மீதிருந்த மிதவைகளைக் கழற்றினோம்.

நாங்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் உணவை உண்டு முடித்தோம். பிறகு அன்று நடந்த நிகழ்ச்சிகளைச் சொல்லுமாறு என் மனைவியிடம் கேட்டுக் கொண்டேன். அவளும் சொல்லத் தொடங்கினாள்.

## 7

“நீங்களும் ஃபிரிட்ஜும் புறப்பட்டுச் சென்ற முதல்நாள் குறிப்பிடும்படி நாங்கள் எதையும் செய்யவில்லை. குடியிருப்பதற்கு

ஏற்ற குளிர்ச்சியான, வசதியான இடம் ஒன்றைக் கண்டுபிடிக்க விரும்பினோம். நம்முடைய கூடாரத்தைச் சுற்றி ஒரு மரம்கூட இல்லை. வெயிலுக்குப் பயந்து கூடாரத்திற்குள் வந்தால், வெளியே இருப்பதைவிட கூடாரத்திற்குள் வெக்கை அதிகமாகத் தெரிகிறது. அதனால் நிரந்தரமாக நாம் குடியிருக்க, ஒரு நல்ல இடத்தை இன்று எப்படியும் கண்டுபிடிக்க வேண்டுமென்று முடிவெடுத்தேன்.

காலைச் சாப்பாடு முடிந்தவுடன் ஜாக் நாய்களுக்கான பெல்ட்டை உருவாக்குவதில் ஈடுபட்டான். அதற்காக நரியின் தோலைப் பட்டை பட்டையாக அறுத்து எடுத்தான். கூரான விளிம்புகள் மேற்புறமாக இருக்குமாறு அதில் ஆணிகளைப் பதித்தான். ஆணியின் தலைப்பகுதி நாய்களின் கழுத்தில் உறுத்தாமல் இருப்பதற்காக, அந்தத் தோல்பட்டையின் அளவிலேயே தார்ப்பாய்த் துண்டுகளைக் கிழித்தான். நான் அவை இரண்டையும் ஒன்றாக இணைத்துத் தைத்துக் கொடுத்தேன். பிறகு அவன் தன்னுடைய இடுப்பு அளவிற்கு ஏற்ற பெல்ட் வேண்டும் என்றான். ஈரமான தோல் உலர்ந்தவுடன் சுருங்கிவிடுமே என்றேன். உடனே தோலை நன்றாக இழுத்து வைத்து ஒரு கட்டையில் ஆணியால் அறைந்து வெயிலில் உலர வைத்தான். வெளியே சென்ற போதுகூட அவன் அந்தக் கட்டையைக் கையில் எடுத்தபடியேதான் சென்றான்.

பிறகு துப்பாக்கிகள், குண்டுகள், உணவுப் பொருள்கள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு இரண்டு நாய்களுடன் புறப்பட்டோம். டர்க் ஏற்கனவே உங்களுடன் பயணம் செய்திருப்பதால், நீங்கள் சென்ற வழியிலேயே அது எங்களை அழைத்துப் போனது. ஆற்றைத் தாண்டிய பிறகு ஒரு பசுமையான புல்வெளியை அடைந்தோம்.

அருகில் தென்பட்ட காட்டை நோக்கி நடந்தோம். கடற்கரையை ஒட்டி ஒரு பாதை வளைந்து வளைந்து சென்றது. டர்க் முன்னால் போகப் போக, நாங்கள் அதைத் தொடர்ந்து சென்றுகொண்டே இருந்தோம். அது நீங்கள் சென்று வந்த வழியாகத்தான் இருக்கும் என்று தோன்றுகிறது.

திடீரென்று புல்வெளியின் நடுவிலிருந்து-தரை மட்டத்திலிருந்து விர்ரென்று ஒரு பறவை பாய்ந்து உயர்ந்து பறக்கத் தொடங்கியது. பிள்ளைகள் இருவரும் துப்பாக்கியை உயர்த்துவதற்குள் அது வெகு தொலைவு பறந்து போய்விட்டிருந்தது.

மிகவும் பெரிய இறக்கைகளையுடைய அதன் பொய் என்னவென்று தெரியவில்லை. அந்தப் பறவை ஒளிந்திருந்த இடத்தை நோக்கி ஜாக் ஓடினான். உடனேயே அங்கிருந்து அதே போன்ற மற்றொரு பறவை அவனது முகத்தை ஒட்டியபடி மேல்புறமாகப் பறந்து போனது. அருகிலேயே அவற்றின் கூடு இருந்தது. முட்டையிலிருந்து அப்பொழுதுதான் வெளிவந்த குஞ்சுகள் சில சற்றுத் தூரத்திலிருந்த புல்வெளிக்குள் மறைந்திருந்தபடி குரலெழுப்பின. என்ன முயன்றும் எங்களால் அவற்றைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை!

நாங்கள் பேசியபடியே காட்டை நெருங்கினோம். உண்மையில் அதை ஒரு காடு என்று சொல்ல முடியாது. பத்து அல்லது பன்னிரண்டு மரங்கள்தான் அங்கு இருந்தன. ஆனால், ஒவ்வொன்று பெரிய பெரிய மரங்கள், ஒவ்வொரு மரமும் நிலத்தின் மேற்பரப்பில் பெரிய பெரிய வேர்களைக் கண்டபடி பரப்பியிருந்தன. வேர்களின் மேற்புறம் தென்பட்ட மரத்தின் அடிப்பகுதி மிகவும் பருமானக இருந்தது.

ஜாக் ஒரு வேரின் மேல் ஏறி அந்த மரத்தின் சுற்றளவைக் கயிற்றால் அளந்தான். வேர்ப்பகுதிக்கு மேலே, அதாவது தரைப்பகுதியில் அதன் சுற்றளவு எண்பத்து நான்கு அடி. வேரின் மேற்புறம் அதன் பருமன் எண்பத்தெட்டு அடி. மரத்தின் உயரம் நூற்றைம்பது அடிகளுக்குக் குறையாது என்று தோன்றியது. மதிய உணவை அந்த மரத்தடியிலேயே முடித்தோம். நாய்க்ள கடற்கரைவரை சென்று பார்த்துவிட்டு மறுபடியும் எங்களருகே வந்தன. அவற்றிற்கு நாங்கள் வைத்த உணவைச் சாப்பிடாமல் படுத்துக்கொண்டன! கடற்கரைக்குச் சென்றிருந்த நாய்கள் அங்கிருந்த சிறு சிறு நண்டுகளை ஏராளமாகச் சாப்பிட்டிருந்தன என்று பிறகுதான் எங்களுக்கு தெரிந்தது.

அழகான அந்த இடத்தை விட்டுக் கிளம்ப எங்களுக்கு மனம் வரவில்லை. அந்த இடத்தில் நாம் குடியிருந்தால் மிகவும் பத்திரமாக இருக்கும் என்றும் தோன்றியது.

பின்னர் ஜாக் கேட்டுக்கொண்டபடி தோலாலான இடுப்புப் பட்டையைத் தைத்துக் கொடுத்தேன். கடைசியில் கூடாரத்திற்குத் திரும்புவதென்றும், வரும் வழியில் கடற்கரையில் ஒதுங்கிக் கிடக்கும் தேவையான பொருள்களை எடுத்துச் செல்வது என்கிற தீர்மானத்துடனும் புறப்பட்டோம்.

கடற்கரையில் ஏராளமான பொருள்கள் ஒதுங்கியிருந்தன. மிகவும்

பறுவான பொருள்களை எங்களால் சுமக்க முடியாததால் அங்கேயே விட்டுவிட்டோம். கடற்கரை ஓரத்தில் ஃபுளோரா கால்களால் மண்ணைத் தோண்டி எதையோ ஆர்வத்துடன் விழுங்கியது. அது ஆமைமுட்டை என்றான் எர்னஸ்ட். நாய் அவற்றை உடைத்து நாசப்படுத்துவதற்குள் பத்துப் பன்னிரண்டு முட்டைகளைக் கைப்பற்றி எங்கள் பையில் பத்திரமாக வைத்துக் கொண்டோம்.

அப்போது கடலில் திடுமென்று ஒரு பாய்மரப் படகு வருவதைக் கவனித்தோம். மனிதர்களைக் கொன்று தின்னும் நரபோஜிகளான காட்டுமிராண்டிகள்தான் வருகிறார்களோ என்று ஃபிரான்ஸிஸ் பயப்பட்டான்.

அந்தப் படகில் வருவது அப்பாவும் அண்ணனும்தான் என்று எர்னஸ்ட் சொன்னான். உடனே உங்களைச் சந்திப்பதற்காக நாங்கள் விரைவாக நடந்தோம். இதுதான் நடந்தது. என்னை நீங்கள் உண்மையிலேயே மகிழ்ச்சிப்படுத்த விரும்பினால் நாளைக்கே அங்குள்ள பெரிய மரங்களில் ஒன்றின் மீது வீடு அமைப்பதாக உறுதி கூறுங்கள்!" என்ற கோரிக்கையுடன் மனைவி தன் பேச்சை முடித்தாள்.

"என்ன... மரத்தின் மீது வீடு அமைப்பதா! மரத்தடியில் வேண்டுமானால் குடியிருக்கலாம். மரத்தின் மேலே குடியிருந்தால் ஏறி இறங்க பலூன் இறக்கைகள் அல்லவா தேவைப்படும்?" என்று நான் அவளைக் கேலி செய்தேன்.

"நீங்கள் என்ன சொன்னாலும் எனக்குக் கவலையில்லை. சரி, அதெல்லாம் போகட்டும். கிளைகளின் மீது ஒரு வீட்டையும், அங்கு ஏறி இறங்க ஓர் ஏணியையும் அமைக்க முடியாதா என்ன?" திரும்பவும் கேட்டாள் என் மனைவி.

"சரி, நாளைக் காலையில் இதைப் பற்றி யோசிப்போம்" என்று அவளுக்கு ஆறுதல் கூறினேன்.

# 8

காலையில் கண் விழித்தவுடன் நானும் என் மனைவியும் புதிய வீடு பற்றிப் பேசினோம். அவளது வற்புறுத்தலினால் வேறு வழியின்றிக் கடைசியில் அந்த யோசனைக்கு ஒப்புக்கொண்டேன்.

“உன் விருப்பப்படியே காட்டில், அந்த மரத்தின் மீதே குடியிருப்போம். இந்த இடம் நமது வெடிமருந்துகளைப் பாதுகாக்கும் ஆயுதக் கிடங்காக இருக்கட்டும். அதற்கு முன்பாக ஆற்றின் குறுக்காகப் பாலம் ஒன்றை அமைக்க வேண்டுமே?” என்றேன்.

காட்டுப் பகுதியிலுள்ள புது வீட்டில் வசிப்பது குழந்தைகளுக்கு ஆர்வம் ஏற்படுத்துவதாக இருப்பினும், பாலம் கட்டும் விஷயத்தில் அவர்களுக்கு அவ்வளவாக அக்கறை இல்லாமல் இருந்தது.

காலை உணவிற்குப் பிறகு நானும், ஃபிரிட்ஜும், எர்னஸ்ட்டும் பாலம் கட்டத் தேவையான பலகைகளைக் கப்பலிலிருந்து எடுத்து வருவதற்குப் புறப்பட்டோம்.

குடாப் பகுதிக்கும் கடலுக்கும் இடைப்பட்ட மணற்பரப்பில் கடல்பறவைகள் கூட்டம் கூட்டமாக இருந்தன. ஃபிரிட்ஜ் அவற்றில் சிலவற்றைச் சுட விரும்பினான். வேண்டாம் என்று எச்சரித்துவிட்டு மணலில் இறங்கினேன். நெருங்கிப் பார்த்தபோது அதற்கான காரணம் விளங்கியது. பாதி மணலிலும், பாதி நீரிலுமாக சுமார் இருபதடி நீளமுள்ள சுறாமீன் ஒன்று இறந்து கிடந்தது. என்னைத் தொடர்ந்து வந்த ஃபிரிட்ஜிடம், “அந்தச் சுறாவின் தலையில் இரண்டு இடங்களில் துப்பாக்கிக் குண்டு துளைத்திருக்கிற அடையாளத்தைப் பார். நீ நேற்றுச் சுட்ட சுறாமீன்தான் இது!” என்றேன்.

ஃபிரிட்ஜும் நானும் அதன் அருகே சென்று அந்த மீனின் உடலிலிருந்து நீண்ட தோல் துண்டுகளைக் கிழித்தெடுத்தோம். பிறகு படகிற்குத் திரும்பினோம்.

அருகிலேயே கரைப்பகுதியில் கப்பலின் பக்கவாட்டுப் பலகைகள் சில ஒதுங்கியிருந்தன. எனவே, நாங்கள் கப்பலுக்குச் செல்ல வேண்டிய தேவை இல்லாமல் போனது.

நாங்கள் மூவரும் தீவை அடைந்தபோது மற்றவர்கள் ஓடி வந்து எங்களை வரவேற்றனர். அந்த இடைவேளை நேரத்திற்குள் ஜாக்கும், ஃபிரான்ஸிஸும் சிறிய சிறிய தரை நண்டுகளை ஒரு பை நிறையுமளவிற்குப் பிடித்து வந்தனர்.

முதலில், ஆறு குறுகலாக இருந்த பகுதியில் பாலம் ஒன்றை அமைக்கும் பணியில் ஈடுபட்டோம். பகல் முழுவதும் பாலத்தின் வேலை நடந்தது.

அந்தத் தீவிற்கு வந்தது முதல் அன்று இரவுதான் நாங்கள் களைப்பினால் அயர்ந்து உறங்கினோம்.

மறுநாள் காலையில் பொழுது விடிவதற்கு முன்பாகவே எழுந்து பிரார்த்தனை, உணவு முதலியவற்றை முடித்துவிட்டப் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினேன்.

உணவு, மது உட்பட தினசரித் தேவைகளுக்குரிய பொருள்களை எல்லாம் கூடைகளிலும் கோணிப் பைகளிலும் நிரப்பிக் கொண்டோம். கழுதையும், பசுவும் இவற்றைச் சுமந்து வந்தன. கழுதையின் முதுகில் முன்புறமும், பின்புறமும் கூடைகளை வைத்து நடுவே சிறியவனான ஃபிரான்ஸிஸை உட்கார வைத்தோம்.

அந்த நேரத்தில் அங்கு மேய்ந்து கொண்டிருந்த கோழிகளையும், வாத்துகளையும் பார்த்த என்னுடைய மனைவி இவற்றை இப்படியே விட்டுச் சென்றுவிட்டால் நாளைக் காலைக்குள் நரிகளுக்கு உணவாகி விடுமே" என்றாள்.

உடனே மூத்த பையன்கள் இருவரும் அவற்றைப் பிடிக்க ஓடினர். ஆனால், அவர்களிடம் அவை எதுவும் அகப்படவில்லை. சட்டென்று, என் மனைவி தானியங்களைத் தரையில் இறைத்துவிட்டு அவற்றை அன்புடன் அழைத்தாள். அவை அருகே வந்த பிறகு கூடாரத்திற்குள்ளும் தானியத்தை வீசினாள். எல்லாப் பறவைகளும் கூடாரத்திற்குள் புகுந்து கொண்டதும் அவள் கூடார வாசலை மூடினாள். அதன்பிறகு ஜாக் கூடாரத்துக்குள் ஊர்ந்து சென்று ஒவ்வொன்றாகப் பிடித்து வந்தான். அவற்றின் கால்களைக் கட்டிக் கூடைக்குள் போட்டோம்.

கூடாரத்தைப் பாதுகாப்பாக மூடி வைத்துவிட்டுப் பயணத்தைத் தொடங்கினோம். ஃபிரிட்ஜும் அவனது அம்மாவும் முன்னால் நடந்தனர். அவர்களைத் தொடர்ந்து கழுதையும் பசுவும், வெள்ளாடுகளும் எர்னஸ்ட்டும், கடைசியாக நானும் நடக்க எங்களது பயணம் தொடர்ந்தது. படை அணிவகுப்பை மேற்பார்வையிடும் தளபதிகள் போல் நாய்கள் முன்னும் பின்னுமாகச் சென்று வந்தன.

“இதேபோல்தான் பைபிளின் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டிருக்கிற நமது முன்னோர்களும் பாலைவனத்தில் குடும்பத்துடனும், பொருள்களுடனும் பயணம் செய்திருப்பார்கள்!” என்று ஃபிரிட்ஜிடம் கூறினேன்.

பயணத்தின் துவக்கத்தில் எங்களுடன் புறப்படாமல் முரண்டு பிடித்த பெண்பன்றி, பிற்பாடு உர்... உர்ரென்று உறுமியபடி எங்களைப் பின்தொடர்ந்தது.

நாங்கள் ஆற்றின் மறுகரையை அடைந்தவுடன் பசும்புற்களைப் பார்த்த விலங்குகள் தங்கள் போக்கில் மனம் போனபடி திரியத் தொடங்கின. நாய்கள் மட்டும் அடிக்கடி குரைத்தும் விரட்டியும் விலங்குகளை அதட்டி வரிசைப்படுத்தியிருக்கா விட்டால் பயணம் சற்றுச் சிரமமாக இருந்திருக்கும்.

இது போன்ற தொல்லைகளைத் தவிர்ப்பதற்காகப் பிற்பாடு எங்களது பயணத்தைக் கடற்கரை ஓரமாகவே மேற்கொண்டோம்.

நாய்கள் சட்டென்று வலதுபுறமிருந்த புல்வெளிக்குள் பாய்ந்து சத்தமாக்க குரைக்கத் தொடங்கின. விரைவிலேயே காயமடைந்தது போல அவை ஊளையிடத் தொடங்கின. உடனே ஃபிரிட்ஜ் தன்னுடைய துப்பாக்கியை உயர்த்திக் கொண்டு அந்தத் திசையில் ஓடினான். ஜாக்கும் தனது துப்பாக்கியுடன் அவனைப் பின்தொடர்ந்தான். எர்னஸ்ட்டிற்கு அந்த அளவு துணிச்சல் இல்லாததால் தனது அம்மாவுடன் நின்று கொண்டான்.

குழந்தைகளைத் தொடர்ந்து நானும் துப்பாக்கியுடன் விரைந்தேன். மூன்று பேரும் ஒரே நேரத்தில் அந்த இடத்தை அடைந்தோம்.

“பெரிய முள்ளம்பன்றி!” -ஜாக் கூறினான்.

முள்ளம்பன்றி மீது பாய்ந்ததால் இரண்டு நாய்களின் வாய்ப் பகுதிகளிலும் முட்கள் குத்தி ரத்தம் வடிந்து கொண்டிருந்தது. நாய்கள் அதை நெருங்கிய போதெல்லாம் முள்ளம்பன்றி அருவருப்பு ஏற்படும் வகையில் உறுமிக்கொண்டு ஒரு பந்து போல் சுருண்டு கொண்டது.

ஜாக் தன்னுடைய கைத்துப்பாக்கியால் தயக்கமின்றி அதைச் சுட்டான். குண்டு சரியாக அதன் தலை மீது பாய்ந்ததால், முள்ளம்பன்றி இறந்து விழுந்தது.

தான் செய்ய நினைத்ததை தன்னுடைய தம்பி செய்துவிட்டானே என்பதால் மனம் வருத்தமடைந்த ஃபிரிட்ஜ் கூறினான்: “எதற்காக இப்படிப் பதற்றத்துடன் நடந்து கொள்கிறாய்? உன்னுடைய குறி

கொஞ்சம் தவறியிருந்தால் எங்களில் ஒருவரைக் கொன்றிருப்பாய்!”

“எனக்குப் பின்னால் வந்து கொண்டிருக்கிற உங்கள் மீது எப்படி துப்பாக்கிக் குண்டு பாயமுடியும்?” ஜாக் சரியாக மடக்கினான்.

“பாவம் ஃபிரிட்ஜ்! தன்னால் அந்த முள்ளம்பன்றியைச் சுட முடியவில்லையே என்கிற ஏக்கம். ஓநாய், ஆட்டுக்குட்டியைக் குற்றம் கூறும் கதைதான் இது!” நான் ஜாக்கை ஆதரித்துப் பேசினேன்.

நானும் என் மனைவியும் நாய்களின் வாயைக் கழுவிச் சுத்தம் செய்து மருந்து போட்டோம். இறந்துபோன முள்ளம்பன்றியை ஒரு தார்ப்பாய் துண்டில் போட்டு அத்துடன் நிறையப் புல்லையும் பிடுங்கிப் போட்டுக் கட்டி கழுதையின் முதுகில் ஏற்றினேன்.

மறுபடியும் பயணம் தொடர்ந்தது. ஃபிரிட்ஜ் துப்பாக்கியால் சுடுவதற்குத் தயாராகவே நடந்து கொண்டிருந்தான். முள்ளம்பன்றியைக் கொல்ல வாய்ப்புக் கிடைக்காமற் போனாலும் வேறு ஏதாவது பறவை அகப்படும் என்று நினைத்தான். துரதிர்ஷ்டவசமாக அப்படி எதுவும் அகப்படவில்லை!

விரைவிலேயே நாங்கள் காட்டுப் பகுதியை அடைந்தோம். நீண்டு வளர்ந்திருந்த மரங்களைக் கவனித்த ஃபிரிட்ஜ் வியப்படைந்தான். அவ்வளவு உயரமான மரங்களை நானும் அதுவரையில் பார்த்ததில்லை!

“நீ குறிப்பிட்டதுபோல் இது அழகான இடம்தான். இங்கு மரத்தின்மீது நம்மால் ஒரு வீட்டை அமைக்க முடிந்தால் பிறகு கரடிகள் கூட சுலபத்தில் நம்மை நெருங்க முடியாது!” என்று மனைவியிடம் கூறினேன்.

நாங்கள் மூட்டைகளை இறங்கி அவிழ்த்தோம். விலங்குகள் காட்டிற்குள் போய்விடாமல் இருப்பதற்காக அவற்றின் முன்னங்கால்கள் இரண்டையும் துண்டுக் கயிறுகளால் கட்டினோம். கோழிகளையும் புறாக்களையும் விடுவித்தோம். உடனே புறாக்கள் மரங்கிளையை நோக்கிப் பறந்தன. விடுதலையடைந்த கோழிகள் உடனே நிலத்தைக் கிளறத் தொடங்கின.

நாங்கள் புல்வெளியில் உட்கார்ந்தபடி அடுத்தகட்ட நடவடிக்கை பற்றி திட்டமிட்டோம். மறுநாள் இரவிற்குள்ளாகவே மரத்தின்மீது

உறங்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நினைத்தேன்.

பேச்சின் நடுவே ஃபிரிட்ஜ் திடீரென்று எழுந்து சென்றான். சற்று நேரத்தில் துப்பாக்கி சுடும் சத்தம் கேட்டது. தொடர்ந்து ஒரு காட்டுப்பூனையின் பின்னங்கால்களைப் பிடித்தபடி அவன் திரும்பி வந்தான்.

“நல்ல வேலை செய்தாய் ஃபிரிட்ஜ்! இதை உயிருடன் விட்டிருந்தால், இன்று இரவிற்குள்ளேயே நம்முடைய பறவைகளையெல்லாம் வேட்டையாடி அழித்திருக்கும். பொதுவாகக் காட்டுப்பூனை தனியாக வாழ்வதில்லை. எனவே அருகிலேயே இதனுடைய கூட்டம் இருக்கலாம்; நாம் விரைவிலேயே வேட்டையாடி அவற்றை அழிக்க வேண்டும்!” நான் கூறினேன்.

பூனையின் தோலைத் தனக்குத் தரவேண்டும்மென்றான் அவன். அதனுடைய உடம்பு நாய்களுக்கு உணவானது.

என் மனைவி எல்லோரையும் உணவு உண்ண அழைத்தாள். பிஸ்கட், சூப், சமைத்த முள்ளம்பன்றியின் இறைச்சி ஆகியவை எங்களுக்கு உணவாக அமைந்தன.

உணவிற்கு பின் மனைவியிடம் நான் கூறினேன்: “இன்று இரவு நாம் தரையிலேயே உறங்க வேண்டியதுதான். நாளைக்குக் கழுதைக்கும் பசுமாட்டிற்கும் மூக்கணாங்கயிறு போட்டுவிட்டால் கடற்கரையில் இருந்து நமக்குத் தேவையான பலகைகளை அவை சுமந்து வருமாறு செய்யலாம்.”

வளைந்தும் நெளிந்தும் காட்சியளித்த வேர்களுக்கு நடுவில் தான் தார்ப்பாயாலான கட்டில்களைக் கட்டித் தொங்கிவிட்டேன். மேற்புறமிருந்து பனியும், பூச்சிகளும் தாக்காமல் இருப்பதற்காகப் பெரிய தார்ப்பாய் ஒன்றைக் கூரைபோல் வேர்களின் மேலே கட்டினேன்.

பிறகு ஃபிரிட்ஜையும் எர்னஸ்ட்டையும் அழைத்துக்கொண்டு கடற்கரையை அடைந்தேன். இருட்டுவதற்குள் ஏணி அமைக்கத் தேவையான பொருள்களைச் சேகரிக்க விரும்பினேன். அருகில் ஒரு கத்தை மூங்கில் மணலில் புதைந்து கிடந்தது. அதை எடுத்துக் கொண்டோம். சற்றுத் தொலைவில் பிரம்புகள் புதர் போல் மண்டி வளர்ந்திருந்தன. தேவையான அளவிற்குப் பிரம்புகளை

வெட்டியெடுப்பதற்காகப் புதரை நெருங்கினோம். திடீரென்று ஃபுளோரா எங்களுக்கு முன்புறமாகப் பாய்ந்தது. உடனே அழகான செந்நாரைக் கூட்டம் ஒன்று படபடவென்று கலைந்து வானை நோக்கி விர்ரென்று பறந்தது. ஃபிரிட்ஜ் உடனே துப்பாக்கியால் சுட்டான். நாரை ஒன்று இறந்து விழுந்தது. மற்றொன்று காயம்பட்டிருந்தாலும் தத்தித் தத்தி ஓடத் தொடங்கியது. உடனே நாயை ஏவி அதைப் பிடித்து வரச் செய்தேன்.

நாங்கள் கொண்டுவந்த செந்நாரைகளைக் கண்டு குடும்பத்தினர் மகிழ்ந்தனர். காயம்பட்ட நாரையின் இறக்கைப் பகுதியில் மருந்திட்டு, அது சுற்றித் திரியும் அளவிற்கு நீளமான கயிற்றால் அதன் காலைக் கட்டி வைத்தேன்.

தரையிலிருந்து கிளை பிரியும் மேற்புறப் பகுதிவரை அடி மரத்தின் உயரம் நாற்பது அடிகள் இருக்கும் என்று கணக்கிட்டேன். பிறகு மூங்கிலைப் பிளந்து ஒரு வில்லையும், பிரம்பினால் அம்பு ஒன்றையும் செய்தேன். அம்பின் பின்புற முனையில் ஒரு கயிற்றைக் கட்டினேன். பிறகு வில்லில் அம்பைப் பொருத்தித் தாழ்வான கிளைக்குமேல் எய்தேன். அம்பு கிளைக்குமேல் சென்று மறுபுறம் இறங்கியது. அத்துடன் கயிறும் மறுபுறம் இறங்கியது.

பிறகு ஐம்பதடி நீளமுள்ள இரண்டு கயிறுகளாலும் மூங்கில் துண்டுகளாலும் கயிற்றாலான ஓர் ஏணியை அமைத்தேன். கிளையிலிருந்து தொங்கிய கயிற்றின் உதவியால் ஏணியை மேலே இழுத்தேன். குடும்பத்தினர் அனைவரும் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தனர்.

இதைச் செய்து முடிப்பதற்குள் பொழுது இருட்டிவிட்டது. கால்நடைகளை மரத்தின் வேர்களுக்கு அடியில், எங்களது தொங்கு படுக்கைகளுக்கு அருகிலேயே கட்டி வைத்தேன். புறாக்கள் உயரமான கிளைகளிலும், கோழிகள்-சேவல்கள் புதிய ஏணிப்படிகளிலும் ஏறி அமர்ந்து கொண்டன. தன்னுடைய தலையை வலதுபுற இறக்கைக்குள் புகுத்தி, வலது காலை மடக்கி அடிவயிற்றின் மீது வைத்துக் கொண்டு செந்நாரை உறங்கத் தொடங்கியது.

காலை உணவு முடிந்ததும் நானும் ஃபிரிட்ஜும் ஏணியின் உதவியால் மரத்தின் மீது ஏறினோம். என் மனைவியும், மற்ற குழந்தைகளும் மேலும் பலகைகளை எடுத்து வருவதற்காகக் கடற்கரைக்குச் சென்றனர்.

மரத்தின மேற்புறத்தில் கிளைகள் நெருக்கமாகவும் ஓரளவிற்கு அடிமரத்தையொட்டிச் செங்குத்தாகவும் வளர்ந்திருந்தன. வீடு அமைப்பதற்குத் தடையாக இருந்த சில கிளைகளை நானும் ஃபிரிட்ஜும் சேர்ந்து வெட்டி வீழ்த்தினோம். கயிற்றின் உதவியால், மனைவியும் குழந்தைகளும் கொண்டுவந்த சேர்த்த பலகைகளை மேலே இழுத்துப் பெற்றுக் கொண்டோம். பலகைகளைக் கிளைகளில் படுக்கை வாட்டமாக வைத்துத் தனமாக ஆணிகளின் உதவியுடன் அறைந்தேன். அதன் மூன்று புற விளிம்புகளிலும் மரக்கட்டைகளால் தட்டி போல் சுவர் அமைத்தேன். வீட்டிற்குள்ளிருந்து யாரும் அல்லது எதுவும் உருண்டு கீழே விழாமல் இருப்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு. மேற்புறம் ஐந்து அடி உயரத்தில் மற்றொரு கிளை பிரிந்தது. அதில் எங்களது தொங்கும் கட்டில்களைக் கட்டினேன். அதற்கும் மேலிருந்த ஒரு பெரிய கிளையின் மீது ஒரு தார்ப்பாயைப் போட்டு அதைக் கீழ்ப்புறமாக இழுத்து இரண்டு விளிம்புகளையும் கூரைபோன்ற வடிவத்தில் அடிப்புறங்களில் இணைத்துக் கட்டினேன். முன்புறம் திறந்தவெளியாக இருந்தது. வெளிப்புறத்திலிருந்து கடல் காற்று வீசுவதற்கும், சுற்றுப்புறத்தைக் கண்காணிக்கவும் இது எங்களுக்கு உதவியது.

பிறகு வெற்றிப் பெருமதிதத்துடன் நானும், ஃபிரிட்ஜும் கீழே இறங்கினோம். சில வேர்களின் மேற்புறம் பலகைகளை இணைத்ததால் ஒரு மேஜை, இரண்டு பெஞ்சுகள் போன்ற அமைப்பு கிடைத்தது.

எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தோம். செந்நாரை இதற்குள் எங்களிடம் பழகிவிட்டிருந்ததால் எங்களையே சுற்றிச் சுற்றி வந்தது. குரங்குக் குட்டி தன்னுடைய கோணங்கித்தனங்களால் எங்களைச் சிரிப்பில் ஆழ்த்தியபடி இருந்தது.

சாப்பாட்டிற்குப் பிறகு மூத்த பிள்ளைகள் மூன்று பேரும் ஏணியிலேறினர். என் மனைவி தட்டுத்தடுமாறினாலும் ஒருவிதமாக மேலே ஏறிச் சென்றுவிட்டாள். நான், சிறு குழந்தை ஃபிரான்ஸிஸைத் தோளில் போட்டுக் கொண்டு ஏறியதால் ஏணி சற்று ஆட்டம் கொடுத்தது. இருப்பினும் எந்தவிதச் சிரமமும் இல்லாமல் வீட்டை அடைந்தேன். பிறகு ஏணியை மேலே இழுத்து வைத்துவிட்டு உறங்கத் தொடங்கினோம். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை என் மனைவி கப்பலிலிருந்து கவனமாக எடுத்து வந்திருந்த பைபிளிலிருந்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதிகளை உரக்கப் படித்தோம்.

அம்புகளைக் கூராக்கும் என்னுடைய முயற்சியில் ஜாக்கும் இணைந்து

கொண்டான். ஃபிரிட்ஜ் காட்டுப்பூனையின் தோலால் கத்திபோன்ற ஆயுதங்களுக்கு உறைகள் தயாரித்தான். ஃபிரான்ஸிஸ் கேட்டுக் கொண்டதற்கிணங்க வில்லையும், அம்பையும் நான் தயாரித்துக் கொடுத்தேன். எர்னல்ட் இரண்டு மணிப்புறாக்களைச் சுட்டு வீழ்த்தினான். நாங்கள் வீடு அமைத்திருந்த மரத்துடன் மற்ற மரங்களிலும் நிறையப் பழங்கள் பழுத்திருந்தன. எனவே மரங்களை நோக்கிப் பலவகையான பறவைகள் பறந்து வரத் தொடங்கின. அதனால், தற்காலம் எங்களது உணவிற்குக் கவலையில்லை என்ற நிம்மதி பிறந்தது.

மதிய நேரத்தில் எல்லோரும் சாப்பிடுவதற்காக உட்கார்ந்தபோது, எங்களுக்குப் பழக்கமான இடங்களுக்கெல்லாம் பெயர் வைக்கவேண்டுமென்று யோசனை கூறினேன். உடனடியாக இடங்களைப் புரிந்து கொள்ளவும், கருத்துப் பரிமாற்றத்திற்கும் இது மிகவும் உதவும்! பெயர் வைக்கும்பொழுது ஒவ்வொரு இடத்திற்கும் அந்த இடத்தின் சிறப்பை உணர்த்தும்படியோ, அல்லது அங்கு நடந்த சம்பவத்தை ஒட்டியோ பெயர் வைக்கலாம் என்றும் கூறினேன்.

பெயர் வைக்கும் நிகழ்ச்சியை குடாப் பகுதியலிருந்து தொடங்கினோம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெயரைக் கூறினர். இறுதியாக நாங்கள் கரையேற உதவிய குடாவை திருவருள் குடா என்றும், நாங்கள் முதன்முதலாகத் தங்கிய இடத்தை ஜெல்தீம் என்றும், குடாவிற்கும் கடலுக்கும் இடையிலிருந்த சிறிய தீவை சுறாத்தீவு என்றும், செந்நாரையை நாங்கள் பிடித்த சதுப்பு நிலப்பகுதியைச் செந்நாரைச் சதுப்பு என்றும், தற்பொழுது குடியிருக்கும் வீட்டை ஈகிள்ஸ் நெஸ்ட் என்றும், கடலின் உட்பகுதியை ஊடுருவியுள்ள மலைப்பகுதிக்கு ஏமாற்றமுனை என்றும், ஆற்றுக்கு நரியாறு என்றும் பெயரிட்டோம்.

மதியத்திற்கு மேல் வெப்பம் கொஞ்சம் குறைவாகத் தோன்றியதால், சற்று நேரம் உலாவிவிட்டு வரலாம் என்று நினைத்தோம். ஜெல்தீம் வீட்டிற்குப் போய்வந்தால் வெடிமருந்து, துப்பாக்கி ரவைகள், வெண்ணெய் போன்றவற்றை எடுத்து வரலாமே என்று தோன்றியது. இப்பொழுது நாங்கள் வேறு ஒரு பாதை வழியாக நடந்தோம். வழியில் ஓடை ஒன்று குறுக்கிட்டது. இந்த ஓடை ஏதாவது ஓர் இடத்தில் எப்படியும் நரியாற்றுடன் கலக்கும் என்கிற நம்பிக்கையுடன் ஓடைக் கரையை ஒட்டியே நடந்தோம்.

என் மனைவியைத் தவிர மற்ற எல்லோரும் துப்பாக்கி வைத்திருந்தோம்.

சிறுவன் ஃபிரான்ஸிஸும் அவனடைய பங்கிற்குச் சிறிய வில்லையும், அம்பையும் எடுத்து வந்திருந்தான். வழியிலிருந்த பெரிய மரங்களின் நிழலில், பசும்புல் தரையில் நடந்தபடியே காட்டின் விளிம்புப் பகுதியை அடைந்தோம். குழந்தைகள் அங்கும் இங்கும் அலைந்தபடியே நடந்தனர். நான் எல்லோரையும் ஒன்றாக என்னுடன் நெருங்கி நடந்து வருமாறு கூறினேன்.

எல்லோருக்கும் முன்னதாக ஓடிவந்த எர்னஸ்ட்டுக்கு மூச்சு வாங்கியது. அவனது கையில் பச்சையான மூன்று கிழங்குகள் இருந்தன. மகிழ்ச்சியுடன் “அப்பா, உருளைக்கிழங்கு!” என்று கூவினான்.

நாங்கள் உடனே எர்னஸ்ட் குறிப்பிட்டுக் காட்டிய இடத்தை அடைந்தோம். அங்கு உருளைக்கிழங்கு ஏராளமாக விளைந்திருந்தது. உருளைக் கிழங்குகளை மண்ணிலிருந்து கிளறியெடுத்துப் பைகளில் நிரப்பிக் கொண்டு மறுபடியும் நடக்கத் தொடங்கினோம்.

எங்களது வழியை ஒட்டி வலதுபுறம் மலை; இடதுபுறத்தில் சற்றுத் தொலைவில் கடல் அலையடித்துக்கொண்டிருந்தது. மலை மீது பல வகையான செடி கொடிகள் வளர்ந்து படர்ந்திருந்தன. அவற்றின் நடுவே பைனாப்பிள் (அன்னாசி) பழச் செடிகள் சில தென்பட்டன. நாங்கள் அங்கு சென்று நன்றாகப் பழுத்த பழங்கள் சிலவற்றைப் பறித்துத் தின்றோம்.

ஒருவகையாக நரியாற்றைத் தாண்டி எங்களது ஜெல்தீமை அடைந்தோம். எல்லாப் பொருள்களும் நாங்கள் வைத்துவிட்டுச் சென்றது போலவே பத்திரமாக இருந்தன. ஃபிரிட்ஜ் வெடிமருந்தையும், துப்பாக்கிக் குண்டுகளையும் அள்ளினான். நானும் என் மனைவியும் சிறுவன் ஃபிரான்ஸிஸுடன் வெண்ணெயை வழித்தெடுத்தோம். எர்னஸ்ட்டும், ஜாக்கும் வாத்துகளை மிகுந்த கஷ்டப்பட்டுப் பிடித்தனர். சில நாள்களாக நாங்கள் அங்கு இல்லாததால் இப்பொழுது அவை எங்களை நெருங்கத் தயங்கின.

உருளைக்கிழங்கு வைத்திருந்த பையிலேயே உப்பை எடுத்து வைத்தோம். பிறகு எல்லாவற்றையும் சுமந்துகொண்டு எங்களுடைய ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குத் திரும்பினோம்.

எங்களுக்குத் தேவையான பலகைகளும், மரத்துண்டுகளும் கடற்கரையில் ஒதுங்கியிருப்பதைக் கண்டோம். ஒரு சறுக்குவண்டி தயாரிக்க நான் முடிவு செய்தேன். ஜெல்தீமிலிருந்து வெண்ணெய்ப் பீப்பாய் போன்ற கனமான பொருள்களை எடுத்துச் செல்லச் சறுக்குவண்டி உதவும்.

மறுநாள் பொழுது விடிந்ததும் எர்னஸ்ட்டை அழைத்துச் சென்று பலகைகள் மற்றும் மரத்துண்டுகளைச் சேகரித்தேன். சற்றுத் தூரத்தில் மணலில் புதைந்திருந்த ஒரு பெட்டியின் விளிம்பு தெரிந்தது. அதை வெளியே இழுத்துத் திறந்து பார்த்தோம். அதற்குள் கப்பலில் பணிபரியும் மாலுமிகளின் உடைகள் இருந்தன.

நாங்கள் திரும்பி வருவதற்குள் மற்ற குழந்தைகள் குறைந்தது அறுபதுக்கும் மேலான மணிப்புறாக்களைச் சுட்டுக் குவித்திருந்தனர். வெடிமருந்துகளையும், குண்டுகளையும் இப்படி வீணாக்கக்கூடாது என்று அவர்களிடம் எச்சரிக்கை செய்துவிட்டு, கண்ணி வைத்துப் பறவைகளைப் பிடிக்கும் முறையைக் கற்றுக் கொடுத்தேன். ஜாக்கும், ஃபிரான்ஸிஸும் உடனேயே கண்ணி முறையில் பறவைகளைப் பிடிக்க புறப்பட்டனர்.

ஃபிரிட்ஜும், எர்னஸ்ட்டும் எனக்கு உதவினார்கள். நான் சறுக்குவண்டி தயாரிப்பதில் ஈடுபட்டேன். திடீரென்று திகைப்பூட்டும் வகையில் கோழிகள் அலறின. உடனே ஓடிச்சென்று பார்த்தோம். குரங்கு ஒன்று எங்களைப் பார்த்தவுடன் ஓர் அத்தி மரத்திற்குப் பின்னால் மறைந்து கொண்டது. எர்னஸ்ட் அருகே நெருங்கிப் பார்த்தான். குரங்கு ஒரு முட்டையை உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருந்தது. பிறகு குரங்கு ஒளித்து வைத்திருந்த நான்கு முட்டைகளை என் மனைவி தேடிக் கண்டுபிடித்தாள். அதன் பிறகு நாங்கள் குரங்கை கட்டி போடத் தொடங்கினோம்.

வெகுநேரக் கடின உழைப்பிற்குப் பிறகு சறுக்குவண்டியொன்று வடிவம் பெற்றது. வளைந்த கட்டைகள் இரண்டைப் பக்கவாட்டில் இணைத்தேன். பிறகு முன்னும் பின்னும், நடுவிலும் குறுக்குக் கட்டைகளைப் பொருத்தினேன். பின்புறப் பகுதி மேல்நோக்கி வளைந்திருந்ததால், அங்கு ஏற்றிய சுமை கீழே விழாமல் தடுக்கப்படும். வண்டியின் முன்புறம் இரண்டு கயிறுகளைக் கட்டினேன். அத்துடன் வண்டியின் வேலை முடிந்தது. வண்டியும் தயாரானது!

நாங்கள் சறுக்குவண்டியுடன் திரும்பும்போது என் மனைவியும் குழந்தைகளும் புறாக்களின் இறக்கை மற்றும் ரோமங்களைப் பிய்த்துக் கொண்டிருந்தனர். பின்பு அவற்றைத் தீயில் அரைவேக்காடாக வேகவைத்து வெண்ணெய் தடவிப் பத்திரமாக எடுத்து வைத்தனர்.

எர்னஸ்ட்டுடன் நான் ஜெல்தீமுக்குப் புறப்பட்டேன். ஃபிரிட்ஜ் எங்கள் இருவருக்கும் ஆளுக்கு ஒவ்வொரு தோல் பையைக் கொடுத்தான். காட்டுப் பூனையின் தோலினாலான அந்த உறைக்குள் கத்தி, முள்கரண்டி, கைக்கோடரி போன்ற பொருள்கள் இருந்தன. ஃபிரிட்ஜ் மற்றவர்களுக்குக் காவலாக அங்கேயே தங்கினான். ஃபுளோராவுடன் சறுக்குவண்டியை இழுத்தபடி நாங்கள் ஜெல்தீமை அடைந்தோம்.

கழுதை, பசு ஆகியவற்றை அவிழ்த்துச் சுதந்திரமாக மேயவிட்ட பிறகு பீப்பாய்களை வண்டியில் ஏற்றினோம். அதற்குள் மேயச் சென்ற கால்நடைகள் எங்களது பார்வையிலிருந்து முற்றிலுமாக மறைந்து விட்டன. அவற்றைத் தேடிப் பிடித்து வருமாறு எர்னஸ்டிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு நான் குளிப்பதற்கேற்ற இடத்தைத் தேடினேன்.

அழகான இடம் ஒன்று தென்பட்டது. கால்நடைகளை தேடிப்போன எர்னஸ்ட் திரும்பி வராததால், அவனைக் கூவி அழைத்தேன். பதிலில்லை. நான் வந்து பாhத்தபோது எர்னஸ்ட் கூடாரத்திற்கு முன்புறம் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். கழுதையும், பசுமாடும் அவனுக்கு அருகில் மேய்ந்து கொண்டிருந்தன.

அவனை எழுப்பிவிட்டுப் பையில் உப்பை நிரப்புமாறு கூறிவிட்டு நான் குளிக்கப் போனேன். குளித்துவிட்டுத் திரும்பி வந்தபோது எர்னஸ்ட் மறுபடியும் காணாமல் போயிருந்தான்!

எங்கிருந்தோ திடுமென்று அவனுடைய குரல் எழுந்தது. "அப்பா, பெரியமீன் ஒன்று தூண்டிலோடு என்னையும் சேர்த்து இழுக்கிறது!"

அவனுக்கு உதவுவதற்காகக் குரல் வந்த திசையை நோக்கி விரைந்தேன். உண்மையிலேயே அவனுடைய தூண்டிலில் ஒரு பெரிய வஞ்சிர மீன் அகப்பட்டிருந்தது.

அதை வெளியே இழுத்துப்போட்டு உப்பில் புரட்டி எடுத்துக் கட்டி வைத்தேன். அதற்குள் எர்னஸ்ட் குளித்துவிட்டு வந்திருந்தான். பிறகு

கழுதையும் பசுவும் சறுக்குவண்டியை இழுத்துக் கொண்டு நடக்க, நாங்கள் புதிய வீட்டை நோக்கிப் புறப்பட்டோம்.

பாதி வழியில் திடீரென்று ஃப்புளோரா புல்வெளிக்குள் பாய்ந்தது. பின்பு அங்கிருந்து இடைவிடாமல் குரைத்துக் கொண்டே இருந்தது. விசித்திரமான ஒரு விலங்கு துள்ளித் துள்ளிச் சென்றது. நான் சுட்டேன். ஆனால், குறி தவறிவிட்டது. எர்னஸ்ட் விரைவாகப் புல்வெளிக்கு ஓடி அது மறைந்த இடத்தை நோக்கிச் சுட்டான். உடனேயே அது இறந்து விழுந்தது. ஆடு போன்ற உடல், புலியினது போன்ற வால், முயலைப் போல் நீண்ட காதுகள், அணிலுக்கு இருப்பது போன்ற முன்னங்கால்கள். ஆனால், சற்றுக் குட்டையாகவும், கூரான நகங்களுடனும் இருந்தது. பின்னங்கால்கள் வலுவானதாகவும், விசித்திரமாகவும் இருந்தது. எர்னஸ்ட் மகிழ்ச்சியுடன் “இது கங்காரு!” என்று கூவினான்.

அதனுடைய நான்கு கால்களையும் ஒரு மரக்கொம்பில் கட்டி வண்டியில் ஏற்றிக் கொண்டோம்.

நாங்கள் ஈகிள்ஸ்நெஸ்ட்டை அடைந்தபோது குடும்பத்தினர் மகிழ்ச்சியுடன் வரவெற்றனர். கங்காருவைச் சுட்டுக் கொல்லும் வாய்ப்புத் தவறிவிட்ட போதிலும் அதற்காக ஃபிரிட்ஜ், எர்னஸ்ட்டைப் பாராட்டத் தவறவில்லை.

குழந்தைகள் அணிந்திருந்த உடைகள் எனக்குச் சிரிப்பையும் வியப்பையும் ஏற்படுத்தின. ஒருவனது கால்சட்டை கழுத்துவரை நீண்டிருந்தது. இரண்டாமவன் அணிந்திருந்த உடை மிகவும் இறக்கமாக இருந்தது. மற்றொருவனோ மேல்சட்டைக்குள் ஆளோ மறைந்து போயிருந்தான்!

குழந்தைகளின் உடைகளைத் துவைத்து உலர வைத்திருப்பதாகவும், எனவே மாலுமிகளின் உடையை அவர்கள் தற்காலிகமாக அணிந்திருப்பதாகவும் மனைவி காரணம் கூறினாள்.

அன்று இரவு கங்காருவின் இறைச்சி, வஞ்சிரமீன், உருளைக்கிழங்கு ஆகியன பக்குவமாகச் சமைக்கப்பட்டிருந்தன. சாப்பிட்ட உடனேயே தூக்கம் கண்ணைச் சுழற்றியது. நாங்கள் படுத்துக் கொண்டோம்!

# 10

மறுநாள் காலையில் நானும் ஃபிரிட்ஜும் ஜெல்தீம் வீட்டை நோக்கிப் புறப்பட்டோம். அங்கிருந்து படகைத் தயார் செய்து கப்பலுக்குச் சென்று வரலாம் என்று நினைத்தோம். எர்னஸ்ட்டும் ஜாக்கும் எங்களை வழியனுப்ப வந்தனர்.

“நீங்கள் வீட்டிற்குத் திரும்பப் போகும்பொழுது இங்கிருந்த தேவையான அளவுக்கு உப்பு எடுத்துச் செல்லுங்கள். ஒருவேளை நாங்கள் கப்பலிலேயே தங்கிவிட நேரலாம். இன்று வர முடியாவிட்டால், நாளை மாலைக்குள் திரும்பி விடுவோமென்று அம்மாவிடம் சொல்லுங்கள்!” என்று கூறி, வழியனுப்ப வந்தவர்களிடமிருந்து விடை பெற்றோம்.

நானும் ஃபிரிட்ஜும் கப்பலை அடைந்தோம். ஏராளமான பொருள்களைக் கொண்டு செல்ல வேண்டி இருந்ததால் முதலில் ஒரு தெப்பம் கட்டுவது என்று தீர்மானித்தோம். பீப்பாய்கள் சிலவற்றை ஒன்றாகக் கட்டி அவற்றின்மீது பலகைகளை வரிசையாக இணைத்து வைத்தோம். அதன் மீது வைக்கும் பொருள்கள் உருண்டு போகாமல் இருப்பதற்காக நான்கு புறமும் ஓர் அடி உயரத்திற்குச் சுவர்போல் பலகைகளைப் பதித்தோம். பிறகு கயிறால் கட்டிவிட்டு மெதுவாகக் கடலில் இறங்கினோம். இதற்குள் பகல்பொழுது முடிந்து விட்டது. உண்ட பிறகு கேப்டனின் அறையிலேயே படுத்துத் தூங்கினோம். ஆழ்ந்த உறக்கம்.

காலையில் எழுந்தவுடன் படகிலும், தெப்பத்திலும் கப்பலிலிருந்த பொருள்களை ஏற்றத் தொடங்கினோம். கதவுகள், தாழ்ப்பாள்கள், பூட்டுகள், ஜன்னலுக்குப் பொருத்தும் கீல்கள், கப்பல் ஊழியர்களின் இரண்டு பெட்டிகள் போன்றவற்றைத் தெப்பத்தில் ஏற்றினோம். கொல்லர், தச்சர் போன்றோரது கருவிகள் கொண்ட பெட்டிகள் மிகவும் கனமாக இருந்ததால் அவற்றுக்குள் இருந்தவற்றைத் தனித்தனியாக எடுத்து படகில் இருந்த தொட்டிகளில் வைத்தோம். கேப்டனின் பெட்டியில் விலை உயர்ந்த நகைகள், மோதிரங்கள் ஆகியவை இருந்தன. இவற்றுடன் இருபத்தைந்து பழ மரங்களின் கன்றுகள் ஓர் ஓலைக்கட்டில் சுற்றி பத்திரமாக வைக்கப்பட்டிருந்தன. அவை எனக்கு வியப்பை ஏற்படுத்தின. மகிழ்ச்சியுடன் அவற்றையும் எடுத்துக் கொண்டோம்.

இரும்பினாலான பட்டைகள், வண்டிகளுக்குப் பயன்படும் உருளைகள், மண்வெட்டி, கடப்பாரை போன்ற கருவிகளுடன் சோளம் போன்ற தானியங்கள் கொண்ட கோணி மூட்டைகளும் கிடைத்தன. இறுதியாக ஒரு மீன் வலையும் படகுகளைக் கட்டி இழுத்துச் செல்லப் பயன்படும் கயிறும் திமிங்கிலங்களைக் கொன்று பிடிப்பதற்காகப் பயன்படுத்தும் எறியீட்டியும், அத்துடன் இணைந்த நீண்ட வடச்சுருளும் அகப்பட்டன.

தெப்பத்தைப் படகின் பின்புறம் இணைத்துக் கொண்டு புறப்பட்டோம். சற்றுத் தொலைவு செல்வதற்குள் ஏதோ ஒரு பொருள் நீருக்குள் நகர்வதை ஃபிரிட்ஜ் கவனித்தான். தொலைநோக்கிக் கருவியால் பார்த்தபோது அது ஓர் ஆமை என்பது தெரிந்தது. ஃபிரிட்ஜ் எறியீட்டியை வீசினான். ஈட்டி சரியாக அதன் உடலில் பாயவே, அது எங்கள் படகினை இழுக்கத் தொடங்கியது. படகு கவிழ்ந்து விடும் அல்லது பாதை விலகித் தடுமாறக்கூடும் என்கிற பயம் தோன்றியது. ஆனால், காற்று எங்களுக்குச் சாதகமாக வீசியதும் காற்றை மீறித் தன்னால் படகை இழுக்க முடியாது என்பதைக் கண்ட ஆமை, வேறு வழியின்றிக் கரையை நோக்கி நீந்தத் தொடங்கியது.

கடலில் நீரேற்றம் தாழ்ந்த நேரமாக இருந்ததால் கரையிலிருந்து நூறு அடி தூரத்திலேயே படகு தரை தட்டி நின்றது. ஆமையைக் கைக்கோடரியால் வெட்டினேன். ஃபிரிட்ஜ் மகிழ்ச்சியால் வானத்தைப் பார்த்துச் சுட்டான். அதைக் கேட்டுக் குடும்பத்தினர் எங்களை வரவேற்க ஓடி வந்தனர். இரண்டு பையன்களை அனுப்பிச் சறுக்குவண்டியை எடுத்து வரச் சொன்னேன். நாங்கள் ஆறு பேரும் மிகவும் கஷ்டப்பட்டுத் தூக்கிய பிறகுதான் ஆமையைக் கரையேற்ற முடிந்தது. பிறகு வண்டியில் ஏற்றினோம். அதனுடைய எடை முந்நூறு* பவுண்டிற்கு மேல் இருக்கும் என்று தோன்றியது. (ஒரு பவுண்டு எடை என்பது ஏறத்தாழ நமது தற்கால எடைப்படி சுமார் நானூறு கிராம்கள் கொண்டது)

ஈகிள்ஸ்நெஸ்ட்டை அடைந்த பிறகு ஆமையின் மேலோட்டை ஓடைக்கரையில் ஒரு தொட்டி போல் பதித்து வைத்தோம். ஆமை இறைச்சியின் ஒரு பகுதியை அன்றைய உணவிற்காக எடுத்துக் கொடுத்தேன்.

எர்னஸ்ட் அன்று புதிய கிழங்கு ஒன்றைக் கண்டுபிடித்திருப்பதாகக் கூறி, அதை என்னிடம் காட்டினான். இந்தக் கிழங்கின் பெயர் கசாவா. இந்தக் கிழங்கைப் பயன்படுத்தி மேற்கு இந்தியத் தீவினர் ஒரு

வகையான ரொட்டி சுடுவார்கள்.

ஃபிரான்ஸிஸின் துணையுடன் என் மனைவி சமையலில் ஈடுபட்டாள். நானும் மற்ற பிள்ளைகளும் கடற்கரையிலிருந்து பொருள்களை எடுத்துக் கொண்டு வந்தோம். எல்லாவற்றையும் எடுத்துவந்த பிறகு என் மனைவி, கரையில் புதையுண்டிருந்த மதுப்பீப்பாய் ஒன்றை எனக்கக் காட்டினாள். கரையில் ஒதுங்கிக் கிடந்த அதைக் குழந்தைகள் சறுக்குவண்டி மூலம் வீட்டிற்குக் கொண்டு வந்து சேர்த்தனர்.

அன்று இரவு அயர்ந்து உறங்குவதற்கு மெத்து மெத்தென்ற உலர்ந்த புல் நிரப்பிய மெத்தைகள் உதவின.

காலையில் மற்றவர்கள் விழித்துக் கொள்வதற்கு முன்பாக எழுந்து கடற்கரைக்குச் சென்றேன். படகுகள் எந்தவிதச் சேதமும் இன்றி இருப்பதைப் பார்த்த பிறகுதான் எனக்கு நிம்மதி தோன்றியது. சறுக்கு வண்டியை மூன்று முறை பயன்படுத்தினேன். அத்துடன் எல்லாப் பொருள்களும் பத்திரமாக ஈகிள்ஸ்நெஸ்ட்டை அடைந்தன.

குடும்பத்தினரைப் பத்திரமாக ஈகிள்ஸ்நெஸ்ட்டிலேயே விட்டுவிட்டு நான் ஜாக்கையும், ஃபிரிட்ஜையும் அழைத்துக் கொண்டு மீண்டும் கப்பலுக்குச் சென்றேன். கப்பலுக்குள் சென்றவுடன் எளிதாக எடுத்துச் செல்லத்தக்க பொருள் ஏதாவது உள்ளதா என்று ஜாக் தேடினான். அவன் விரும்பியது போலவே உருளைக்கிழங்கு மூட்டை கிடைத்தது.

எல்லாவற்றை விடவும் மிகவும் பயனுள்ள பொருளை ஃபிரிட்ஜ்தான் கண்டுபிடித்தான். ஒரு படகிற்குத் தேவையான மரப் பகுதிகள் அனைத்தும் பகுதி பகுதியாகப் பிரிக்கப்பட்டு இழைத்து, சடடென்று ஒரு படகை வடிவமைப்பதற்கு ஏற்ற வகையில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. ஆனால், அந்தப் பகுதிகளை இணைப்பதற்கு வேண்டிய நேரமில்லாததால் நாங்கள் அதை அங்கேயே விட்டுவிட்டோம்.

வீட்டு உபயோகத்திற்குப் பயன்படும் இரும்புத் தட்டுகள் போன்றவற்றை எடுத்துக் கொண்டு இருட்டுவதற்கு முன் தீவையடையும் நோக்கத்துடன் கப்பலிலிருந்து புறப்பட்டோம்.

நாங்கள் கரையை அடைந்தபோது குள்ள வடிவத்தில் வியப்பிற்குரிய சில உருவங்கள் வரிசையாக நின்று எங்களையே கவனிப்பது போல்

தோன்றியது. "அதெல்லாம் பெங்குவின் பறவைகள்!" என்று ஃபிரிட்ஜ் உறுதியாகக் கூறினான்.

கரையில் முதன் முதலில் அவசரமாகக் குதித்த ஜாக் தன்னிடமிருந்த மரக் கழியைச் சுழற்றிச் சுழற்றி வீசினான். ஐந்தோ ஆறோ பெங்குவீன்கள் தரையில் பட்பட்டென்று விழுந்தன. மற்றவை நீரில் முழ்கி மறைந்தன.

பொழுது இருட்டத் தொடங்கி விட்டதால் நாங்கள் ஆளுக்கொரு தள்ளுவண்டியில் சுலமாகக் கொண்டு செல்ல முடிந்த பொருள்களை மட்டும் படகிலிருந்து இறக்கினோம். பிறகு ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குப் புறப்பட்டோம்.

எர்னஸ்ட் கண்டுபிடித்த கசாவா கிழங்கையும், உருளைக் கிழங்கையும் என் மனைவி ஏராளமாகச் சேகரித்திருந்தாள். எனவே, மறுநாள் காலையில் கசாவா கிழங்கிலிருந்து ரொட்டி தயாரிக்கத் தொடங்கினேன். அந்தக் கிழங்கில் உள்ள நச்சுத் தன்மை வாய்ந்த சாற்றை முதலில் பிழிந்து எடுத்தோம். பிறகு ரொட்டி செய்தோம். இருப்பினும் அந்த ரொட்டியின்மீது எனக்கு நம்பிக்கை இல்லாததால், அதில் கொஞ்சத்தைக் கோழிக்கும், குரங்கிற்கும் கொடுத்துப் பார்த்தேன். எதுவும் நேரவில்லை என்பதையறிந்த பிறகே நாங்கள் ரொட்டியைச் சாப்பிட்டோம். அன்று முழுவதும் நாங்கள் படகு மற்றும் தெப்பத்திலிருந்த பொருள்களை வீட்டிற்குக் கொண்டு வந்து சேர்க்கும் வேலையில் ஈடுபட்டோம்.

கப்பலில் நாங்கள் கண்ட அழகான படகு, சிறிய பீரங்கி ஒன்று உட்பட வேறு பல வசதிகளும் கொண்டது. அந்தப் படகை இணைத்து, தீவிற்குக் கொண்டு வந்து சேர்க்க நீண்ட நாட்களாயின. இதற்காக நானும் இரண்டு மூத்த பிள்ளைகளும் கப்பலுக்குச் சென்றபோது, என்னுடைய மனைவி நேரத்தை வீணாக்காமல் மற்ற இரண்டு குழந்தைகளின் உதவியுடன் ஜெல்தீமிலேயே தங்கிக் காய்கறித் தோட்டம் போட்டாள்.

ஒரு வகையாக எல்லாப் பகுதிகளையும் இணைத்து படகை வடிவமைத்தோம். இவ்வளவு பெரிய படகை முன்னர் செய்ததுபோல் கடலில் இறக்குவது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. கப்பலின் ஒரு பகுதியைப் பீரங்கியால் துளைத்து வழியேற்படுத்திய பிறகு படகைக் கடலில் இறங்கினோம். நீரில் இறங்கிய படகு ஒரு கடற்பறவை போல் அழகாக மிதந்ததுடன், விரைவாகவும் பயணம் செய்தது. நாங்கள் அதிக நாட்கள் கடினமாக உழைத்தது வீண்போகவில்லை!

படகைத் தீவிற்குக் கொண்டுவந்த நாங்கள் வழக்கமாக படகைக் கட்டி வைக்கும் பகுதியிலேயே அதையும் கட்டி வைத்துவிட்டு, ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குப் புறப்பட்டோம்.

## 11

அந்தத் தீவிற்கு நாங்கள் குடிவந்து இரண்டு வாரங்கள் ஆகிவிட்டன. இன்று ஞாயிற்றுக்கிழமை. நாங்கள் வழக்கம்போல பைபிள் படித்தோம். கடந்த ஞாயிற்றுக்கிழமையன்று குழந்தைகள் பலவிதமான உடற்பயிற்சிகளில் ஈடுபட்டனர். இந்த ஞாயிற்றுக்கிழமை அவர்களுக்கு வீசுகவண் பயன்படுத்தும் முறையைக் கற்றுக் கொடுத்தேன். தென்னமெரிக்காவில் வாழும் சிவப்பிந்தியர்கள் இந்த வீசுகவணைப் பயன்படுத்திக் காட்டு விலங்குகளை வேட்டையாடுவது வழக்கம்.

ஒரு கயிற்றின் இரண்டுமுனைகளிலும் கற்களை உறுதியாகக் கட்டியிருப்பார்கள். இக்கயிறைச் சுழற்றி சுழற்றி, தாங்கள் பிடிக்க விரும்பும் விலங்கின்மீது விசையுடன் வீசுவார்கள். கயிறு அவற்றின் உடம்பில் படிந்து கனமான கற்கள் இரண்டும் இரண்டு பக்கமாக விழும். இரண்டு கற்களும் இரண்டு எதிர் எதிர்த்திசையில் இழுத்துச் சுற்றுவதால் கயிறு, விலங்கின் உடலை இறுக்கிச் சுற்றிக் கொள்ளும். இதனால் விலங்கு அசைய முடியாமல் அப்படியே நின்று விடும். உடனே வேட்டைக்காரர் ஓடிச்சென்று அதைப் பிடித்துக் கொள்வார். ஃபிரிட்ஜ் இந்த வீசுகவன் முறையை மிகவும் விரைவிலேயே கற்றுக் கொண்டான்.

மறுநாள் நாங்கள் கப்பலிலிருந்து கொண்டுவந்த பொருள்களைச் சரிபார்த்துக் கணக்கிட்டோம். பழச்செடிகளும் நாற்றுகளும் இதுவரை சரியாகப் பராமரிக்கப்படாததால் சற்று வாடிவிட்டிருந்தன. அவற்றைப் பாத்திகளில் நட்டுத் தண்ணீர் ஊற்றினேன். பகல்பொழுது முழுவதும் இந்த வேலையிலேயே கழிந்தது.

செவ்வாய்கிழமையன்று காலையில் நாங்கள் குடுக்கைக் காட்டை நோக்கிப் புறப்பட்டோம். பல பொருள்களைச் சேமித்து வைக்கவும், புழங்குவதற்கும் பாத்திரங்கள் தேவையாக இருந்ததால் அங்கிருந்து நிறையக் குடுவைகளைக் கொண்டுவர முடிவு செய்தோம். பயணத்தின்போது செந்நாரைச் சதுப்பைத் தாண்டிய பிறகு செழிப்பான ஒரு நிலப்பகுதி தென்பட்டது. டர்க்குடன் ஃபிரிட்ஜ் வேகமாக அந்தப்

பகுதிக்கு விரைந்தான். சட்டென்று டர்க், ஒரு பெரிய பறவையை விரட்டத் தொடங்கியது. ஃபிரிட்ஜ் துப்பாக்கியால் சுட்டதில் அந்தப் பறவைக்குச் சிறிய அளவில் காயம் ஏற்பட்டதால், அது மறுபடியும் விரைவாக ஓடத் தொடங்கியது. ஃபுளோராவும் விடாமல் அந்தப் பறவையை பிடிக்கப் பாய்ந்தது.

தன்மீது பாயும் டர்க்கை அந்தப் பறவை மிக வலுவாகக் காலால் உதைத்தது. எனினும் ஃபுளோரா அந்தப் பறவையை ஓடவிடாமல் பிடித்து நிறுத்தியது. அப்படியும் பறவை தன்னுடைய போராட்டத்தை நிறுத்தவில்லை. நான் உடனே அதனுடைய கண் பார்வை மறையும்படி கைக்குட்டை ஒன்றை வீசினேன். அதனால் பறவை திக்குமுக்காடியது. அதனுடைய இரண்டு கால்களையும் கட்டி எடுத்துக் கொண்டேன். அந்தப் பறவையை நாங்கள் வளர்க்க முடிவு செய்தோம்.

எங்களது பயணம் தொடர்ந்தது. வெயில் அதிகமாக இருந்ததால் தாகம் ஏற்பட்டது. பக்கத்தில் நீர்நிலைகள் எதுவும் தென்படவில்லை. எர்னஸ்ட் தற்செயலாக ஒரு செடியின் தண்டை அறுத்தான். அதிலிருந்து வழிந்த சாறு தண்ணீர் போல தோன்றவே எல்லோரும் அதையே பருகினோம்.

பயணத்தைத் தொடர்ந்து காட்டை அடைந்தோம். எல்லோருமாகச் சேர்ந்து காய்களைப் பறித்துக் குடுக்கைகளைச் சேகரித்தோம். தண்ணீர்த் தாகம் கொண்ட எர்னஸ்ட் தண்ணீரைத் தேடிப் புறப்பட்டான். விரைவிலேயே திரும்பி வந்த எர்னஸ்ட் “அப்பா, காட்டுப்பன்றி!” என்று கூவினான்.

ஃபிரிட்ஜும் நானும் அவன் சுட்டிக் காட்டிய திசையில் ஓடினோம். எங்களுக்கு முன்னால் பாய்ந்து சென்ற நாய்கள் இரண்டும் பன்றியின் இரண்டு செவிகளையும் ஆளுக்கு ஒன்றாகக் கடித்து நிறுத்தின. நாங்கள் அருகில் சென்று பார்த்தபோதுதான் அது எங்களிடமிருந்து தப்பிச் சென்ற பெண்பன்றி என்பது புரிந்தது. இந்தச் கூரத்தனத்துக்கா ஓடிவந்தோம் என்று நினைத்ததும் சிரிப்புத் தோன்றியது.

ஜாக் மறுபடியும் தண்ணீரைத் தேடிச் சென்றான். “அப்பா, முதலை அப்பா...!” என்ற குரல் அவனிடமிருந்து எழுந்தது. ‘நீர் நிலை இல்லாத இடத்தில் முதலை இருக்காதே?’ என்ற சந்தேகத்துடனேயே நாங்கள் அவன் நின்றிருந்த இடத்தை அணுகினோம். பக்கத்துப் பாறை மீது பெரிய ஓணான் ஒன்று உறங்கிக் கொண்டிருந்தது. பருமனான காட்டுக்கொடி ஒன்றை அறுத்து சுருக்குப் போட்டு அந்த ஓணானைப்

பிடிக்க முயன்றேன். மெதுவாகச் சீழ்க்கை ஒலியை எழுப்பியபடி ஓணானை நெருங்கினேன். ஓணான் கண் விழித்தது என்றாலும். சீழ்க்கை ஒலியில் மயங்கியது போல் தலையை மட்டும் லேசாக உயர்த்திப் பார்த்தது.

நான் கையில் தயாராக வைத்திருந்த கொடிச் சுருக்கை வீசினேன். அதன் கழுத்து, சுருக்கில் மாட்டிக் கொண்டது. இருந்தாலும் அது வாலைச் சுழற்றிச் சுழற்றி அடித்தது. அதன் மூக்குத்துளையில் கூரான குச்சி முனையால் குத்தினேன். ரத்தம் பெருகியதுடன் ஓணான் இறந்தும் போனது. ஓணான் இறந்தும் போனது. ஓணானின் உடலை என்னுடைய தோளின் மீது ஏற்றிக்கொண்டேன். குழந்தைகள் சற்று நேரம் ஒவ்வொருவராகப் பின்புறமிருந்த அதன் வாலைத் தாங்கி வந்தனர். ஓர் அரசனின் மேலங்கித் துணியைப் பின்புறமாக அடிமைகள் ஏந்தி வருவது போல் இருந்தது அந்தக் காட்சி!

நாங்கள், குடும்பத்தினர் ஓய்வெடுக்கும் இடத்தை அடைந்து மற்றவர்களுடன் சேர்ந்து சாப்பிட்டோம். இரவு நெருங்கிக் கொண்டிருந்ததால், சறுக்குவண்டியை அங்கேயே விட்டுவிட்டு நாங்கள் ஈகிள்ஸ்நெஸ்ட்டை நோக்கித் திரும்பத் தொடங்கினோம்.

மறுநாள் நானும் ஃபிரிட்ஜும் கழுதையுடன் சறுக்கு வண்டியைக் கொண்டிருந்தது. (சேங்கொட்டை மரம் என்றும் இது சொல்லப்படுகிறது). பன்றி எங்களைப் பார்த்துப் பயப்படவில்லை. நாங்கள் நிறையச் சிந்தூர விதைகளைச் சேகரித்தோம். அப்போது ஃபிரிட்ஜ் மூன்று பறவைகளையும் சுட்டு வீழ்த்தினான்.

மிக அருகில் எங்கோ பறை அடிப்பது போன்ற சத்தம் கேட்டதால் நாங்கள் பயந்தோம். ஒருவேளை காட்டு மனிதர்களின் போர்ப்பறையை என்றுகூட நினைத்தோம். பிறகு மெதுவாக ஊர்ந்து பக்கத்துக் காட்டின் ஓரமாகச் சென்று கிளைகளை விலக்கிப் பார்த்தோம். சேவல் போன்ற மிகப் பெரிய பறவை ஒன்று, பட்டுப்போன ஒரு மரத்தின் கிளை மீது உட்கார்ந்திருந்தது. அது சிறகுகளைப் புடைக்க வைத்து வீசிய சத்தமே பறை ஒலிபோல் கேட்டது. அதற்குச் சுற்றும் பலவகையான பறவைகள் கூட்டம் கூட்டமாக குழுமியிருந்தன. ஒலியெழுப்பிய பறவையின் கழுத்தில் வானவில் போல வண்ணங்கள் தெரிந்தன. நான் அதையே பார்த்துக் கொண்டிருந்தபோது திடுமென்று வெடிச்சத்தம் கேட்டது. ஃபிரிட்ஜ்தான் அந்தப் பறவையைச் சுட்டிருந்தான். வெடிச்சத்தம் கேட்ட மற்ற பறவைகள் பறந்தோடின. இறந்து விழுந்த பறவையைக் கழுதை

மேல் ஏற்றிக்கொண்டு எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

குளிர்ச்சியான மற்றொரு தோப்பு, வழியில் தென்பட்டது. அங்கிருந்த பழங்கள் பார்வைக்கு அழகாக இருந்தன. அந்தப் பழங்களிலிருந்து மெழுகு கிடைக்குமென்று தோன்றியது. அப்படியானால் இனிமேல் இருட்டுவதற்கு முன்னால் சாப்பிட்டுவிட வேண்டுமென்ற கட்டாயமில்லை என்பதால் மகிழ்ந்தேன். எனவே ஒரு பை நிறைய பழங்களைப் பறித்துக்கொண்டு அங்கிருந்து கிளம்பினோம்.

சற்றுத் தொலைவில் விசித்திரமான மற்றொரு காட்சியைப் பார்த்தோம். கருமை நிறம் கொண்ட பறவைக்கூட்டம் ஒன்று ஒரே குடியிருப்பாக ஒரே மரத்தில் வசித்துக் கொண்டிருந்தது. வட்ட வடிவமான ஒரு பெரிய கூடு அந்த மரத்தில் தொங்கியது. அதில் ஏராளமான வாசல்கள். ஒவ்வொரு வாசலிலும் ஒரு பறவை குடும்பம் வசித்தது. பச்சைக்கிளி ஒன்று அந்தக் கருமை நிறப் பறவைகளுடன் போராடியது. அந்தக் கரிய பறவைகளில் ஒன்றையாவது பிடிக்கலாம் என்று ஃபிரிட்ஜ் மரத்தின் மீது ஏறினான். கூட்டின் ஒரு வாசலில் கையை ஓங்கிக் கொத்தியது. ஃபிரிட்ஜ் அங்கிருந்து நழுவி விழப் பார்த்தான். நல்லவேளையாக விழாமல் தப்பித்துக் கொண்டான். கடைசியாக அவன் ஒரு பச்சைக் கிளியைப் பிடித்தான். அதைக் கூண்டில் வைத்து வளர்க்கப் போவதாகவும், அதற்குப் பேசக் கற்றுக்கொடுக்கப் போவதாகவும் கூறினான்.

பயணத்தின்போது காட்டின் மற்றொரு பகுதி எங்கள் வழியில் குறுக்கிட்டது. அங்கு ஏராளமான ரப்பர் மரங்கள் வளர்ந்திருந்தன. அவற்றைக் கண்டதும் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி தோன்றியது. புதிய காலணிகள் செய்து கொள்ளலாமே என்பதுதான் என் மகிழ்ச்சிக்குக் காரணம்.

மேலும் சற்றுத் தொலைவு சென்ற பிறகு நாங்கள் ஒரு தென்னந்தோப்பை அடைந்தோம். தோப்பு, கடற்கரை வரை நீண்டு பரவியிருந்தது. இடது புறத்தில் கடலின் குடாப் பகுதி இருந்தது. அங்கிருந்த தென்னை மரங்களின் ஊடாக மற்றொரு வகை மரமும் இருப்பதைப் பார்த்தேன். அவை ஜவ்வரிசி மரங்கள் என்பது தெரிந்தது. ஓர் அடிமரத்தைக் கைக்கோடரியால் லோசாகப் பிளந்தேன். உதிர்ந்த மாவுப் பொருளை வாயிலிட்டு ருசித்துப் பார்த்தேன். அது ஜவ்வரிசி மரம் என்பதில் எந்தவிதமான சந்தேகமுமில்லை! அதன்பிறகு நாங்கள் வீடு திரும்பத் தொடங்கினோம்.

மறுநாள் காலையில் என் மனைவியும் குழந்தைகளும் மெழுகுவத்திகள் செய்து தருமாறு என்னை வற்புறுத்தினர். நான் கொண்டு வந்திருந்த மெழுகுப் பழங்களை ஒரு பெரிய பாத்திரத்தில் போட்டு அடுப்பின் மீது வைத்து, தீயை எரித்தேன். சற்று நேரத்தில் பழங்கள் வெந்து பாத்திரத்தின் மேற்புறத்தில் மெழுகு படியத் தொடங்கியது. அந்த மெழுகை வடித்தெடுத்து வேறொரு பாத்திரத்தில் ஊற்றினேன். என் மனைவி, பாய்த்துணியிலிருந்து பிரித்தெடுத்த உறுதியான நூல்களைத் துண்டு துண்டாக்கி என்னிடம் தந்தாள். நான் ஒவ்வொரு திரியையும் உருகிய மெழுகில் தோய்த்துத் தோய்த்து நான் விரும்பிய அளவு வடிவம் பெற்றவுடன் அப்படியே காற்றில் உலர வைத்தேன். அன்று இரவே என் மனைவி ஒரு மெழுகுவத்தியை ஏற்றி வைத்தாள். அதன் மூலம் கிடைத்த வெளிச்சம் எங்களுக்குப் போதுமானதாக இருந்தது.

எங்களிடம் பசுமாடு இருந்ததால் தேவையான தயிர் கிடைத்தது. இருப்பினும் அதிலிருந்து வெண்ணெய் எடுக்க முடியவில்லையே என்று மனைவி வருத்தப்பட்டாள். தயிர் கடைவதற்கு மத்து இல்லாததுதான் காரணம். உடனே எப்போதோ ஒரு முறை படித்த செய்த என் நினைவிற்கு வந்தது. தயிரை குடுவையில் ஊற்றி நன்றாக மூடினேன். பின்பு குடுவையை ஒரு தார்ப்பாய்த் துண்டின் மையத்தில் வைத்து நானும் எனது மூன்று குழந்தைகளும் ஆளுக்கு ஒரு முனையை மாற்றி மாற்றி அசைத்தோம். இதனால் நடுவில் இருந்த குடுவை அங்குமிங்குமாக உருண்டது. குழந்தைக் ஒருவித வேடிக்கையாகவே என்னுடன் இப்படிச் செய்தனர். ஏறத்தாழ ஒரு மணி நேரம் இவ்வாறு செய்த பிறகு குடுவையைத் திறந்து பார்த்தோம். நான் நினைத்தபடியே தயிருக்கு மேலாக வெண்ணெய் திரண்டிருந்தது! நாங்கள் மகிழ்ச்சியடைந்தோம்.

நான்கு வண்டிச் சக்கரங்களை கப்பலிலிருந்து எடுத்து வந்திருந்தோம். அவற்றைச் சறுக்குவண்டியில் பொருத்தி அதை ஒரு முழுமையான வண்டியாக மாற்ற முடிவு செய்தேன். ஆனால், சறுக்குவண்டியின் நடுவே பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு சக்கரங்களை மட்டுமே பொருத்த முடிந்தது. இப்பொழுது எங்கள் சறுக்குவண்டி இரண்டு சக்கர வண்டியாக மாறியது.

கப்பலிலிருந்து எடுத்துவந்து நட்டுவைத்திருந்த இரண்டு கன்றுகளைப் பிடுங்கி வேறு புதிய இடத்தில் நடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஜெல்தீம் வீட்டைப் பகைவர்களிமிருந்தும் காட்டு

விலங்குகளிடமிருந்தும் காப்பாற்றவதற்கும், அதைச் சுற்றி நிழல் தருவதற்காகவும் மேலும் பல புதிய மரக்கன்றுகளை நட்டு வைத்தேன். நரியாற்றின் கரையிலும் சில கன்றுகளை நட்டு வைத்தேன். அந்தத் தீவின் வியப்பிற்குரிய தட்ப - வெப்ப நிலை காரணமாக அவையெல்லாம் விரைவிலேயே செழிப்பாக வளரத் தொடங்கின.

ஆற்றிற்குக் குறுக்காகக் கட்டியிருந்த எங்களது பாலத்தைத் தொங்கு பாலமாக மாற்ற விரும்பினேன். ஆனால், அதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று ஒதுக்கி வைத்தேன். தற்சமயத்திற்கு பாலத்தைக் கடந்த பிறகு பலகைகளை உருவி எடுத்து விடுவது நல்லது என்று முடிவு செய்தேன்.

மேற்குறிப்பிட்ட வேலைகளில் ஏறத்தாழ ஆறு வாரங்கள் கடந்தன. இந்தச் சமயத்தில் எங்கள் கையிலிருந்த துணிமணிகள் நைந்து போனதால், நான் மீண்டும் கப்பலுக்குச் சென்று வர விரும்பினேன்.

ஒரு நாள் காலையில் மூத்த பிள்ளைகள் மூன்று பேரையும் அழைத்துக்கொண்டு புதிய படகிலேறிக் கப்பலை அடைந்தேன். இரண்டு பீர்ப்பாய் தார் எண்ணெய், ஏராளமான துப்பாக்கி ரவைகள், வெடிமருந்து, சிறிய பீரங்கிகள் போன்றவற்றைப் படகில் ஏற்றிக் கொண்டோம். பெரிய பீரங்கியை எங்களால் அது இருந்த இடத்தைவிட்டு நகர்த்தக்கூட முடியவில்லை.

சில நாட்களுக்குள் அடிக்கடி வந்து கப்பலிலிருந்து பொருள்கள் அனைத்தையும் எடுத்துச் சென்றோம். பெரிய பீரங்கி ஒன்றும், செம்பு உலோகத்தாலான நான்கு பெரிய அண்டாக்களுமே கப்பலில் மீதமாக இருந்தன. பீரங்கியிலிருந்து கழற்ற முடிந்த பகுதிகளையெல்லாம் கழற்றி எடுத்துப் படகில் வைத்தேன். பீரங்கியுடனும் அண்ணடாக்களுடனும் நிறையப் பீப்பாய்களை வலுவாகக் கட்டினேன். எப்படியும் அவை கரையில் ஒதுக்கப்படம் என்று நினைத்தேன். மற்ற பொருள்களையெல்லாம் படகில் ஏற்றிக் கொண்டோம். கப்பலை வெடி வைத்துத் தகர்க்க முடிவு செய்தேன். தேவையான அளவிற்கு அந்தக் கப்பலின் பக்கப் பலகைகள் கிடைக்குமே! அதற்காகக் கப்பலின் அடித்தளத்தில் வெடிமருந்துப் பீப்பாய் ஒன்றை வைத்து அதனுடன் நீண்ட திரி ஒன்றைப் பிணைத்தேன். திரியில் நெருப்பு வைத்துவிட்டு, உடனே நாங்கள் தீவிற்குத் திரும்பினோம்.

அன்றைய இரவு உணவிற்குப் பிறகு கடலிலிருந்து பிரம்மாண்டமான

வெடியோசை கேட்டது. அருகிலிருந்த பாறை மீது ஏறி நின்று வேடிக்கை பார்த்தோம். வானளாவ நெருப்புக் கொழுந்துகள் உயர்ந்தன. கப்பல் தூள்தூளாக டிவத்துச் சிதறிற்று. எங்கள் தாய்நாட்டுடன் எங்களைப் பிணைத்திருந்த கடைசிக் கண்ணியும் அத்துடன் அறுந்துவிட்டது. மனவருத்தத்துடன் படுத்துக் கொண்டோம்.

மறுநாள் காலையில் நாங்கள் கடற்கரைக்குச் சென்றோம். கரை நெடுகப் பலகைகள் இறைந்து கிடந்தன. பெரிய பீரங்கியும், செப்பு அண்ணடாக்களும் மிதந்தபடி கரை ஒதுங்கியிருந்தன. மிகுந்த சிரமத்துடன் அவற்றைக் கரையில் இழுத்துப்போட்டோம். பீரங்கியுடன் உருளைகளை இணைத்தேன். பசுவும், கழுதையும் அதை இழுத்து வந்தன. பீரங்கியை ஜெல்தீமிற்கு அருகே குன்றின் உச்சியில் ஏற்றி, தார்ப்பாய் ஒன்றினால் பாதுகாப்பாக மூடி வைத்தேன். பிறகு மழையிலிருந்து பாதுகாக்க மேற்புறம் ஒரு கூரையையும் வேய்ந்தேன்.

பிறகு எல்லோரும் ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குத் திரும்பினோம்.

## 12

ஜெல்தீம் வீட்டுக்குச் சுற்றிலும் நட்டு வைத்த மரக்கன்றுகள் காற்றுக்கு ஈடுகொடுக்க முடியாமல் தள்ளாடின. எனவே அவற்றுக்குப் பற்றுக்கோடாகச் சில மூங்கில் கழிகளை நட்டு வைக்க விரும்பினேன்.

எங்களுக்கு மேலும் மெழுகுப்பழங்கள், ரொட்டிக் கிழங்குகள் போன்றவை தேவைப்பட்டன. எங்கோ ஓடிவிட்ட பெண் பன்றியையும் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. எல்லோருக்கும் கரும்பு தின்பதற்கும் ஆவலேற்பட்டது. எனவே எல்லாரும் ஒட்டு மொத்தமாக ஏமாற்றமுனையை நோக்கிக் கிளம்பினோம்.

வண்டியில் எங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களையும், வெடி மருந்துகளையும் தாராளமாக எடுத்துக்கொண்டு பயணத்தைத் தொடங்கினோம். உருளைக்கிழங்கு வயல்களைக் கடந்த பிறகு பறவைக் குடியிருப்பை அடைந்தோம். ஒன்றாகக் கூடி வாழும் பறவைக் கூட்டை எல்லாரும் பார்க்க விரும்பினர். அதனால் சற்று நேரம் அங்கு இளைப்பாறினோம்.

பிறகு ரப்பர் காட்டிற்குள் நுழைந்தோம். சில மரங்களைக் கோடரியால் மெதுவாகக் கீறினேன். கீறல்களின் வழியாக ஒழுங்காகப் பால் வழிவதற்காக இலையை மடைபோல் செருகினேன். வழியும் பாலை ஏந்துவதற்கு, குடுவைகளை மரத்தின் அடிப்புறத்தில் கட்டி வைத்தேன். நாங்கள் திரும்புவதற்குள் குடுவையில் ரப்பர் பால் நிறைந்துவிடும் என்று நினைத்தேன். மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தோம்.

தென்னந்தோப்பை அடைந்தோம். கரும்புகளுக்கும் மூங்கில்களுக்கும் நடுவே அழகான ஓர் இடத்தில் ஓய்வெடுத்தோம். அந்த இடத்தின் இயற்கைச் சூழல் எல்லோரது மனத்தையும் கவர்ந்தது.

மதியத்திற்கு மேல் பெரிய பிள்ளைகள் தென்னை மரத்தின் மீதேறி ஏராளமாகத் தேங்காய் பறித்தனர். உடலை மரத்துடன் கயிற்று வளையத்தால் பிணைத்தபடி மரமேறும் முறையை நான் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்திருந்தேன். அன்றைய இரவை அங்கேயே கழிக்க விரும்பியதால் தற்காலிகமாகத் தார்ப்பாயால் ஒரு கூடாரம் அமைத்தோம்.

இந்த முயற்சியில் நாங்கள் ஈடுபட்டிருந்தபோது அருகே மேய்ந்து கொண்டிருந்த கழுதை திடீரென்று உரத்த குரலில் கத்தத் தொடங்கியது. திடுக்கிட்டுத் திரும்பினேன். அது துள்ளி உதைத்தபடியே காட்டிற்குள் ஓடியது. அதை இழுத்து வருவதற்காக நாங்கள் நாய்களை ஏவினோம். நாய்களைத் தொடர்ந்து நானும் ஃபிரிட்ஜும் பின்னாலேயே சென்றோம். பயப்படத்தக்க வகையில் எதுவும் தட்டுப்படவில்லை. நாய்களும் திரும்பிவிட்டன. கழுதை தானாகவே வீடு வந்து சேரும் என்று நினைத்து நாங்கள் திரும்பிவிட்டோம்.

மறுநாள் காலையில் நாங்கள் உணவை முடித்துக் கொண்ட பிறகும் கழுதை திரும்பி வராதது எங்களுக்கு வியப்பை ஏற்படுத்தியது. மற்றவர்களிடம் கரும்பு, தேங்காய், மூங்கில் முதலியவற்றை முடிந்த அளவுக்குச் சேகரித்து வைக்குமாறு கூறிவிட்டு, நான் ஜாக்குடன் கழுதையைத் தேடிப் புறப்பட்டேன்.

மிகவும் சிரமப்பட்டு மூங்கில் காட்டைத் தாண்டிய பிறகும் கழுதையின் குளம்படிச் சுவடுகள் நீண்டு சென்று கொண்டிருந்தன. அவற்றைப் பின்தொடர்ந்து அரைமணி நேரம் நடந்தோம். இப்பொழுது நாங்கள் ஏறத்தாழக் காட்டின் விளிம்பை அடைந்தோம். மறுபுறம் விரிந்து பரந்த கடல் தென்பட்டது.

வலதுபுறம் அகலமான ஓர் ஆறு கடலுடன் கலந்தது. சமவெளிக்கும் ஆற்றிற்கும் நடுவே உயர்ந்திருந்த சில பாறைகளைத் தாண்டியபோது, மறுபடியும் கழுதையின் சுவடுகள் தென்பட்டன. அத்துடன் வேறு பல குளம்புகளும் புலப்பட்டன. கவனமாகப் பார்த்தபடி நாங்கள் அழகானதொரு சமவெளியை அடைந்தோம். அதன் நடுவே ஆங்காங்கு தென்னை மரங்கள் கூட்டம் கூட்டமாகத் தோப்புகளாகத் தெரிந்தன. சற்றுத் தூரத்தில் எருமைக் கூட்டம் ஒன்று தென்பட்டது.

ஒருவேளை அவற்றிற்கு நடுவே நமது கழுதை இருக்கலாம் என்று கருதி அவற்றை நெருங்கினோம். எருமைகள் எண்ணிக்கையில் அதிகமாகவும், முரட்டுத்தனமாக தோற்றத்துடனும் விளங்கின. படுத்துக் கிடந்த காட்டெருமைகள் சில எங்களைக் கண்டதும் எழுந்து நின்றன. இந்த விலங்குகள் இதுவரை எந்த மனிதரையுமே பார்த்தது இல்லையென்று தோன்றியது. எனவே எங்களைப் பார்த்ததும் பயப்படவோ, தாக்க முற்படவோ இல்லை. இதற்குள் டர்க்கும் ஃபுளோராவும் எங்களருகே வந்து நின்றன.

நாய்களைப் பார்த்தவுடன் எருமைகள் பயங்கரமாக உறுமியபடி அவற்றின் மீது பாயத் தயாராயின. நாய்களோ, தங்களை நோக்கி வரும் ஆபத்தை உணராமல் பாய்ந்து சென்று ஒரு சிறிய காட்டெருமையின் இரண்டு காதுகளையும் பற்றி இழுத்து வந்தன. நாய்களை மற்ற எருமைகள் தாக்கிவிடக்கூடாது என்பதற்காக நாங்கள் இருவரும் துப்பாக்கியால் சுடத் தொடங்கினோம். வெடியோசை கேட்டு முதலில் திகைப்படைந்து நின்ற எருமைகள், பிறகு கண்டபடி தலைதெறிக்கும் வேகத்தில் சிதறியோடத் தொடங்கின.

காயம்பட்டதாலும், தன்னுடைய கன்றைப் பிரிந்ததாலும் தாய் எருமை ஒன்று ஆத்திரம் கொண்டு நாய்கள் மீது பாய்ந்தது. நான் அதைச் சுட்டுக் கொன்றேன். காட்டெருமைக் கன்றை எப்படி உயிருடன் பிடிப்பது என்று யோசித்தேன். அதற்குள் ஜாக் கன்றின் மீது வீசுகவணை எறிந்தான். அதன் தாக்குதலில் கன்று நிலத்தில் விழுந்து உருண்டது. சட்டென்று அதனுடைய கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டினேன். பின்பு அதை இழுத்துக் கொண்டு நாங்கள் திரும்பினோம்.

நாங்கள் ஆற்றங்கரையை அடைந்தபோது நரியொன்று எங்கள் முன்னால் துள்ளிக் குதித்து வந்து சட்டென்று மறைந்தது. நாய்கள் அதைத் தொடர்ந்து சென்று தாக்கிக் கொன்றன. நரி எங்களை விரட்ட முயற்சி செய்ததற்குக் காரணம், அருகிலிருந்த குகையில் அதனுடைய

குட்டிகள் சில இருந்ததுதான். ஜாக் அந்த குகைக்குள் செல்வதற்குள் நாய்கள், நரிக்குட்டிகளைக் கடித்துக் குதறி விட்டிருந்தன. ஒரே ஒரு குட்டியை மட்டும் காப்பாற்றியெடுக்க ஜாக்கினால் முடிந்தது. அதைப் பாதுகாப்பாக வளர்ப்பதாக ஜாக் கூறியபோது, நான் மறுப்புக் கூறவில்லை.

எங்கள் குடும்பத்தினர் தங்கியிருந்த இடத்தை அடைந்தோம். எருமையும் நரியும் எங்களிடம் அகப்பட்ட கதையைக் கூறினோம். நாங்கள் இல்லாத நேரத்தில் குரங்குக் கூட்டம் ஒன்று கூடாரத்திற்குள் புகுந்து கிழங்குகளைச் சிதறடித்தும் தேங்காய்களை வீசியெறிந்தும் ரகளை செய்திருந்தன.

ஃபிரிட்ஜ், ஏமாற்றமுனையிலிருந்து பிடித்து வந்த ஒரு கழுகுக் குஞ்சை என்னிடம் காண்பித்தான். அதை வேட்டையாடப் பழக்கப் போவதாகக் கூறினான். அதனால் கழுகிற்கு கண்கட்டுப் போட்டிருந்தான்.

எருமைக் கன்றுக்கும், நரிக்குட்டிக்கும் பசுவின் பாலைக் கொடுத்தேன். எருமைக்கு வயிறு நிறையவில்லை. உருளைக்கிழங்கு ஊட்டினேன். பிறகு எருமைக் கன்றை வாசலுக்கு அருகிலேயே கட்டி வைத்தேன். நாய்களைக் காவலுக்கு வைத்துவிட்டு நாங்கள் படுத்து உறங்கத் தொடங்கினோம்.

மறுநாள் கூடாரத்தைக் கலைத்துவிட்டு திரும்பத் தொடங்கினோம். எருமையையும் பசுவையும் வண்டியில் பூட்டினோம். முதலில் எருமைக்கன்று சற்றுப் பின்வாங்கினாலும், நான் அதனுடைய கழுத்துக் கயிற்றைப் பிடித்தபடி முன்புறமாக நடந்ததால், பிறகு ஒழுங்காக வண்டியை இழுக்கத் தொடங்கியது.

இம்முறை வந்த வழியாகவே திரும்பினோம். மெழுகுப் பழங்களைப் பறிப்பதற்காகப் பயணம் சற்று நேரம் தடைப்பட்டது. பழப் பைகளை வண்டியில் ஏற்றிக்கொண்ட பின் பயணம் மீண்டும் தொடர்ந்தது.

குறிப்பிட்ட ஒரு பகுதியை அடைந்தவுடன், நாய்கள் இரண்டும் உரத்த குரலில் மறுபடி குரைக்கத் தொடங்கின. புதரை விலக்கிப் பார்த்தோம். எங்களிடமிருந்து தப்பித்த பெண்பன்றி அங்கு இருந்தது. அத்துடன் புதியதாக ஏழு பன்றிக் குட்டிகளும் இருந்தன. குட்டிகள் வளரும் வரையில் பன்றி அங்கேயே இருக்கட்டும் என்று விட்டுவிட்டு எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம்.

ஈகிள்ஸ்நெஸ்ட்டில் எல்லாப் பொருள்களும் நாங்கள் வைத்துவிட்டுப் போனது போலவே, எந்தவித மாற்றமுமின்றி இருந்தன. எருமையையும், நரியையும் கட்டி வைத்தோம். கழுகு, கிளிக்கு அருகிலேயே ஒரு கிளையில் கட்டப்பட்டது. கழுகு கண்கட்டை அவிழ்த்த மறுகணமே அது சீறியெழுந்து தாக்கியது. மற்ற பறவைகள் எல்லாம் பறந்து தப்பித்தன. கிளி மட்டும் துண்டு துண்டாகக் கிழிபட்டது.

ஃபிரிட்ஜ் அடங்காத கோபம் கொண்டவனாகக் கழுகை அப்பொழுதே கொல்ல விரும்பினான். நல்ல வேளையாக எர்னஸ்ட் தடுத்தான். கழுகைத் தனக்குக் கொடுத்து விடுமாறு கேட்டான். ஃபிரிட்ஜ் மறுத்தான். குரங்குக்குட்டியை வேண்டுமானால் எடுத்துக் கொள்ளச் சொன்னான். உடனே எர்னஸ்ட் பறவைகளைப் பழக்கும் வித்தையை ஃபிரிட்ஜுக்குக் கற்றுக் கொடுத்தான். ஒரு வகையான புகையை எழுப்பினால் கழுகை வசப்படுத்தி விடலாம் என்றான். ஃபிரிட்ஜ் உடனே அதைச் சோதித்து பார்த்துவிட்டு உண்மையை உணர்ந்தான்.

பல நாள்களாக என் மனைவி சுட்டிக் காட்டிக் கொண்டிருந்த ஒரு குறையை, மறுநாள் மாலையில் மறுபடியும் வலியுறுத்தினாள். மரத்தின் மேலுள்ள வீட்டிற்குச் செல்ல ஏணிக்குப் பதிலாக ஒரு படிக்கட்டு அமைக்க வேண்டுமென்றாள்.

மரத்தின் வெளிப்புறம் படிக்கட்டு அமைத்தால் அதனால் ஏதாவது பிரச்சினைகள் ஏற்படலாம். மரத்தின் உட்புறம் உள்ளீடற்றதாக இருப்பதால், உட்புறமாகவே படிக்கட்டு அமைக்கலாம் என்று நான் நினைத்தேன். அதற்கு உதவுவதுபோல் அடிமரத்தில் ஒரு பெரிய பொந்தும் இருந்தது. பொந்து மேற்புறம் எவ்வளவு உயரம் வரைசெல்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளப் பிள்ளைகள் முயன்றனர். பொந்தின் வாய்ப்புறத்தைப் பெரிதாக்குவதற்காக சுத்தியலாலும், கைக்கோடரியாலும் வெட்டினார்கள். அவர்கள் வெட்டத் தொடங்கியதும் அந்தப் பொந்திற்குள் கூடுகட்டியிருந்த தேனீக்கள் கூட்டமாக வெளியே வந்து பிள்ளைகளைக் கொட்டின. அந்தக் கடுப்புத் தணியவே ஏறத்தாழ ஒரு மணிநேரத்திற்கும் மேலாகியது.

பெரிய குடுவைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதைத் தேன்கூடாக மாற்றி ஒரு கிளையில் கட்டித் தொங்கவிட்டேன். குடுவையின் மேற்புறம் வைக்கோலால் ஒரு கூரையும் வேய்ந்து வைத்தேன். புகையிடுவதற்கு மட்டும் இடம்விட்டு பொந்தின் மற்ற பகுதிகளை மரப் பலகைகளால் அடைத்தேன். சுங்கானைப் போட்டு புகை எழுப்பினேன். மரத்தின்

உட்புறத்தில் கேட்ட தேனீக்களின் ரீங்காரம் படிப்படியாக்க குறைந்து கொண்டே வந்தது. பொந்தின் அமைப்பைப் பெரிதாக்க விட்டு உள்ளே புகுந்தோம். அங்கு மிகப் பெரிய தேன்கூடு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதை அடை அடையாகப் பிரித்துப் பல குடுக்கைகளில் போட்டேன். சுங்கான் புகையினால் மயக்கமடைந்திருந்த தேனீக்களைப் புதிய குடுவைக் கூட்டில் எடுத்து விட்டேன்.

தேனடைகள் எல்லாவற்றையும் ஒரு பீப்பாயில் போட்டு அதனுடைய வாய்ப்புறத்தைப் பலகை, தார்ப்பாய், இலை-தழை போன்றவற்றால் இறுக்கமாக மூடினேன். தேனீக்கள் மறுபடியும் வராமல் இருப்பதற்காகப் பொந்திற்குள் சுங்கானைப் போட்டு புகையெழுப்பினேன். ஆரம்பத்தில் மயக்கம் தெளிந்த தேனீக்கள் பழைய தேனடை இருந்த இடத்திற்கே திரும்பி வந்ததால் இப்படிச் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால், நான் எதிர்பார்த்தபடி தேனீக்கள் விரைவிலேயே புதிய கூட்டில் வசிக்கத் தொடங்கின.

இரவில் குளிர்காற்று வீசியபோது தேனீக்கள் ஒட்டு மொத்தமாகப் புதிய கூட்டிற்குள் புகுந்துகொண்டன. அந்தச் சமயத்தில் தேனடைகளை ஓர் அண்ணடாவில் போட்டுக் கொஞ்சம் தண்ணீரையும் ஊற்றி அடுப்பில் வைத்தேன். தேனடைகள் ஊருகின. கிடைத்த தேனைத் துணியில் வடிகட்டி எடுத்தோம். சுத்தமான தேனை மற்றொரு சிறு பீப்பாயில் ஊற்றிக் குளிர வைத்தோம். மறுநாள் காலையில் தேனடையிலிருந்த மெழுகெல்லாம் மேற்பரப்பில் மிதந்தன. அந்த மெழுகை மேலாக வழித்து எடுத்துவிட்டுத் தேன்பீப்பாயை மண்ணுக்குள் ஒரு குழி தோண்டிப் பத்திரமாக எடுத்து வைத்தோம்.

புதிய கூட்டில் குடியேறியது போக மீதமிருந்த சில தேனீக்கள் அருகிலிருந்த மரக்கிளையில் ஒட்டிக் கொண்டிருந்தன. உடனே மற்றொரு தேன்கூடு செய்து அவற்றை அதனுள் விட்டேன்.

மரத்தில் உட்புறம் நாங்கள் வீடு அமைத்திருந்த உயரம் வரையில் உள்ளீடற்றதாகவே இருந்தது. அடிமரப்பகுதியில் கடலைப் பார்த்தபடி ஒரு வாசல் வெட்டினேன். கேப்டனின் அறையிலிருந்து எடுத்து வந்த கதவை அங்கு சரியாகப் பொருத்தினேன். அது தவிர, மேலும் இரண்டு ஜன்னல்களை அமைத்தேன். இதனால் மரப்பொந்தினுள் போதிய வெளிச்சம் ஏற்பட்டது. பொந்தின் நடுவே தரையில் பத்தடி உயரத்தில் ஒரு மரத்தூணை நிறுவினேன். பிறகு தூணிலும், மரத்திலுமாகச் சிறுசிறு

குழிகளை ஏற்படுத்தி அதில் படிகளாகப் பலகைகளைப் பொறுத்தினேன். அந்தத் தூணின் மீது மற்றொரு மரத்தூணைப் பொருத்து அதை இரும்புத் தகடுகளை வைத்து இறுக்கினேன். பின்னர் படிகளை அமைத்தேன். தொடர்ந்து மூன்று வாரங்கள் இவ்வாறு கடுமையாக உழைத்த பிறகு படிக்கட்டுகளின் வேலை முழுமை அடைந்தது.

சில நாட்களுக்குப் பிறகு ஃப்ளோரா ஆறு குட்டிகளை ஈன்றது. இரண்டு குட்டிகளை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவற்றை நீரில் முழ்கடித்தோம். அவற்றுக்குப் பதிலாக ஃப்ளோரா நரிக்குட்டிக்குப் பாலூட்டி வளர்த்தது.

ஏறத்தாழ இதே சமயத்தில் ஆடுகளும் கோழிகளும் பெருகி வளர்ந்தன. ஆடுகள் வெளியே தப்பி ஓடிவிட்டாலும் சுலபத்தில் கண்டறிவதற்காக அவற்றின் கழுத்தில் சிறிய மணிகளைக் கட்டிவிட்டோம். எருமைக்கு மூக்கணாங்கயிறை மாட்டிக் கனமான பொருள்களைச் சுமந்து செல்லப் பழக்கினோம். நடுநடுவே நாங்களும் அதன் மீது ஏறிச் சவாரி செய்தோம்.

ஃபிரிட்ஜின் கழுகு, இறந்துபோன பறவைகளின் மீது பாய்வதற்கும், மறுபடி அவனது மணிக்கட்டில் வந்து உட்காரவும் பழகியது. எர்னஸ்ட் பொறுமையுடன் குரங்கைப் பழக்கினான். குரங்கு தன்னுடைய முதுகில் ஒரு சிறிய கூடையைத் தாராளமாகச் சுமந்து சென்றது. ஜாக் தனது நரிக்குட்டியைப் பழக்குவதில் வெற்றி பெறவில்லை. இப்பொழுதும் நரி, தனது விருப்பம் போல் மற்ற விலங்குகளைக் கொன்று தின்றது. மறவாமல் தான் கொன்ற விலங்கின் தோலை மட்டும் ஜாக்கிடம் கொண்டுவந்து கொடுத்தது. இருப்பினும் ஜாக் மனம் தளரவில்லை.

மெழுகுவர்த்தி செய்வதற்கு நான் ஒரு புதிய வழியைக் கண்டறிந்தேன். அந்த முயற்சி வெற்றியடையவும் செய்தது. இருப்பினும் திரியாகப் பயன்படுத்தப் பஞ்சு கிடைக்காமல் இருந்ததால் அது முழுமை பெறவில்லை. அதுவரை சேகரித்த ரப்பர் பாலைப் பயன்படுத்தி அழகான ஒரு ஜோடி காலணிகளை உருவாக்கினேன். இறந்து போன பெரிய காட்டெருமையின் தோலால் ஃபிரிட்ஜுக்கு மற்றுமொரு ஜோடி காலணிகள் செய்து கொடுத்தேன்.

முறிந்து விழுந்த பனைமரம் ஒன்றை இரண்டாகப் பிளந்து குழாய் போல் ஊட்கழிவாகச் செதுக்கி அவற்றை, ஓடையிலிருந்து நீரை

ஆமையோட்டுத் தொட்டியில் விழுமாறு தோட்டத்தின் ஊடாகப் பதித்து வைத்தேன். இப்போது ஓடையிலிருந்து நீரைக் குழாயில் பாய்ச்சினால் அது நேரடியாகத் தொட்டியை நிறைத்தது.

# 13

படிக்கட்டு அமைக்கும் வேலை முடிவடையும் தருணத்தில், ஒரு நாள் காலையில் தூரத்திலெழுந்த விசித்திரமான சத்தம் எங்களைத் திடுக்கிட வைத்தது! நாய்கள் காதுகளை உயர்த்தியபடி கோபத்துடன் குரைத்தன. சிறுவர்களை வீட்டிற்குள் அனுப்பிவிட்டு நானும் ஃபிரிட்ஜும் துப்பாக்கிகளில் மருந்தை நிரப்பினோம். வெளியே வந்து பார்த்தால் காணாமல் போன எங்களது கழுதை வேறு ஒரு காட்டுக் கழுதையுடன் வந்து மரத்தின் கீழ் நின்றுகொண்டிருந்தது. அந்தக் காட்டுக் கழுதையை எப்படியும் பிடித்து விடவேண்டுமென்று விரும்பினேன். ஃபிரிட்ஜ் வீசுகவணைப் பயன்படுத்தலாமே என்றான். பயன்படுத்தலாம்... ஆனால், ஒருமுறை குறி தவறிவிட்டால் பிறகு அது நம்மிடம் சிக்காது. எனவே வேறு முறையில் பிடிக்கலாம் என்றேன்.

நீண்ட கயிற்றின் ஒரு முனையை மரத்தில் கட்டினேன். மறுமுனையைச் சுருக்கிட்டு ஃபிரிட்ஜிடம் கொடுத்தேன். மூங்கில் பட்டைகளைக் கயிற்றால் கட்டி அதை ஒரு கிடுக்கி போன்று அமைத்தேன்.

ஃபிரிட்ஜ் மெதுவாகக் கழுதையை நோக்கி நகர்ந்தான். எங்களது கழுதை பயமின்றி அவனை நெருங்குவதைப் பார்த்த காட்டுக் கழுதையும் அதனுடன் வந்தது. உடனே ஃபிரிட்ஜ் அதனுடைய கழுத்தில் வெகு எச்சரிக்கையுடன் சுருக்குக் கயிற்றை மாட்டினான். காட்டுக்கழுதை உடனே பின்புறமாக நகர்ந்து துள்ளியது. அதனால் சுருக்கு மேலும் இறுகியது. சுருக்கு இறுக இறுக அதன் நாக்கு வெளித்தள்ளத் தொடங்கியது.

உடனே அந்தக் கழுதையை நெருங்கிச் சென்ற நான் அதன் சுருக்கைக் கொஞ்சம் தளர்த்தி விட்டேன். அதே சமயம் என் கையிலிருந்த கிடுக்கியை அதன் முதுகில் மாட்டி விட்டேன். வலி பொறுக்க முடியாத கழுதை ஓரளவு அடங்கி அமைதியாக எழுந்து நின்றது.

பழைய கழுதை மறுபடியும் தப்பித்து விடாமல் இருப்பதற்காக அதையும் கட்டி வைத்தோம். காட்டுக்கழுதையைப் பழக்குவது சற்றுக் கடினமான

காரியமாகத் தோன்றியது. நாங்கள் எதையெல்லாமோ செய்து பார்த்தும் அது வழிக்கு வரவில்லை. கடைசியாகத் தென் அமெரிக்காவில் வசிப்பவர்கள் மேற்கொள்கிற வழக்கமென்று கேள்விபட்டதைச் சோதித்துப் பார்த்தேன். அதாவது, கழுதையின் மேலேறி அமர்ந்து அதனுடைய காதை ரத்தம் வரும்வரையில் கடித்தேன். மறுவிநாடியே அது அடங்கிச் சாதுவானது.

அதன் முதுகில் ஏறி, விரும்பிய இடத்திற்கெல்லாம் சவாரி சென்றேன். புதிய காட்டுக்கழுதை மிக விரைவாகப் பயணம் செய்ததால், அதற்குப் பஞ்சுக்கால் என்று பெயர் வைத்தோம். குழந்தைகள் அதன்மீது அமர்ந்து பயணம் செய்யும்போது இந்த வேகத்தினால் விபரீதம் ஏதாவது நிகழலாம் என்று கருதி, அதன் கால்களைச் சற்றுத் தொய்வாகக் கயிறுகளால் கட்டிவைத்தேன்.

மழைக்காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. எனவே, கால்நடைகள் மழையில் நனையாமல் இருப்பதற்காகத் தொழுவம் ஒன்றை அமைப்பதில் ஈடுபட்டோம். வளைந்து சென்ற வேர்களுக்கு நடுவே மூங்கில்களை அடுத்தடுத்துக் கட்டினோம். மூங்கில் மீது களிமண்ணையும் புல்பூண்டுகளையும் இலைச் சருகுகளையும் நிரப்பினோம். எல்லாவற்றிற்கும் மேலாகத் தார் பூசினோம். இப்பொழுது மழைநீர் புகாத தொழுவக் கூரை ஒன்று உருவாயிற்று. பிறகு ஒவ்வொரு கால்நடை, மற்றும் பறவைகளுக்கு ஏற்றவாறு அதைத் தனித்தனிக் கொட்டடிகளாகப் பிரித்தோம். தொழுவத்தைச் சுற்றிலும் மரக்கட்டைகளால் தடுப்பு வேலி அமைத்தோம்.

பிறகு மழைக்காலத்துக்குத் தேவையான உணவுப் பொருள்களைச் சேகரிக்கத் தொடங்கினோம். ஒருநாள் மாலையில் சிந்தூர விதைகளைச் சேகரித்துக் கொண்டிருந்தோம். குரங்குக்குட்டி புல்வெளிக்குள் நுழைந்தது. எப்படியோ மோப்பம் பிடித்துக் காட்டுக்கோழியின் முட்டைகளைக் கண்டுபிடித்துக் குடிக்க முயன்றது. எர்னஸ்ட் அதைத் தடுத்ததுடன் கோழிகளையும் பிடித்துவிட்டான். உடனே எங்களை அழைத்தான். நாங்கள் விரைந்து சென்று அவனுக்கு உதவினோம். வழியில் எர்னஸ்ட் ஒரு வகையான பெரிய புல் செடிகளைக் காட்டினான். கத்தி போல் இருந்த அவற்றில் சிலவற்றை ஃபிரான்ஸிஸுக்கு விளையாடக் கொடுத்தோம்.

ஃபிரிட்ஜ் அந்தச் செடிகளைப் பார்த்துவிட்டு அதைக் கொண்டு ஆடு மேய்ப்பதற்குத் தேவையான சவுக்கு செய்யலாம் என்று கூறினான்.

செடியை நான் ஊன்றிப் பார்த்தேன். அதிலிருந்து தான் சணல் எடுக்கப்படுகிறது என்று கேள்விப்பட்டிருந்தேன். உடனே என் மனைவி "இனிமேல் உங்களுடைய கிழிந்து போன துணிகளையெல்லாம் தைத்து விடுகிறேன். முடிந்த அளவு சணல் செடிகளைக் கொண்டு வாருங்கள்" என்று கூறி அனுப்பி வைத்தாள்.

காட்டுக்கழுதை மீது ஃபிரிட்ஜும் எருமை மீது ஜாக்கும் ஏறிக் கொண்டு சணல் செடிகளைச் சேகரிக்க விரைந்தனர். திரும்பி வந்தபோது அவர்களிடம் நாலைந்து செடிக் கட்டுகள் இருந்தன. முதலில் அவற்றை செந்நாரைச் சதுப்பிலுள்ள நீரில் ஊற வைத்தோம். பதினாறாவது நாளன்று வெளியிலெடுத்து அவற்றை வெயிலில் உலர வைத்தோம். அவை நன்றாகக் காய்ந்தவுடன் அன்று மாலையே ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குக் கொண்டு சென்றோம்.

சணல் தொடர்பான வீட்டின் உள்வேலைகளை மழைக்காலத்தில் செய்து கொள்ளலாம் என்று மனைவியிடம் கூறினேன். முதலில் மழைக்காலத்திற்கு வேண்டிய மற்ற பொருள்களைச் சேகரிப்பது அத்தியாவசியமானது. இப்பொழுதே சிறு தூறலாக அவ்வப்போது மழைத் துளிகள் விழுந்து கொண்டிருந்தன.

சாப்பிடுவதற்குக்கூட நேரமின்றி ஓய்வில்லாமல் நாங்கள் அதற்காகப் பாடுபட்டோம். உருளைக் கிழங்கு, கசாவா கிழங்கு, தேங்காய், செந்தூர விதை போன்ற பொருள்களைப் படிக்கட்டின் அடியில் தேவையான அளவுக்குக் குவித்து வைத்தோம். ஜெல்தீம் வீட்டின் சுற்றுப்புறத்தில் மரக் கன்றுகள், கரும்பு ஆகியவற்றை நட்டு வைத்தோம். சில பகுதிகளில் ஐரோப்பியத் தானிய வகைகளையும் விதைத்தோம். மழைக்காலம் பயிர்களைச் செழிப்பாக வளர்க்கும் என்று நம்பினோம்.

நாங்கள் எதிர்பார்த்தவாறே மழைக்காலம் தொடங்கியது. இருண்டு கறுத்த மேகங்கள் குடம் குடமாக நீரைப் பொழிந்தன. அந்தப் பெருமழையின்போது தீவே ஒரு பெரிய ஏரி போல் காட்சியளித்தது.

சூறைக்காற்று பலமாக வீசியது. மரக்கிளையின் மேற்புறத்தில் ஈகிள்ஸ்நெஸ்ட்டில் குடியிருப்பது பாதுகாப்பானது அல்ல என்று தோன்றியதால், நாங்கள் தொழுவத்தில் குடியேறினோம். தொழுவத்தை மழைநீரும் காற்றும் தாக்கவில்லை. ஆனால், கால்நடைகளின் நாற்றத்திற்கிடையே தங்கியிருப்பது மிகவும் சிரமமாக இருந்தது. அடுப்பு எரியும் போதெல்லாம் தொழுவப் பகுதி முழுவதும் புகையில் மூழ்கியது.

எனவே, அடுப்பு மூட்டுவதை முடிந்த மட்டும் குறைத்துக் கொண்டோம்.

கால்நடைகளின் தீனி குறையத் தொடங்கியவுடன் வெளியே மேய்ந்துவிட்டு வருமாறு அவற்றைத் திறந்துவிட்டோம். மாலையில் திரும்பி வரும்பொழுது அவற்றைத் தொழுவில் அடைப்பதற்குள் எலும்புகள் நடுங்குமளவு நானும் ஃபிரிட்ஜும் மழையில் தொப்பலாக நனைந்து போவோம்.

இரவு நேரத்தில் மெழுகுவத்தி வெளிச்சத்தில் நான், எங்களுடைய அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் குறிப்புகளாக எழுதி வைப்பேன். என் மனைவி எதையாவது தைத்துக் கொண்டிருப்பாள். ஃப்ரிட்ஜும், ஜாக்கும் ஃபிரான்ஸிஸுக்குப் பாடம் சொல்லித் தருவார்கள். அல்லது தாங்கள் பார்த்த புதிய விலங்குகளையோ, மரங்களையோ படமாக வரைந்து கொண்டிருப்பார்கள்.

மழை நாட்கள் இப்படியே மெதுவாக நகர்ந்தன. ஒருநாள், “மழை நின்றவுடனே நல்லதாக ஒரு வீட்டைக் கட்டுங்கள். அடுத்த வருட மழையின்போது இதுபோல் மரத்திலோ மாட்டுத் தொழுவத்திலோ நம்மால் வசிக்க முடியாது!” என்று மனைவி கூறினாள். அவளது வேண்டுகோள் நியாயமானதுதான் என்று எனக்கும் தோன்றியது. இருப்பினும் இப்படிப்பட்ட மழைக்கும் புயலுக்கும் ஈடுகொடுக்கக் கூடிய உறுதியான ஒரு வீட்டை அந்தத் தீவில் எப்படிக் கட்டுவது என்பதுதான் எனக்குப் புரியவில்லை!

“ராபின்சன் கூருஸோ செய்ததைப் போல நாமும் ஒரு குகையை வீடாக மாற்றினால் என்ன?” என்று ஃபிரிட்ஜ் யோசனை கூறினான்.

நல்ல யோசனை! மழை நின்ற பிறகு முதல் வேலையாகப் பெரியதொரு குகையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று தீர்மானம் செய்தோம்!

## 14

தொடர்ச்சியாகப் பெய்து கொண்டிருந்த வலுவான மழை ஒருவிதமாக ஓய்ந்தபோது எங்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. சூரியன் பளிச்சென்று காய்ந்தான்!

முதல் வேலையாக எங்களது தோட்டப் பகுதிகளுக்குச் சென்று

பார்த்தோம். சின்னச் சின்ன நாற்றுகள் எல்லாம் பெரிய செடியாக வளர்ந்து விட்டிருந்தன. விதைகள் முளைவிட்டிருந்தன. காடுகளும், சுற்றுப்புறமும் துலக்கி வைத்ததுபோல் பச்சைப் பசேலென்று தெரிந்தன. இயற்கைக் காட்சியே பரவசமூட்டியது. பறவைக் கூட்டங்கள் எங்களுடன் போட்டிபோடுவது போல் மகிழ்ச்சியுடன் பாடிக் களித்தன.

என் மனைவி, சணலால் ஆடைகளை நெய்யும் பணியில் முழுமூச்சுடன் ஈடுபட்டாள். நான் அவளுக்குத் தேவையான தறி போன்ற கருவிகளைச் செய்து கொடுத்தேன். ஃபிரான்ஸிஸ் பெரும்பாலும் அம்மாவிற்கு உதவியாக இருந்தான். எங்களுடன் வெளியே வர நேர்ந்தால், கடினமாக உழைக்க வேண்டியிருக்கும் என்று தோன்றியபோதெல்லாம் எர்னஸ்ட்டும் வீட்டிலேயே அம்மாவுடன் இருக்கத் தொடங்கினான்.

மழையினால் ஜெல்தீம் வீடு மோசமாகப் பாதிப்படைந்திருந்தது. காற்றின் வேகத்தில் பல தார்ப்பாய்கள் காணாமற் போயிருந்தன. பல பொருள்கள் மழையில் நனைந்து வீணாகிவிட்டன. குறிப்பாக இரண்டு பீப்பாய் வெடிமருந்துகள் பாழாகிப் போனது. நாங்கள் முதன் முதலாகக் கட்டிய பீப்பாய்ப்படகு முற்றிலுமாகச் சேதமடைந்துவிட்டது. நல்லவேளையாகப் புதிய படகு எந்தவிதச் சேதமும் இல்லாமல் தப்பித்தது!

அங்குள்ள மலைகளை எல்லாம் சுற்றிப் பார்த்தோம். பாறைகள் எல்லாவற்றையும் பரிசோதித்தோம். எங்குமே குகை எதுவுமே தென்படவில்லை. கடைசியில் நாங்களே ஒரு குகையைக் குடைவது என்று தீர்மானித்தோம். திருவருள் குடாவையும், நரியாற்றின் இரண்டு கரைகளையும் பார்த்தபடியுள்ள செங்குத்தான பாறைப் பகுதியை அதற்காகத் தேர்ந்தெடுத்துக் குடையும் பணியைத் தொடங்கினோம். ஒருநாள் முழுவதும் முயன்று வெட்டியும் சில விரற்கடை அளவே வெட்ட முடிந்தது. இந்தத் திட்டத்தைக் கைவிட வேண்டியதுதான் என்றுகூட நினைத்தேன். ஆனால், போகப் போக பாறையை வெட்டுவது மிகவும் எளிதாக இருந்தது. சில நாட்களில் ஏழு அடிதூரம் வரை நாங்கள் பாறையைக் குடைந்து முன்னேறினோம்.

ஒருநாள் வழக்கம்போல் வெட்டிக் கொண்டிருந்தபோது திடீரென்று ஜாக் கூறினான்: “அப்பா! வெட்டிவிட்டேன். என்னுடைய கடப்பாரை முழுவதுமாகப் பாறைக்குள் இறங்கிவிட்டது!” என்றான். நம்ப முடியாதவர்களாக நாங்கள் அந்தப் பகுதியை உற்றுக் கவனித்தோம். அவன் குறிப்பிட்டது உண்மையே! மேலும சிறிது நேரம் கடப்பாரையை

பயன்படுத்திக் குத்தியபோது உட்புறம் பெரிய குகையொன்று தெரிந்தது. நான் தலையை நீட்டிப் பார்த்தேன். உட்புறம் விஷவாயு நிறைந்திருந்தது. அதனால் பிள்ளைகளை வெளியிலேயே நிற்கும்படி எச்சரித்தேன்.

செத்தைகள், குப்பைகூளங்களைக் கொளுத்தி உள்ளே போட்டேன். போட்ட உடனேயே அவை அணைந்தன. பிறகு கப்பலிலிருந்து எடுத்து வந்த சில வெடிகளையும், வாணங்களையும் கொளுத்திக் குகைக்குள் போட்டோம். சற்று நேரம் அவை வெடித்து எரிந்த பிறகு புகை முற்றிலுமாக வெளியேறியது. ஜாக்கை ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குச் சென்று சில மெழுகுவத்திகளை எடுத்துக் கொண்டு அப்படியே அம்மாவையும் அழைத்து வருமாறு அனுப்பி வைத்தேன்.

மூன்று மணி நேரத்திற்குப் பிறகு, ஜாக், ஃபிரான்ஸிஸ், என் மனைவி ஆகியோர் வண்டியில் வந்து இறங்கினர். ஆளுக்கு ஒரு மெழுகுவத்தியைக் கொளுத்திக் கொண்டு குகைக்குள் நுழைந்தோம்.

குகையின் உட்புறச் சுவர்கள் உப்புப்படிகப் பாறைகளாக இருந்ததால் மெழுகுவத்தியின் வெளிச்சம் அவற்றில் மோதி வண்ண வண்ணமாகப் பிரதிபலித்து வேடிக்கை காட்டியது. மிகப் பெரியதாக இருந்த குகையின் உட்புறம் நடுநடுவே எழுந்திருந்த சில படிகத்துண்டுகள், தூண்கள் போல் அடிப் பகுதியையும் மேற்பகுதியையும் இணைத்தன. சில படிகங்கள் வனிக்கட்டியைத் தொங்கவிட்டதுபோல் தொங்கிக் கொண்டிருந்தன. அவை எதிர்பாராமல் தலை மீது விழுந்துவிடக் கூடும் என்று தோன்றியதால் மற்ற எல்லோரையும் வெளியே அனுப்பிவிட்டு நானும் ஃபிரிட்ஜும் நீண்ட மரக்கொம்பு, துப்பாக்கி ஆகியவற்றுடன் உள்ளே சென்றோம். விழுந்துவிடக் கூடும் என்று தோன்றியவற்றைப் பெயர்த்துத் தள்ள முயன்றோம். ஆனால், அவை கருங்கல் போல உறுதியாக இருந்தன. தரைப் பகுதி பெரும்பாலும் சமதளமாகவும், மெல்லிய சாம்பல் போன்ற வெண்மை நிறத்தூள் படிந்தும் விளங்கியது.

சற்றும் தாமதிக்காமல் அந்தக் குகையை எங்களுடைய மழைக்கால வீடாக மாற்றும் முயற்சியில் இறங்கினோம். வாசல்கதவையும் சன்னல்களையும் பொருத்தினோம். இரண்டு படுக்கையறைகள் ஒரு சமையல்கட்டு, ஒரு தொழில்கூடம், பொருள்சேமிப்புக் கிடங்கு, விலங்குகளுக்கான கொட்டில் இப்படி ஒவ்வொன்றுக்கும் தனித்தனித் தடுப்புகளை அமைத்துப் பிரித்தோம்.

அந்தத் தீவில் காலூன்றிய நாளிலிருந்து நாங்கள் அத்தனை பேரும் ஆர்வத்துடனும், உற்சாகத்துடனும் சுறுசுறுப்புடனும் அதுவரை உழைத்ததில்லை என்றே சொல்லலாம்!

புதிய குகையை வீடாக மாற்றும் வேலை நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஒரு நாள் பசுமையும், நீலமும் கலந்த ஒரு வகை மீன்கள் கூட்டமாகக் கடற்கரைப் பகுதிக்கு வந்தன. நாங்கள் அவற்றை ஏராளமாகப் பிடித்து உப்பிட்டு உலர வைத்துச் சேமித்தோம்.

ஒரு மாதம் சென்ற பிறகு வஞ்சிரம் போன்ற பெரிய மீன்களின் கூட்டம் கடலிலிருந்து நரியாற்றுக்குள் புகுந்தது. ஜாக் தன்னுடைய அம்பின் பின்புறம் நீண்ட கயிற்றைக் கட்டி வில்லில் தொடுத்து எய்தான். மிகப் பெரிய மீனாக அகப்படும்பொழுது அவனுக்கு உதவினோம். நாங்கள் ஒன்று சேர்ந்து அதை இழுத்துக் கரையில் போட்டோம்.

விரைவிலேயே நானும் ஃபிரிட்ஜும், மற்றவர்களும் பல வகைகளில், பல்வேறு கருவிகளின் உதவியுடன் மீன்பிடிக்கத் தொடங்கினோம். இவற்றில் குறிப்பிடத் தக்கது ஃபிரிட்ஜ் பிடித்த மீன்தான். அது மிகப் பெரிய ஒரு மீன். எருமையைக் கொண்டே அதைக் கரையில் இழுத்துப் போட வேண்டியிருந்தது. அதனுடைய உடம்பிலிருந்து ஒருவகை மைக்கா கிடைத்தது. அதன் உதவியால் ஜன்னலுக்குக் கதவுகள் செய்யலாமென்று நினைத்தேன்.

மீன் பிடிப்பதற்காகச் சிறிய படகு ஒன்றைக் கட்டுவது அவசியம் என்று தோன்றியது. எனவே, அடுத்த முறை காட்டிற்குள் செல்லும் போது அதற்கு உகந்த ஒரு மரத்தை வெட்டத் தீர்மானித்தேன்.

அதே சமயம் ஜெல்தீம் வீட்டுக்குச் சுற்றிலுமிருந்த தோட்டத்திலிருந்து பட்டாணி, காய்கறிகள், வாழைப்பழம், கரும்பு போன்ற உணவுப் பொருள்கள் எங்களுக்குத் தாராளமாகக் கிடைத்தன.

மறுநாள் ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குச் சென்றோம். அங்கும் வெளிப்புறத்தில் பயிர்கள் செழித்து வளர்ந்திருந்தன. சோளச்சாறு, கரும்புச்சாறு இரண்டையும் கலந்து ஓர் அருமையான கலவை உணவை என் மனைவி எங்களுக்கு வழங்கினாள். அன்றைய இரவை அங்கேயே கழித்துவிட்டு, மறுநாள் காலையில் எங்களது பயணத்தைத் தொடர்ந்தோம்.

கால்நடைகளுக்கு ஒரு பண்ணை அமைக்கத் தீவின் உட்புறம் வேறொரு

பொருத்தமான இடத்தைத் தேர்வு செய்ய விரும்பினோம். அதற்காக நான்கு பன்றிக் குட்டிகள், இரண்டு வெள்ளாடுகள், இரண்டு செம்மறி ஆடுகள், சில கோழிகள், இரண்டு சேவல்கள் ஆகியவற்றைக் கொண்டு சென்றோம். எங்களது பழைய பண்ணையில் ஏற்கனவே இவை பெருகிவிட்டிருந்தன. எனவே பண்ணைக்காக நாங்கள் கொண்டு செல்லும் விலங்குகள் ஒருவேளை பெருகி விடாமல் அழிந்து போனாலும், அதனால் எங்களுக்குப் பெரிய இழப்பு எதுவும் ஏற்படாது என்று தோன்றியது.

இப்பொழுது கடற்கரைக்கும் மலைத்தொடருக்கும் இடையில் அமைந்த புதிய வழியில் பயணத்தைத் தொடர்ந்தோம். அந்த வழி ஒரு சமவெளியில் சென்று முடிவடைந்தது. அங்கு பருத்திச் செடிகளில் நிறையக் காய்கள் காய்த்திருந்தன. நாங்கள் கொண்டு சென்றிருந்த சாக்குப் பைகளில் நிறையப் பஞ்சுகளைத் திணித்தோம். ஜெல்தீம் தோட்டத்தில் விதைப்பதற்காக என் மனைவி நிறையப் பருத்தி விதைகளைச் சேகரித்தாள்.

கடைசியாக நாங்கள் மலை உச்சியை அடைந்தோம். அதற்கு எதிர்ப்புறம் தென்பட்ட சமவெளி பண்ணை வைக்கச் சிறந்த இடமாக - எங்களது நோக்கத்திற்குப் பொருத்தமானதாகத் தோன்றியது. சுற்றிலுமிருந்த அடர்ந்தகாடு, சமவெளிக்குள் வாடைக் காற்று புகாமல் தடுத்தது. வெளிப்புறம் பசும்புல் ஏராளமாகச் செழித்து வளர்ந்திருந்தது. நடுவில் ஒரு நீரோடை இருந்தது. எனவே. இந்த இடத்திலேயே புதிய பண்ணையை அமைப்பது என்று முடிவு செய்தோம்.

கால்நடைப் பண்ணை அமைக்க நாங்கள் தேர்ந்தெடுத்த இடத்திற்கு வேறு சில சிறப்புகளும் உண்டு. அதன் அருகில் எண்பது அடி முதல் பதினைந்து அடி உயரம் வரையிலான பல்வேறு மரங்கள் இருந்தன. தரையிலிருந்து பத்தடி உயரத்தில் மரத்தை உட்குழிவாகச் செதுக்கி அதில் குறுக்காகச் சட்டங்களைப் பொருத்தினோம். சட்டங்களின் மீது வேலமரத்தின் முட்கள், மரப்பட்டைகள் போன்றவற்றால் கூரை வேய்ந்தோம். பண்ணைக்குச் சுற்றிலும் பிரம்புத்தட்டிகளை சுவர்போல் அமைத்தோம். முன்புறத்தில் தட்டியைக் கொண்டே பெரிய கதவு மற்றும் வாசற்பகுதியை அமைத்தோம்.

உட்புறத்தில் ஒவ்வொரு விலங்குக்கும் தனித்தனியாகக் கொட்டில்களை அமைத்தோம். நாங்கள் வந்தால் தங்குவதற்கு வசதியாகச் சிறு குடிசை ஒன்றையும் அங்கு எழுப்பினோம்.

இந்த வேலைகளைச் செய்து முடிக்கச் சில நாட்களானது. அதற்குள் எங்களது உணவுப் பொருள்களும், கால்நடைகளின் தீனியும் ஏறத்தாழத் தீர்ந்துபோனது. ஃபிரிட்ஜையும், ஜாக்கையும் ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்கு அனுப்பி அவற்றை எடுத்து வருமாறு கூறினேன்.

நானும் எர்னஸ்ட்டும் பக்கத்துப் பகுதிகளைச் சுற்றிப் பார்க்க கிளம்பினோம். அருகிலேயே ஒரு பெரிய ஏரி இருந்தது. அதில் அன்னப்பறவைகள் சில நீந்திக் கொண்டிருந்தன. அவற்றின் உடல் கறுப்பு நிறத்துடன் இருந்தது. வாலில் மட்டும் சிறிதளவு வெண்மை தெரிந்தது. ஃப்புளோரா ஒரு விசித்திரப் பறவையைப் பிடித்து வந்து எங்கள் காலடியில் போட்டது.

அந்தப் பறவையின் கால்கள் வாத்தினுடையது போல் தட்டையாக இருந்தன. வால் நண்டு அடர்த்தியாகவும், தலை சிறியதாகவும் இருந்தது. கண்களும் காதுகளும் சட்டென்று புலப்படாத அளவுக்கு மிகச் சிறியதாக இருந்தன. அதன் அலகும் வாத்துபோல் தட்டையாகவே இருந்தது. அதற்கு அலகுப் பறவை என்று பெயர் வைத்தோம். ஏரிக்கரையில் கிடைத்த காட்டு நெல்லைச் சுமந்து கொண்டு நாங்கள் பண்ணைக்குத் திரும்பினோம். அதே நேரம் ஃபிரிட்ஜும், ஜாக்கும் உணவுப் பொருள்களுடன் வந்திருந்தனர். கால்நடைகளுக்குப் பல நாள்களுக்குத் தேவையான தீனியை ஒவ்வொரு கொட்டிலிலும் வைத்துவிட்டு மறுநாள் நாங்கள் அனைவரும் எங்களது வீட்டுக்குத் திரும்பினோம்.

வரும் வழியில் மற்றோர் அழகான புல்வெளி குறுக்கிட்டது. அந்த இடத்திலும் மற்றுமொரு பண்ணையை குறுகிய காலத்துக்குள் அமைத்தோம். இதையெல்லாம் செய்த போதிலும் எங்களது பயணத்தின் நோக்கத்தை நான் மறந்து விடவில்லை. ஒரு சிறு படகு கட்டுவதற்கு ஏற்ற மரத்தை ஓர் இடத்தில் பார்த்தேன். அந்த மரத்தை வெட்டிவிட்டு நீண்ட உழைப்பிற்குப் பிறகு அதை உட்குழிவுள்ள ஒரு படகாக மாற்றினோம்.

மறுநாள் ஜெல்தீம் வீட்டை அடைந்து படகின் வேலையை முழுமைப்படுத்தினோம். படகு நீரில் பயணப்படும்போது கவிழாமல் இருப்பதற்காக அதன் இரண்டு புறங்களிலும் இரண்டு மிதவைத் தொட்டிகளைக் கட்டி வைத்தோம்.

எங்களது பசுமாடு ஈன்றெடுத்த காளைக் கன்றை சில நாட்களில் வசப்படுத்தி அதை ஃபிரான்ஸிஸுக்குக் கொடுத்தேன். இதற்குப் பிறகு

தொடர்ந்து வந்த இரண்டு மாதங்களும் உப்புக் குகையில் தேவையான மாற்றங்களைச் செய்தோம். எங்கள் அறைகளின் சுவர்களுக்கு அழகாகப் பூச்சுவேலை செய்தோம். தரையில் விரிப்பதற்காக ஆட்டுத் தோல்களைப் பயன்படுத்திக் கம்பளங்கள் செய்தோம்.

ஒருநாள் காலையில் வழக்கத்தைவிடச் சீக்கிரமாக எழுந்துவிட்டேன். நாங்கள் அந்தத் தீவில் குடியேறி எவ்வளவு நாள்களாயிற்று என்று கணக்குக் கூட்டிப் பார்த்தேன். மறு நாளுடன் ஒரு வருடம் நிறைவடைகிறது என்பது விளங்கியது. இரவுச் சாப்பாட்டின்போது இதை மற்றவர்களிடம் தெரியப்படுத்தினேன்.

மறுநாள் விடியற்காலையில் கேட்ட பீரங்கி முழக்கம் எங்களை அதிர்ச்சியுடன் விழிக்க வைத்தது. நாங்கள் கண் விழித்தபோது ஃபிரிட்ஜும், ஜாக்கும் அவர்களது படுக்கையில் இல்லையென்று தெரிந்தது. இது அவர்களின் வேலையாகத்தான் இருக்கும் என்ற ஆறுதல் பிறந்தது. ஆண்டு விழாக் கொண்டாட்டத்தைப் பீரங்கி முழக்கத்துடன் இப்படித்தான் அவர்கள் துவக்கி வைத்தனர்.

அன்று குழந்தைகளுக்காகத் துப்பாக்கி சுடும் போட்டி, அம்பு எய்தல், ஓட்டப் பந்தயம், வீசுகவண் எறிதல், சவாரி செய்தல், நீச்சல் போட்டி போன்றவற்றை நடத்தினேன். ஏற்கெனவே என்னுடைய குழந்தைகள் கடந்த ஓராண்டுக் காலமாக இவற்றை ஒரு பயிற்சியாகவும், வேலையாகவுமே மேற்கொண்டிருந்தனர். எனவே ஆர்வத்துடன் போட்டியில் பங்கு பெற்றனர். துப்பாக்கி சுடும் போட்டியிலும், நீச்சலிலும் வெற்றி பெற்று இரட்டைக் குழல் துப்பாக்கியையும், வேட்டைக் கத்தியையும் ஃபிரிட்ஜ் என்னிடமிருந்து பரிசாகப் பெற்றான். ஓட்டப்பந்தயத்திலும், வீசுகவண் எறிவதிலும் வெற்றிபெற்ற எர்னஸ்ட்டிற்கு, ஒரு தங்கக் கைக்கடிகாரத்தைப் பரிசளித்தேன். சவாரி செய்வதில் வெற்றிபெற்ற ஜாக்கிற்கு சவுக்கு ஒன்றைப் பரிசளித்தேன். சிறுவன் ஃபிரான்ஸிஸ் தன்னுடைய சிறு கன்றுக்குட்டியை அடக்கி வெற்றி பெற்றதற்காக ஒரு நல்ல கழியையும், சவுக்கையும் பரிசாகப் பெற்றான்.

எல்லோருக்கும் பரிசுகளை வழங்கிய நான் என் மனைவிக்கு ஒரு பெட்டியைப் பரிசளித்தேன். அந்தப் பெட்டிக்குள் அவளுக்குத் தேவையான கத்தரிக்கோல், ஊசி போன்றவற்றை வைத்திருந்தேன்.

# 15

கடந்த வருடம் ஏறத்தாழ இதே சமயத்தில்தான் மணிப்புறாக்களை நாங்கள் வேட்டையாடினோம் என்பது நினைவிற்கு வந்தது. இந்தத் தடவை வெடிமருந்தை வீணாக்காமல் புதிய முறையில் பறவைகளைப் பிடிக்க விரும்பினென்.

ஃபிரிட்ஜையும், ஜாக்கையும் ரப்பர்பால் எடுத்து வருமாறு அனுப்பி வைத்தேன். ரப்பர்பாலுடன் வேறு சில பயனுள்ள பொருள்களையும் அவர்கள் எடுத்து வந்தனர். சோம்பு, ஜேன்ஷெஸ் போன்ற சீனர்கள் குறிப்பிடும் குரங்குவேர், கற்பூரத்தைலம் போன்றவையும் அதில் அடங்கும்.

எங்களது கால்நடைப் பண்ணையை குரங்குகள் சேதப்படுத்தி விட்டிருப்பதாகவும் கூறினர். எனவே, பண்ணையைச் சீர்செய்யவும், குரங்குகளை வேட்டையாடவும் அங்கு போகவேண்டும் என்று அப்போதே முடிவு செய்தேன்.

கற்பூரத்தைலம், எண்ணெய், ரப்பர்பால் ஆகியவற்றை குறிப்பிட்ட விகிதத்தில் ஒன்று கலந்தேன். குழந்தைகள் சிறு சிறு சுள்ளிகளை எடுத்து வந்தனர். ஒவ்வொரு சுள்ளியையும் கலவையில் தோய்த்து எடுத்தேன். ஜாக், மரத்தின் மீதேறி அங்கிருந்த ஒவ்வொரு மரக்கிளைகளிலும் நடுமரத்திலும் ஏனைய பகுதிகளிலும் அந்தக் கலவையைப் பூசி வைத்தான். அந்தக் கலவை தோய்க்கப்பட்ட சுள்ளிகளையும் ஆங்காங்கே கிளைகளில் இலைகளுக்கு நடுவே மறைத்து வைத்தான். இந்தப் பசையில் சிக்கிக் கொண்ட மணிப்புறாக்களை மரத்தின் மேல் ஏறிச் சென்று பிடித்துக் கொன்றோம். பிறகு இறக்கைகளை நீக்கி, உப்பிட்டு வெயிலில் உலரவைத்துப் பத்திரப்படுத்தினோம்.

இரவு நேரத்தில் தீப்பந்தங்கள், மூங்கில்களுடன் புறப்பட்டுச் சென்றோம். அருகிலிருந்த ஒரு மரத்தில் புறாக்கள் அதிக எண்ணிக்கையில் தங்குவது வழக்கம். தீப்பந்தத்தின் வெளிச்சத்தில், கண்கூசிய புறாக்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டன. அவற்றை மூங்கில்களால் அடித்து வீழ்த்தினோம். நாங்கள் கொண்டுசென்ற சாக்குப் பைகள் நிறையும்வரை புறாக்களைச் சேகரித்துவிட்டு வீடு திரும்பினோம்.

மறுநாள் மனைவியையும், ஃபிரான்ஸிஸையும் விட்டுவிட்டு மற்றவர்களுடன் எங்களது கால்நடைப் பண்ணைக்குக் கிளம்பினோம். நான் அங்கு செய்ய விரும்பிய செயலைப் பார்த்தால், என் மனைவியும், ஃபிரான்ஸிஸும் பயந்து மயக்கமடைவார்கள் என்று தோன்றியது. எனவேதான் அவர்களைத் தவிர்த்துச் சென்றோம். மூன்று நாய்களையும் எங்களுடன் அழைத்துச் சென்றோம். பலநாட்கள் பாடுபட்டு நாங்கள் உருவாக்கியிருந்த பண்ணையைக் குரங்கு கூட்டம் பரிதாபத்திற்குரிய வகையில் சிதைத்திருந்தது. குரங்குக் கூட்டம் வெகு அருகிலேயே ஓர் இடத்தில் தங்கியிருப்பதை ஃபிரிட்ஜ் கண்டுபிடித்தான்.

பண்ணைக்குச் சுற்றிலும் சிறுசிறு குச்சிகளை நட்டு வைத்து, அவற்றில் வலைபோல் கயிறுகளைப் பின்னி வைத்தோம். இந்தக் கயிறுகளின் மீதும், பண்ணைக்குள் பல இடங்களிலும் முன்னர் தயாரித்த ஒட்டும் பசையைத் தடவி வைத்தோம். குரங்குகள் மிக விருப்பத்துடன் உண்ணும் தேங்காய், தென்னங்கள் போன்றவற்றை வலைக்குப் பின்புறம் வைத்தோம்.

மறுநாள் காலையில் பின்னங்கால்களால் மட்டும் நடக்கக்கூடிய, மரம்விட்டு மரம்தாவும் குரங்குகளும், நான்கு கால்களால் நடக்கும் குரங்குகளும் பெருத்த ‘கிறீச்’ குரல்களுடன் வந்தன. வலைகளைப் பொருட்படுத்தாமல் கூரைமீது தாவி, அங்கிருந்த பண்ணைக்குள் குதித்தன. சற்று நேரத்திற்குள்ளேயே எல்லாக் குரங்குகளும் பசையில் வசமாகச் சிக்கிக் கொண்டன. உடனேயே நாங்கள் நாய்களை அவிழ்த்து அவற்றின் மீது ஏவினோம். அந்தப் பகுதியே ரணகளமாயிற்று. அங்கு வழிந்தோடிய ரத்த ஓடைகளைக் கண்ட ஃபிரிட்ஜ், மிகவும் வருந்தினான். “இனி ஒருபோதும் இப்படிச் செய்ய நேரிடக்கூடாது!” என்றும் கூறினான்.

இறந்துபோன குரங்குகளைப் புதைத்த பிறகு பண்ணையைப் பழுது பார்த்துச் சரிசெய்தோம். அதன்பிறகு ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குத் திரும்பினோம். திரும்பும்போது நாங்கள் பண்ணைப் பகுதியில் பிடித்த அழகான புறாக்களையும் மறக்காமல் எடுத்துச் சென்றோம்.

ஒருநாள் ஜாக் தன்னுடைய உடம்பெல்லாம் சேற்றைப் பூசிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான். அதற்குக் காரணம் என்ன என்பதையும் அவனே கூறினான்: “பிரம்புகளை அறுத்து எடுப்பதற்காகச் செந்நாரைச் சதுப்பிற்குச் சென்றேன். சதுப்பு நிலத்தின் நடுப்பகுதியில் பெரிய பெரிய பிரம்புகள் கூட்டமாக அடர்ந்து வளர்ந்திருந்தன. கவனமாக ஒவ்வொரு

திட்டாகத் தாவிச் சென்றேன். இருந்தும் ஒரு தடவை கால் தவறிச் சேற்றுக்குள் விழுந்து விட்டேன். கைக்கு அகப்பட்ட பிரம்புகளை எல்லாம் வெட்டினேன். ஆனால், என்னுடைய உடம்பு சேற்றுக்குள் அமிழத் தொடங்கியது. வெட்டியெடுத்த பிரம்புகளை கைகளுக்கு அடியில் வைத்து அழுத்தியபடி எம்பிக் குதித்து, ஒரு வகையாகக் கால்களைச் சேற்றிலிருந்து விடுவித்தேன். பிறகு பிரம்புகளின் மேலேயே ஏறி உட்கார்ந்தேன். ‘உதவி, உதவி’ என்று கூச்சலிட்டேன். யாரும் வரவில்லை. நான் வளர்க்கும் நரி மட்டுமே கரையில் நின்றிருந்தது. கடைசியாக நான் அதனுடைய வாலைப் பிடித்தபடி கரையேறினேன். என் நரிதான் என்னைக் காப்பாற்றியது!” என்று கதையை முடித்தான்.

இந்தக் கதையைக் கேட்டு நாங்கள் எல்லோரும் சிரித்தோம். பிறகு என் மனைவி அவனைக் குளிப்பாட்டி, நல்ல ஆடைகளை அணிவித்தாள்.

இந்தச் சமயத்தில் நாங்கள் கப்பலிலிருந்து கொண்டுவந்த நாட்டுக்கழுதை ஒரு குட்டியை ஈன்றது. சவாரி செய்வதற்கு அந்தக் குட்டிக் கழுதை மிகவும் பயனுள்ளதாக இருந்தது. மட்டும் இன்றி விரைவாகப் பயணமும் செய்ததால் அதற்கு ஸ்பீடு என்று பெயரிட்டேன்.

குளிர்காலத்தில் கால்நடைகளுக்கு உணவாகக் கொடுப்பதற்காக ஈரமில்லாத, உலர்ந்த புற்களைச் சேகரித்தோம். மரத்தால் செய்த “கொம்பு போன்ற கருவியை நாங்கள் ஊதியழைத்தால் கால்நடைகள் வீடு திரும்புமாறு பழக்கினோம். பன்றிகள் மட்டுமே இப்படித் திரும்பி வராமல் அடம்பிடித்தன. தேவைப்பட்டால் நாய்களை ஏவி, அவற்றைத் திரும்பப் பிடித்துக் கொள்ளலாம் என்பதால் நாங்கள் அதற்காகக் கவலைப்படவில்லை.

மூங்கில் குழாய்களை ஒன்றுடன் ஒன்றாக இணைத்து நரியாற்றில் ஓடும் தண்ணீரை குகையில் வைத்துள்ள பீப்பாயில் நிறையுமாறு செய்தோம். மழைக்காலம் வருவதற்குள் எங்களுக்குத் தேவையான உருளைக்கிழங்கு, தேங்காய், அரிசி போன்றவற்றைக் குகைக்குள் தேவையான அளவுக்குச் சேகரித்தோம்.

தானியங்களை வெவ்வேறு காலங்களில் விதைத்ததால் அவற்றைப் பாதுகாப்பதும், அறுவடை செய்வதும் பெரும் பிரச்சினையாக இருந்தது. எனவே இனிமேல் எருமையையும், காளைமாட்டையும் பயன்படுத்தி நிலத்தை உழுது, வருடத்திற்கு ஒருமுறை மட்டுமே விதைப்பது என்றும்

தீர்மானித்தேன்.

விரைவிலேயே மழைக்காலம் தொடங்கியது. நாங்கள் குகை வீட்டில் குடிபுகுந்தோம். தொழிற்கூடம், சமையலறை, படுக்கையறைகள் தவிர மீதமுள்ள இடங்கள் இருளடைந்தே கிடந்தன. ஆகவே குகையின் உள்ளே உச்சியில் ஒரு விளக்கைக் கட்டித் தொங்கவிட்டோம்.

குறுகிய காலத்திலேயே எல்லாம் எங்கள் பழக்கத்திற்கு வந்துவிட்டன. தொழிற்கூடத்தில் நானும், ஃபிரிட்ஜும் எங்களுக்குத் தேவையான கருவிகளைச் செய்தோம். மற்ற பிள்ளைகள் அங்கிருந்த புத்தகங்களைப் படித்து ஏராளமான விஷயங்களைக் கற்றுக் கொண்டனர். விருப்பப்பட்டபோது படித்தனர். அந்தத் தீவின் மழைக்காலமான இரண்டு மாதங்களும் இவ்வாறு வேகமாகக் கழிந்தன.

# 16

ஆகஸ்ட் மாத இறுதியில் மழை சுத்தமாக நின்று போனது. மலையோரக் கடற்கரையில் நாங்கள் நடந்து சென்றபோது, ஃபிரிட்ஜ் மலை உச்சியிலிருந்தபடி சுற்றுப்புறத்தை வேடிக்கை பார்த்தான். அப்போது கடலையொட்டிய மணற்பரப்பில் கறுப்பான ஏதோ ஒரு பொருள் கிடப்பதைப் பார்த்தான். எனவே நானும் மூத்த குழந்தைகள் மூவரும் சிறிய படகில் ஏறிப் புறப்பட்டோம். நெருங்கிப் பார்த்தபோது அந்தக் கரிய உருவம் ஒரு திமிங்கலம் என்பது புரிந்தது. ஆனால், அது உயிருடன் உள்ளதா, இறந்து விட்டதா? என்பது தெரியாமலிருந்தது. படகை ஒதுக்குப்புறமான ஓர் இடத்தில் நிறுத்திவிட்டு மேலும் நெருங்கிப் பார்த்தபோதுதான், அது இறந்து கிடப்பது தெரிந்தது. அதிலிருந்து திமிங்கில எண்ணெய் எடுக்க விரும்பினேன். தற்சமயம் கையல் எந்தவிதமான கருவியும் இல்லாததால் அப்போது வெறுமனே வீடு திரும்பினோம்.

மறுநாள் என் மனைவியும், ஃபிரான்ஸிஸும் எங்களுடன் வந்தனர். உடைந்துபோன பழைய படகின் பீப்பாய்களை புதிய படகின் பின்னால் கட்டி இணைத்துச் சென்றோம். 80 அடி நீளமும் 30 அடி அகலமும் உள்ள அந்தத் திமிங்கலத்தைக் கண்டவுடன் ஃபிரான்ஸிஸ் மிரண்டுபோய் ஒரு பாறையின் பின்னால் ஒளிந்து கொண்டான். ஆனால், அவ்வளவு பெரிய திமிங்கலத்திற்குச் சிறிய தலையும், ஒரு காளைமாட்டின் கண் அளவிற்குள்ள கண்களுமே இருந்தன. இந்தத் தோற்றம் எனக்கும்

வியப்பை ஏற்படுத்தியது.

பத்து அடிக்கும் அதிகமான நீளம் கொண்ட அதன் தாடைகொம்புகள் வியாபார முறையில் மிகவும் புகழ்பெற்றவை.அதன் தொண்டைப் பகுதி சிறியதாகவே இருந்தது. எனவே, சிரித்தபடியே ஃபிரிட்ஜ் கூறினான்: “எவ்வளவுதான் பசியெடுத்தாலும் இந்தத் திமிங்கலத்தால் ஒரே நேரத்தில் வாய் நிறைய எதையும் விழுங்க முடியாது!”

ஃபிரிட்ஜும், ஜாக்கும் திமிங்கலத்தில் முதுகில் ஏறிக்கொண்டு அதன் தலையை வெட்டினர். பிறகு தாடை எலும்பையும் பக்குவாக அறுத்து எடுத்தனர். திமிங்கலத்தின் உடம்பிலிருந்து கொழுப்பு முழுவதையும் கவனமாக எடுத்தோம். என்னுடைய மனைவியும், ஃபிரான்ஸிஸும் கொழுப்பைக் கொண்டுபோய் தொட்டிகளில் நிரப்பினர்.

கடற்பறவைகள் சில எங்களுக்குத் தொல்லை தந்து போட்டியிட்டன. சிலவற்றைத் தடியால் அடித்துக் கொன்ற பிறகு மற்றவை பறந்தோடின.

பயணம் செய்யும் கால்நடைகளுக்குச் சேணம் தயாரிக்கவும், எங்கள் காலணிகளுக்கு அடித்தோலாகப் பயன்படவும் திமிங்கிலத் தோலின் நீண்ட ஒரு பகுதியைக் கிழித்து எடுத்தேன்.

மதிய நேரம் கடந்து விட்டிருந்தது. கடைசியாகப் புறப்படுவதற்கு முன்னால் திமிங்கிலத்தின் நாக்கில் ஒரு பகுதியை அறுத்தெடுத்தேன். திமிங்கிலநாக்குச் சுவையானது என்று ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தேன்.

கழுதை, காட்டுக்கழுதை, பசு ஆகிய மூன்றும் திமிங்கிலச் சதை நிரம்பிய தொட்டிகளைச் சுமந்து சென்றன. அவற்றை அப்படியே ஓடைக்கரையில் இறக்கி வைத்துப் பலகைகளால் மூடினேன். அதன் மீது மிகவும் கனமான கற்களையும் ஏற்றி வைத்தேன். இல்லாவிட்டால் அழுகிய திமிங்கிலத்தின் நாற்றம் தீவு மொத்தத்தையும் சூழ்ந்துகொள்ளுமே!

மறுநாள் நானும் பெரிய பையன்களும் மணல் தீவிற்குச் சென்று திமிங்கிலத்தின் குடல்கள், செதில், நரம்புகள் போன்றவற்றை அறுத்தெடுத்தோம். குடல்களை ஆறு முதல் பன்னிரண்டடி நீளமுள்ள துண்டுகளாக வெட்டி எடுத்து அவற்றைப் வெளிப்புறமாகத் திருப்பி மணலில் தேய்த்துச் சுத்தப்படுத்தினோம். பிறகு படகில் அத்துண்டுகளை

ஏற்றிக் கொண்டு தீவிற்குத் திரும்பினோம். ஒவ்வொரு துண்டிற்குள்ளும் காற்றை நிரப்பி, இரண்டு முனைகளையும் கட்டித் தொங்கவிட்டபடி வெயிலில் உலரவைத்தோம்.

மறுநாள் விடியற்காலையிலேயே வேலையைத் தொடங்கினோம். குகையிலிருந்து வெகுதூரம் தாண்டி எங்களது எண்ணெய் ஆலையை அமைத்தோம். திமிங்கலக் கொழுப்பு நிரம்பிய நான்கு பெரும் தொட்டிகளையும் சறுக்குவண்டி மீது ஏற்றினோம். அங்கிருந்து அவற்றை எண்ணெய் ஆலைக்கு எடுத்துச் சென்றோம்.

வண்டியிலிருந்து இறக்கிய ஒவ்வொரு தொட்டியின் அடிப்புறத்திலும் அரையங்குல அளவு விட்டமுடுள்ள துளை போட்டோம். தொட்டியின் மேற்புறம் கனமான பாறையைப் போட்டுக் கொழுப்பை அழுத்தி, துளைவழியாக வெளியேறச் செய்தோம். வழிந்த எண்ணெயை ஒரு பெரிய பாத்திரத்தில் பன்னாடையால் வடிகட்டிப் பிடித்தோம். எண்ணெயைத் திமிங்கலக் குடல்களால் நாங்கள் செய்து உலர்த்தியிருந்த உறைகளில் ஊற்றி அடைத்தோம்.

மீதமிருந்த கொழுப்பைப் பெரிய இரும்புச்சட்டியில் போட்டு உருக்கினோம். ஆறிய பிறகு அந்த எண்ணெயைக் கண்ணாடி பாட்டில்கள், குடுவைகள் போன்றவற்றில் நிரப்பினோம். முடிவில் எஞ்சியிருந்த சக்கைகளை நரியாற்றில் எறிந்தோம். வாத்துகளும், மீன்களும் அவற்றை விரும்பிச் சாப்பிட்டன.

“எண்ணெய் நிரம்பிய குடல்களையும், பாட்டில்களையும் வைப்பதற்குத் திமிங்கிலத் தீவிலேயே ஒரு (ஸ்டோர் ரூம்) சேமிப்பு அறையை ஏற்படுத்தினால் என்ன? நரிகளிடமடிருந்தும், குரங்குகளிடமிருந்தும், கோழிகளிடமிருந்தும் இந்த எண்ணெயைப் பத்திரமாகப் பாதுகாக்க முடியுமே!” என்று யோசனை கூறினாள் என் மனைவி. எனக்கும் அதுவே நல்லதாகப்பட்டது.

திமிங்கிலத்தின் உடலில் மீதமிருந்த பகுதிகளை அலையடித்துக் கொண்டு செல்லும் வரையில் காத்திருந்தோம். இச்சமயத்தில் எங்கள் படகின் துடுப்புகளைச் சக்கரத்தால் இயக்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்தேன். வெகுநாளாகவே குழந்தைகள் இதைச் செய்யுமாறு என்னிடம் வற்புறுத்தியிருந்தனர். வட்டமான ஒரு கைப்பிடியைச் சுற்றினால் அதனுடன் தொடர்பு கொண்டுள்ள பல்சக்கரம் இயங்கி, இரண்டு புறமுள்ள அச்சுத் தண்டுகளையும் சுழற்றும். அச்சுகளோடு

இணைக்கப்பட்ட அகன்ற திமிங்கல எலும்புகள் நீரைப் பின்னுக்குத் தள்ளும். இந்த முறையால் எங்கள் சிறிய படகு விரைவாகக் கடலில் செல்லும்.

ஒருநாள் குடும்பத்தினர் அனைவரும் தீவைச் சுற்றிப் பார்க்க பயணம் புறப்பட்டோம். முதலில் குரங்குக் காட்டிற்குப் பக்கத்தில் பணத்தை நிறுத்தித் தேங்காய்களையும் சிறுசிறு செடிகளையும் சேகரித்தோம். அடுத்ததாகப் பண்ணைக்குப் பக்கத்திலிருந்த கரையில் நிறுத்தி மாங்கன்றுகள் சிலவற்றைப் பறித்து எடுத்தோம். இப்பொழுது ஆடுகளும் கோழிகளும் எங்களைப் பார்த்து ஓடத்தொடங்கின. சில நாட்களாகச் சுதந்திரமாகப் பறந்தும் திரிந்தும் வாழ்ந்தவை. எங்களை முற்றிலுமாக மறந்து விட்டிருந்தன. பிள்ளைகள் வீசுகவணைப் பயன்படுத்தி ஆடுகளைப் பிடித்தனர்.

மதிய உணவின்போது திமிங்கல நாக்கைச் சமைத்துப் பரிமாறினாள் என் மனைவி. அது மிகுந்த எண்ணெய்ப் பசையுடனும், கசப்பாகவும் இருந்ததால், சாப்பிடாமல் நரிக்குக் கொடுத்துவிட்டோம்.

கரும்புகள் சிலவற்றைத் திமிங்கிலத் தீவில் நடுவதற்காகப் பிடுங்கினோம். மறுபடியும் படகு புறப்பட்டது. ஏமாற்றமுனை இந்த முறையின் ஏமாற்றவே செய்தது. காற்று மட்டும் சரியானபடி வீசாவிட்டால் படகு, மணல் திட்டுகளிலோ, புதர்களிலோ அகப்பட்டுப் புதையுண்டிருக்கும்!

இந்தப் பயணத்தின்போது கடலில், கடல்சிங்கங்கள் போரிடுவதை வேடிக்கை பார்த்தோம். அவை எழுப்பிய கர்ஜனை, எங்களை நடுங்க வைத்தது. விரைவாகப் படகைச் செலுத்தித் திமிங்கலத் தீவை அடைந்தோம்.

திமிங்கலத் தீவின் கடற்கரையில் ஒரு பெரிய ஆமை சிக்கிக் கொண்டது. அதுதான் திமிங்கலத் தீவிலிருந்து எங்களை, எங்களது தீவிற்குக் கொண்டு போய்ச் சேர்த்தது. கரையை அடைந்ததும் நாங்கள் அதைக் கொன்றோம். அதனுடைய மிகப் பெரிய மேலோடு குகையில் தண்ணீரைப் பிடித்து வைக்கப் பயன்பட்டது. அதன் இறைச்சியைப் பக்குவப்படுத்தி வைத்தோம். அது எங்களுக்குப் பல நாள்களுக்கு உணவானது.

# 17

எங்களிடமிருந்து கால்நடைகளால் உழவுக்கு உதவ முடியவில்லை. அதாவது அவை உழவைப் பழகவில்லை. எனவே மழைக்காலத்திற்கு முன்பாக வழக்கம்போல் விதைத்துக் கொள்ளலாமென்று கருதினேன்.

என் மனைவி கேட்டுக் கொண்டதற்கு இணங்க, துணி நெய்வதற்கான தறியை உருவாக்கினோம். குழந்தைகள் கேட்டுக் கொண்டபடி கால்நடைகளுக்கான சேணம், கடிவாளம் போன்றவற்றையும் செய்து கொடுத்தேன். இப்படியே நாட்கள் பல கழிந்தன.

கடந்த ஆண்டு போலவே இந்த ஆண்டும் பசுமையும் நீலமும் கலந்த பளபளப்பான மீன் கூட்டங்களும், நீர்நாய்க் கூட்டங்களும் வந்தன. நாங்கள் அவற்றை ஏராளமாகப் பிடித்துச் சுத்தம் செய்து உப்பிட்டுப் பக்குவப்படுத்தி எடுத்து வைத்தோம்.

தேவையை ஒட்டிக் கூடை முடையக் கற்றுக் கொண்டோம். ஆரம்பத்தில் கூடைகள் அழகாக இல்லாதபோதிலும் எங்களுடைய தேவைகளுக்கு உதவின.

ஒருநாள் ஈகிள்ஸ்நெஸ்ட்டிலிருந்து வெளிவந்த ஃபிரிட்ஜ், குகைக்குச் செல்லும் பாதையில் ஏதோ ஒன்று விரைவாக நகர்ந்து மறைவதைக் கவனித்தான். நான் ஓடிச்சென்று தொலைநோக்கியை எடுத்து வந்து என்னவென்று பார்த்தேன். அது ஒரு மலைப்பாம்பு. உடனே நாங்கள் குகைக்குள் புகுந்து கொண்டு கதவுகள் மற்றும் ஜன்னல்களை அடைத்தோம். புறாக்கள் வசிப்பதற்காக குகையில் உயரத்தில் கட்டிய கூடுகளின் வழியாக வெளியே பார்த்தோம். அந்த மலைப்பாம்பு நாங்கள் கட்டிய பாலத்தைக் கடந்து குகையை நோக்கி வந்து கொண்டிருந்தது. நாங்கள் ஓடிவந்த அவசரத்தில் பாலத்திலிருந்து பலகைகளை அகற்ற மறந்துவிட்டோம்!

குகைக்கும் பாம்பிற்கும் இடையே ஐம்பது அடி தூரம் இடைவெளி இருக்குமென்று தோன்றியது. பயத்தினால் நடுங்கியபடி எர்னஸ்ட் முதலில் பாம்பை நோக்கிச் சுட்டான். தொடர்ந்து ஜாக், ஃபிரான்ஸிஸ், நான், என் மனைவி எல்லோருமே அதை நோக்கிச் சுட்டோம். ஆனால், மலைப்பாம்பு நெளிந்து நெளிந்து விரைந்து ஊர்ந்து தப்பித்துப்

பக்கத்திலிருந்து காட்டுவாத்துக்கள் வசிக்கும் சதுப்பிற்குள் மறைந்தது.

அந்தப் பாம்பு உயிருடன் இருப்பதுவரை எங்களுக்கு ஆபத்துதான். எனவே, குழந்தைகள் யாரும் என்னைக் கேட்காமல் குகையை விட்டு வெளியேறக் கூடாதென்று நிபந்தனை விதித்தேன்.

அதனால், தொடர்ந்து மூன்று நாட்கள் குகையைவிட்டு வெளியேறாமல், உள்ளேயே அடைபட்டிருந்தோம். விலங்குகளின் தீனி வெகுவாகக் குறைந்தது. எனவே நாலாவது நாளன்று அவற்றை வெளியே மேய விடுவது என்று தீர்மானித்தேன். ஃபிரிட்ஜ் அவற்றைப் பத்திரமாக மேய்த்துவிட்டு வருவதாக உறுதி கூறினான்.

என் மனைவி அவசரப்பட்டு உடனே கதவைத் திறந்தான். கழுதை தன்னுடைய கட்டை அறுத்துக்கொண்டு விரைவாக வெளியே ஓடியது. கடந்த மூன்று நாட்களாகக் குகைக்குளேயே அடைபட்டிருந்ததால் முழுவேகத்துடன் அது பாய்ந்து ஓடியது. ஃபிரிட்ஜும் நானும் எவ்வளவு கூவி அழைத்தும் அது சட்டை செய்யாமல் நேராகச் சதுப்புக் காட்டிற்குள் நுழைந்தது.

நேரவிருக்கும் ஆபத்தை கழுதை உணரவில்லை. கழுதை பாய்ந்து வருவதை மலைப்பாம்பு பார்த்துக் கொண்டிருந்தது.

அது கழுதையை நோக்கி ஊர்ந்து வந்தது. தலையை நிமிர்த்தி சுற்றிலும் ஒரு தடவை பார்த்தது. திறந்த அதன் வாயிலிருந்து பிளவுபட்ட ஈட்டிகள் போல் இரண்டு நாக்குகள் வெளியே நீண்டன. கழுதை, பாம்பைப் பார்த்தவுடன் உரக்கக் கத்தியவாறே ஓட முயன்றது. ஆனால், அதற்குள் மலைப்பாம்பு பாய்ந்து விழுந்து கழுதையின் உடம்பில் சுற்றிக் கொண்டது.

கழுதையைக் காப்பாற்றுவதற்காகப் பாம்பைச் சுட்டுத்தள்ள விரும்பினர் குழந்தைக்ள. நான் அவர்களைத் தடுத்தேன். “இப்பொழுது சுடுவதால் பலனில்லை. பாம்பு தன்னுடைய இரையை விட்டுவிடாது. ஒருவேளை துப்பாக்கிக்குப் பயந்து விட்டுவிட்டாலும் உடனே அது நம்மீது பாயலாம். மலைப்பாம்பு இரையை விழுங்கிய பிறகு அசைவற்றுப் படுத்திருக்கும். அப்பொழுது அதைச் சுடுவதுதான் நல்லது!” என்றேன்.

மலைப்பாம்பு வாலை ஒரு மரத்தின் கனமான கிளையில் சுற்றிவிட்டு பிறகு நீண்ட உடலால் கழுதையின் உடம்பில் கயிறு போல் பல

சுற்றுகள் சுற்றியது. நன்றாகச் சுற்றிக்கொண்ட பிறகு கழுதையின் உடலை நெரிக்கத் தொடங்கியது. கழுதை கால்களையும், தலையையும் உதறி அதனிடமிருந்து விடுபட எவ்வளவோ முயன்றது. ஆனால், பாம்பின் பிடி மேலும் மேலும் இறுகியது. கழுதையின் போராட்டம் படிப்படியாகக் குறைந்து ஓய்ந்தது. கழுதை உயிரை விட்ட பிறகே, மலைப்பாம்பு அதன் எலும்புகளை நெருக்கி முறித்தது. கழுதையின் உடம்பில் இப்பொழுது தலைமட்டுமே உருமாறாமல் இருந்தது. உடம்பு மொத்தமும் ஒரு நீண்ட சக்கை போல் ஆகிவிட்டிருந்தது. பாம்பு அதைச் சுற்றி வந்து உமிழ் நீரைச் சிந்தியது. பிறகு கழுதையின் பின்னங்கால்கள் இரண்டையும் வாய்வழியே விழுங்கத் தொடங்கியது. பாம்பு கழுதையை விழுங்க விழுங்க அதன் வலிமையும் வேகமும் குறைவது போல் தோன்றியது. கழுதையின் தலை மட்டும் பாம்பின் வாய்க்கு வெளியே இருந்தது. பாம்பு, இப்பொழுது அசைவற்று மந்தமாகக் கிடந்தது. கழுதையின் முழு உடம்பும் மலைப்பாம்பின் வாய்க்குள் நுழைந்து இறங்க ஏறத்தாழ ஐந்து மணி நேரமானது.

நான் துப்பாக்கியுடன் விரைந்தேன். ஃபிரிட்ஜும், எர்னஸ்ட்டும் என்னைப் பின்தொடர்ந்தனர். நாங்கள் நெருங்கவதைக் கண்ட மலைப்பாம்பு தலை தூக்கியது. அதனுடைய கண்கள் மின்னிப் பளபளத்தன.

பாம்பு இருபதடி இடைவெளியில் இருக்கும்போது நானும் ஃபிரிட்ஜும் ஒரே நேரத்தில் அதை துப்பாக்கினால் சுட்டோம். குண்டுகள் பாம்பின் தலையைத் துளைத்தன. வால் வேகவேகமாகத் துடித்தது. நாங்கள் பாம்பை மேலும் நெருங்கி மறுபடியும் கைத்துப்பாக்கிகளால் சுட்டோம். அதன் உடம்பெல்லாம் ஒருவித நடுக்கம் பரவியது. ஒருமுறை அதன் உடல் விறைத்தது. அதன் உயிர் பிரிந்தது.

முப்பதடி நீளமுள்ள அந்தப் பாம்பின் தோலைக் கிழித்துவிடாமல் குழந்தைகள் பக்குவமாக உரித்தெடுத்தனர். பிறகு காய்ந்த புற்களைத் தோலுக்குள் திணித்துத் தலையையும் இணைத்து எங்களது இயற்கைப் பொருட்காட்சிச் சாலையில் கொண்டு போய் வைத்தனர்.

அது பெண்பாம்பாக இருந்ததால் அதனுடைய ஆண் துணையோ, வேறு குட்டிகளோ தீவில் இருக்கக்கூடுமென்று நான் பயந்தேன். எனவே, மறுநாள் மூத்த குழந்தைகளை அழைத்துக்கொண்டு சதுப்பு நிலப் பகுதியை ஆராய்ந்து வரப் புறப்பட்டேன். ஆங்காங்கே பாம்பின் தடயங்கள் தென்பட்டன. சதுப்பு நிலத்தில் மறு ஓரத்தில் பாம்புக்

கூடுபோன்ற ஒன்று இருந்தது. ஆனால், நான் எதிர்பார்த்ததுபோல் அதில் வேறு பாம்போ, குட்டிகளோ, முட்டைகளோ இல்லை!

மேலும் சிறிது தொலைவு நடந்தபோது மலைத்தொடரை அடைந்தோம். பன்னிரண்டு அடி ஆழமான ஒரு குகையிலிருந்து பளிங்கு போன்ற தெளிவான தண்ணீர் ஓடையாகப் பாய்ந்து வெளியேறிக் கொண்டிருந்தது. அந்தக் குகையின் கூரைப் பகுதியிலும் பக்கப் பகுதிகளிலும் உவர்மண் படிந்திருந்தது. உவர்மண் துணி வெளுக்கப் பயன்படுமென்று கருதி அவற்றை உருண்டை உருண்டையாகத் திரட்டி எடுத்துக் கைக்குட்டைகளில் முடிந்து கொண்டோம்.

ஓடை எங்கிருந்து வருகிறது என்பதைக் கண்டறிய விரும்பினோம். நீர் வடிந்து கொண்டிருந்த இடுக்கைப் பெரிதாக்கிப் பார்த்தோம். பிறகு நானும் ஃபிரிட்ஜும் அதற்குள் ஊர்ந்து சென்றோம். உள்ளே செல்லச் செல்ல எழுந்து நிற்குமளவுக்கு வழி பெரியதாக இருந்தது. பையிலிருந்து இரண்டு மெழுகுவத்திகளை எடுத்துக் கொளுத்திப் பார்த்தோம்.

மெழுகுவத்தியின் ஒளி குறையத் தொடங்கியது. எனவே, நாங்கள் விரைவாகக் குகையிலிருந்து வெளியேறினனோம்.



## 18

அடுத்த நாள் குடாப் பகுதிக்கு அருகே நாங்கள் அமைத்திருந்த பண்ணைவரை சென்று சுற்றிப் பார்த்துவிட்டு வரலாம் என்ற யோசனையை வெளியிட்டேன். மற்றவர்களும் அதை விரும்பினர். எனவே மூன்று வாரங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள், தீப்பந்தங்கள் போன்றவற்றை வண்டியில் எடுத்துக் கொண்டு புறப்பட்டோம்.

முதல் நாளன்று ஏரிக்கரையிலுள்ள எங்களது பண்ணைக்குச் சென்றோம். ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்கு அருகே மலைப்பாம்பு ஊர்ந்து வந்த தடயம் தென்பட்டது. என்றாலும் அங்கிருந்த கால்நடைகள் பத்திரமாக இருந்தன. எண்ணிக்கையிலும் அவை பெருகியே இருந்தன.

மதிய உணவிற்குப் பிறகு நாங்கள் இரண்டு பிரிவாகப் பிரிந்து ஏரியின் இரண்டு கரைகள் வழியாகப் பயணமானோம். நானும் ஃபிரான்ஸிஸும் இடதுபுறமாகச் சென்றோம். ஃபிரிட்ஜும், ஜாக்கும் வலதுபுறமாகச்

சென்றார்கள். எர்னஸ்ட் தனது அம்மாவிற்குத் துணையாகப் பண்ணையிலேயே தங்கிவிட்டான்.

புதர்களுக்கு நடுவிலிருந்து கழுதையின் கனைப்பு போன்ற ஒலி எழுந்தது. ஃபிரான்ஸிஸ் அப்பொழுதுதான் முதன் முதலாகத் துப்பாக்கியை ஏந்தியிருந்தான். சுட்டுப் பார்க்க ஆசைப்பட்டான். சம்மதம் அளித்தேன். அவன் முதல் தடவையாகச் சுட்டபோது தென்னமெரிக்கப் பன்றி இனத்தைச் சேர்ந்த ஒரு பன்றி இறந்து விழுந்தது. நாங்கள் பண்ணைக்குத் திரும்பி வந்தபோது எர்னஸ்ட் புதுவிதமான எலிகளை நிறையக் கொன்று குவித்திருந்தான். அது மட்டுமின்றி ஏரிக்கரையில் அவன் கண்டுபிடித்திருந்த எலி வளையையும் எங்களுக்குக் காட்டினான். அவை உயர்ந்த ஜாதி கஸ்தூரி எலிகள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

ஜாக்கும், ஃபிரிட்ஜும் திரும்பி வந்தனர். ஜாக், நீர்க்கோழிகள் இரண்டைச் சுட்டுக் கொண்டு வந்திருந்தான். அத்துடன் லவங்க மரத்திலிருந்து நன்கு பழுத்த பழங்கள் சிவலற்றையும் பறித்துக்கொண்டு வந்திருந்தான்.

மறுநாள் நாங்கள் கரும்புக் கொல்லையை அடைந்தோம். நாங்கள் கட்டியிருந்த குடிசை சிதிலமாகியிருந்தது. மலைப்பாம்பு வந்து சென்றதற்கான தடயம் எதுவும் தட்டுப்படவில்லை. ஆனால், தோட்டத்திற்கு உள்ளிருந்து பெருத்த ஆரவாரம் கேட்டது. சிறிது நேரத்திற்குள் பன்றிகள் ஒன்றின்பின் ஒன்றாக வெளிப்பட்டன. அவை படையணிவகுப்பு போல் ஒருவித ஒழுங்குடன் வந்தன. நான் இரண்டு பன்றிகளைத் துப்பாக்கியால் சுட்டேன். அதன் பிறகும் பதற்றமடையாமல் அவை வரிசையாக நகர்ந்தது எனக்கு வியப்பளித்தது. ஃபிரிட்ஜும், ஜாக்கும் மேலும் இரண்டு பன்றிகளைச் சுட்டனர். சற்று நேரத்தில் குடிசைப் பக்கமிருந்து துப்பாக்கி வெடிக்கும் ஓசை கேட்டது. எர்னஸ்டும் என் மனைவியும் மேலும் சில பன்றிகளைச் சுட்டு வீழ்த்தியிருந்தனர்.

இந்தப் பன்றிகளின் இறைச்சி மொத்தத்தையும் சுத்தம் செய்து பதப்படுத்தி வைத்தோம். பிறகு கரும்புக் கொல்லையை ஒட்டி வண்டி செல்வதற்கு வழியமைத்துவிட்டுப் பயணத்தைத் தொடர்ந்தோம். இரண்டு மணி நேரப் பயணத்திற்குப் பிறகு ஒரு தோப்பை அடைந்தோம். அன்றிருவு அருகிலிருந்த மலையடிவாரத்தில் கூடாரம் அமைத்துத் தங்கினோம்.

மறுநாள் நானும் பெரிய பையன்கள் மூவரும் கூடாரத்திலிருந்து கிளம்பினோம். ஆற்றைத் தாண்டிய பிறகு எருமைக்காடு எதிர்ப்பட்டது. அதற்கும் மலைக்கும் நடுவிலிருந்த பகுதி பாலைவனம் போல் இருந்தது. மேலும் இரண்டு மணிநேரம் நடந்த பிறகு மலைச்சரிவை அடைந்தோம். தொலைவில் ஆற்றின் எதிர்க்கரையில் பசுமையான புல்வெளியும், மறுபுறம் பாலைவனம் போன்ற நிலப்பரப்பும் தெரிந்தன.

குரங்குக்குட்டி திடீரென்று துள்ளிப் பாய்ந்து மலை உச்சியை அடைந்தது. நாங்கள் கரும்புச் சாற்றை வேண்டிய மட்டும் பருகித் தாகம் தீர்த்துக் கொண்டோம்.

மலையடிவாரத்தை அ டைந்த ஃபிரிட்ஜ், “குதிரைக் குளம்புகளின் சத்தம் கேட்கிறது. சந்தேகமில்லாமல் அராபியர்கள் வருகின்றனர்!” என்று உரத்த குரலில் கூறினான்.

நான் தொலைநோக்கியை அவனிடமிருந்து வாங்கி உற்றுக் கவனித்தேன். “வைக்கோல் போர் நிரம்பிய வண்டிகள் போல் காட்சியளிப்பை ஒன்று யானைக் கூட்டமாக இருக்கலாம்! அல்லது காண்டாமிருகமாக இருக்கலாம். தொடர்ந்து வரும் மந்தைக்ள எருமைகளாகவோ அல்லது கலைமான் கூட்டமாகவோ இருக்கும். அராபியர் என்று ஃபிரிட்ஜ் குறிப்பிட்டது என்னவென்று நீங்கள் யாராவது சொல்லுங்கள் பார்ப்போம்?” என்று மற்ற பிள்ளைகளிடம் கேட்டேன்.

“ஒட்டகச்சிவிங்கிகளாக இருக்கலாம்!” என்று கூறினான் ஜாக்.

“அவை நெருப்புக்கோழிகளாக இருக்கக்கூடும் என்று நான் கருதுகிறேன்!” என்றேன்.

ஜாக்கும், ஃபிரிட்ஜூம் விரைந்து சென்று குரங்குகளையும் நாய்களையும் அழைத்து வந்தனர். நாங்கள் கள்ளிச்செடிப் புதருக்குப் பின்னால் ஒளிந்து கொண்டோம். நான்கு பெண் நெருப்புக் கோழிகளும் ஓர் ஆண் நெருப்புக் கோழியும் எங்களை நெருங்கின.

“இவை குதிரைகளைவிட விரைவாக ஓடக்கூடியவை. கழுகின் உதவியுடன்தான் இவற்றில் ஒன்றைப் பிடிக்க முடியும். பகைவர்களிடமிருந்து தப்பிக்க இவை வட்டப் பாதையிலேயே சுற்றிச் சுற்றி வரும். நாம் அந்த வட்டத்தைச் சுருங்கச் செய்தால், அது மட்டும்

நம்மால் முடிந்தால் பிடித்து விடலாம்!" என்றேன்.

இப்பொழுது எங்களுக்கும் அவற்றுக்குமிடையே இருநூறடி தூரம் இடைவெளிதான் இருந்தது. நாய்கள் பொறுமையற்றுப் பாய்ந்தன. உடனே எல்லா நெருப்புக்கோழிகளும் விரைவாக ஓடத் தொடங்கின. ஃபிரிட்ஜ் கழுகின் கண்கட்டை அவிழ்த்து விட்டான். சேவலின் கண்களைக் கழுகு கொத்தியது. நாய்களும் உடனே பாய்ந்து அதைத் தாக்கின. அதனுடைய பரிதாபகரமான நிலை என் நெஞ்சை நெகிழ வைத்தது. நான் அதைச் சுட்டுக் கொன்றேன். அதனுடைய இறக்கையில் இருந்த இறகுகளை எடுத்து எங்களது தொப்பிகளில் செருகிக் கொண்டோம். பளபளப்பான அந்த இறகுகளுக்கு, சாயம் போன எங்களது பழைய தொப்பிகள் சற்றும் பொருத்தமில்லாதவை போல் தோன்றின.

நெருப்புக்கோழிகள் மண்ணைத் தோண்டிக் குழி பறித்துக் கூடு அமைத்திருந்தன. அந்தக் கூடுகளிலிருந்து ஒவ்வொரு பிள்ளையும் ஆளுக்கு ஒரு முட்டையை எடுத்துக் கொண்டனர். ஒவ்வொரு முட்டையும் ஒரு குழந்தையின் தலையளவுக்குப் பொயிதாக இருந்தது!

அதன்பின்னர் நாங்கள் அங்கிருந்து கிளம்பினோம். வழியில் நாங்கள் பார்த்த ஒரு சிறிய குளத்தின் நீர் சுவை மிக்கதாக இருந்தது. அந்தக் குளக்கரையைக் குரங்குக்குட்டி திடீரென தோண்டத் தொடங்கினோம். அங்கு நிறைய சிறிய சிறிய ஆமைகள் அகப்பட்டன. அவற்றைப் பையில் போட்டுக்கொண்டு நடக்கத் தொடங்கினோம்.

பாலைவனப் பகுதியில் புகுந்தோம். முன்புறமாக நடந்து கொண்டிருந்த எர்னஸ்ட் திடீரென்று பின்வாங்கி நின்று நடுங்கியபடி, என்னைக் கட்டிக் கொண்டு "கரடி....கரடி!" என்று பயத்தில் உலறினான்.

எனக்கும் உள்ளூற நடுக்கம் தோன்றியது. இருந்தாலும் நிதானமாகத் துப்பாக்கியில் குண்டுகளைப் பொருத்தித் தயாராக நின்றோம். நாய்கள் முன்புறமாகப் பாய்ந்தன. நூறு அடி தொலைவில் கரடியொன்று நின்றிருந்தது. மற்றொன்று அப்பொழுதுதான் குகையிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்தது.

ஃபிரிட்ஜும் நானும் எச்சரிக்கையுடன் மெதுவாக முன்னேறினோம். மற்ற இருவரும் பின்தங்கி நின்றனர். நான் சுட்டதில் ஒரு கரடியின் தாடை எலும்பு நொறுங்கியது. ஃபிரிட்ஜ் சுட்ட குண்டு, இரண்டாவது

கரடியின் தோளைச் சிதைத்தது. தொடர்ந்து நாய்களும் அவற்றின் மீது பாய்ந்தன. சில விநாடிகளில் நாய்களின் உடம்பெல்லாம் கரடியின் நகங்கள் பதிந்து ரத்தம் வடிந்தது. மறுபடியும் நாங்கள் சுட்டால் நாய்களின் மீது குண்டு பாய்ந்துவிடுமோ என்று தயக்கத்துடனும், திகைப்புடனும் நின்றோம். நாய்கள் விடாமல் போராடி ஒரு கரடியை மண்ணில் வீழ்த்தியது. நான் உடனே அருகில் சென்று அதைச் சுட்டேன்.

மிகப்பெரிய விபத்திலிருந்து எங்களைக் காப்பாற்றிய கடவுளுக்கு நன்றி தெரிவித்தோம். மற்ற குழந்தைகளும் எங்களை நெருங்கி வந்தனர். இந்தக் கரடிகளை இப்பொழுதைய நிலையில் எங்களால் எடுத்துச் செல்ல முடியாது. எனவே இரண்டு கரடிகளின் உடம்பையும் குகைகுள்ளேயே இழுத்துப் போட்டுவிட்டுப் பறவைகள் அவற்றின் உடம்பைக் கொத்தித் தின்னாமல் இருப்பதற்காக முள்செடிகளை இழுத்துப் போட்டுக் குகை வாசலை மூடினோம்.

நாங்கள் கூடாரத்திற்குத் திரும்பி வந்தபோது என் மனைவியும் ஃபிரான்ஸிஸும் எங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். நாங்கள் இல்லாத சமயத்தில் என் மனைவி பயனுள்ள ஒரு பொருளைக் கண்டுபிடித்திருந்தாள். அது வெள்ளைக் களிமண். எனவே, அந்தக் களிமண்ணைப் பயன்படுத்தி தட்டுகளையும், கிண்ணங்களையும் தயாரிக்கத் திட்டமிட்டேன்.

மறுநாள் காலையில் நாங்கள் கரடிக்குகையை நெருங்கியபோது பெரிய பெரிய வல்லூறுகள் குகையைச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தன. அவை வானை நோக்கி உயர்ந்தும், குகைப்பக்கம் தாழ்ந்தும் மிதந்து பறந்தன. கறுத்த உடலுள்ள மிகப்பெரிய வல்லூறு ஒன்று குகையை நோக்கிப் பறந்து வந்தது.

ஃபிரிட்ஜ் சிறிதும் தயங்காமல் அதைச் சுட்டான். கருமையான வல்லூறு உயிரிழந்து தரையில் விழுந்தது. வெடியோசையையும், வல்லூறு இறந்து விழுந்ததையும் கண்ட மற்ற வல்லூறுகள் பயத்துடன் பறந்து மறைந்தன. நல்லவேளையாகப் பறவைகள் கரடிகளின் கண்ணையும் குடலையும் மட்டுமே கொத்தியிருந்தன. கரடித்தோலையும் இறைச்சியையும் இறந்தபோன வல்லுரையும் வண்டியில் ஏற்றிக்கொண்டு நாங்கள் கூடாரத்திற்குத் திரும்பினோம்.

கரடி இறைச்சியைத் துண்டு துண்டாக நறுக்கி உப்பிட்டு உலர்த்துவதற்கும், அதனுடைய தோலைக் கம்பளியாக மாற்றுவதற்கும் இரண்டு நாள்கள் முழுமையாகத் தேவைப்பட்டன.

வல்லூறின் இறைச்சியை எடுத்துவிட்டுத் தோலைச் சுத்தம் செய்து பஞ்சையும், புற்களையும் நிரப்பிக் கண்காட்சி சாலையில் வைத்தோம்.

தொடர்ந்து இதேபோன்ற நிகழ்ச்சிகளில் ஈடுபட்டு அலுத்துப்போன குழந்தைகளிடம் ஒரு மாற்றத்திற்காகப் புல்வெளியைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருமாறு அனுப்பி வைத்தேன். நானும் என் மனைவியும் வீட்டுவேலைகளைக் கவனித்தோம். எர்னஸ்ட் எங்களுக்கு உதவியாக வீட்டில் இருந்து கொண்டான்.

மாலையில் திரும்பி வந்தபோது ஜாக் இரண்டு கலைமான் கன்றுகளைக் கொண்டு வந்தான். ஃபிரிட்ஜ் கொண்டு வந்திருந்த பையில் முயல்கள் சில உயிருடன் இருந்தன.

மறுநாள் நெருப்புக்கோழியின் முட்டைகளையும், கள்ளிச்செடியின் பாலையும் எடுத்து வருவதற்காகக் கிளம்பினோம். எங்களது வழக்கமான வண்டியிலேறி அராபியச் சிகரத்தை அடைந்தோம். ஜாக்கும் ஃபிரான்ஸிஸும் முன்னால் சென்றனர். நானும் ஃபிரிட்ஜும் கள்ளிப்பாலைக் குடுவைகளில் சேகரித்தோம். குரங்குகளைக் கொல்வதற்கு ஏற்ற பசையாகவும், விஷமாகவும் கள்ளிப்பால் பயன்படுமென்று அவனிடம் விளக்கினேன்.

பிறகு எங்களுக்கு முன்னால் சென்றுள்ளவர்களை நெருங்குவதற்காக விரைவாக நடந்தோம். இந்தத் தடவை எப்படியாவது குறைந்த பட்சம் ஒரு நெருப்புக்கோழயையாவது உயிருடன் பிடிக்க விரும்பினான் ஃபிரிட்ஜ். எனவே கழுகின் அலகுகளை இறுகக்கட்டி அதை ஆயத்தப்படுத்தினான்.

நாங்கள் நெருப்புக்கோழியின் ஒரு கூட்டை நெருங்கியபோது நான்கு பெரிய நெருப்புக்கோழிகள் நாங்கள் இருந்த திசையை நோக்கி வேகமாக வந்தன. சட்டென்று நாங்கள் அசையாமல் அப்படியே நின்றுவிட்டதால் அவை எங்களைப் பொருட்படுத்தவில்லை. ஆண்கோழி(சேவல்)தான் அவற்றுக்குத் தலைமை தாங்கி முன்னால் வந்தது. அது எங்களை நெருங்கியதும் நான் வீசுகவணைப் பயன்படுத்தினேன். இம்முறை கயிறு அதன் கால்களில் சிக்கிக்

கொள்ளாமல் உடலின் மீது விழுந்தது. உடனே அது திரும்பி ஓடத் தொடங்கியது. தொடர்ந்து வந்த பெட்டைக்கோழிகள் சிதறியோடின.

ஜாக்கும் ஃபிரான்ஸிஸும் முன்புறமாகச் சென்று அவற்றை வழிமறித்தனர். ஃபிரிட்ஜ் கழுகை ஏவிவிட்டான். கழுகு தன்னுடைய சிறகால் மோதியறைந்து ஒரு நெருப்புக்கோழியைத் திடுக்கிட வைத்தது. இம்முறை ஃபிரிட்ஜ் எறிந்த வீசுகவண் சரியாக அதன் கால்களில் சிக்கியதால் அது மண்ணில் விழுந்து உருண்டது. விரைந்து அதை அணுகினோம். அதனுடைய கண்களைக் கைக்குட்டையால் மறைத்த பிறகு அது அடங்கி நின்றது. தோல் வார் ஒன்றினால் அதனுடைய இறக்கைகளைப் பிரிக்க முடியாதபடி கட்டினேன். வேகமாக ஓட முடியாதபடி ஆனால், நடப்பதற்க்கு உதவியாக அதனுடைய கால்களைக் கயிற்றினால் கட்டி வைத்தேன். காளைக்கும், எருமை மாட்டிற்கும் நடுவே நெருப்புக்கோழியை நடக்கவிட்டு நாங்கள் அங்கிருந்து திரும்பத் தொடங்கினோம்.

ஆரம்பத்தில் நெருப்புக்கோழி இடப்பக்கமும், வலப்பிக்கமும் மாறிமாறித் துள்ளியது. ஆனால், நேரம் செல்லச்செல்ல, தன்னுடைய முயற்சி பயனற்றது என்று உணர்ந்து அதன்பின் ஒழுங்காக நடந்து வந்தது.

கூட்டில் பெட்டைநெருப்புக்கோழி ஒன்று முட்டைகளை அடைகாத்துக் கொண்டிருந்தது. எங்களைக் கண்டவுடன் அது சட்டென்று ஓடி மறைந்தது. அங்கிருந்த பத்து முட்டைகளையும் நாங்கள் ஒரு துணியில் கவனமாக முடிந்து கொண்டோம்.

நெருப்புக்கோழியை நாங்கள் உயிருடன் பிடித்துச் சென்றதைக் கண்டு என் மனைவி பிரமிப்பில் வாய்மூடிப் போனாள்.

மறுநாள் எங்களது கூடாரத்தைப் பிரித்தோம். நெருப்புக் கோழியின் கண்களைக் கட்டிய பிறகே அது எருமை மாட்டிற்கும் காளை மாட்டிற்கும் இடையே ஒழுங்காக நடந்து வந்தது. வழியில் வெள்ளைக் களிமண்ணைத் தோண்டி எடுத்தோம். பிறகு கருப்புக் கொலைக்கு அருகே நாங்கள் பதப்படுத்தி வைத்திருந்த பன்றி இறைச்சியையும் எடுத்துக் கொண்டோம்.

பண்ணையை அடைந்தபோது நாங்கள் மிகவும் களைப்படைத்திருந்தோம். எனவே, உடனே சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டோம்.

மறுநாள் கடுமையாக இருந்த வெயிலைப் பொருட்படுத்தாமல், எங்கும் தங்கி ஓய்வெடுக்காமல் இருட்டுவதற்கு முன்பாகக் குகை வீட்டை அடைந்தோம். இனி நீண்ட நாள்களுக்கு இதுபோன்ற சுற்றுப்பிரயாணத்தை மேற்கொள்வதில்லை என்கிற தீர்மானத்தை மேற்கொண்டோம்.

மறுநாள் என் மனைவி குகைவீடு முழுவதையும் சுத்தப்படுத்தினாள். நெருப்புக்கோழியை ஒரு மூங்கில் தூணில் கட்டி வைத்தோம். அதனுடைய முட்டைகளில் ஐந்து மட்டுமே குஞ்சு பொரிப்பதற்கு உகந்தது என்று தெரிந்தது. அதற்காக ஒரு பாத்திரத்தையும், அடுப்பையும் தனியாக அமைத்தேன். எப்பொழுதும் ஒரே வெப்ப நிலையில் இருக்குமாறு நெருப்பை எரியவிட்டுப் பாத்திரத்தில் நீர் ஊற்றி முட்டைகளை அதற்குள் போட்டேன்.

முயல்களின் உடம்பிலிருந்த ரோமங்களைக் கத்தரித்து எடுத்த பிறகு அவற்றைச் சுறாதீவில் கொண்டுபோய் விட்டோம். கலைமானின் கன்றுகளையும் அங்கேயே விட்டுவைத்தோம். பாலைவனப் பகுதியிலிருந்து கைப்பற்றிய ஆமைகளில் இரண்டு மட்டுமே இப்போது உயிருடன் இருந்தன. எனவே அவற்றைக் காட்டு வாத்துகள் குடியிருக்கும் சதுப்பு நிலத்தில் கொண்டுபோய் விட்டோம். அங்கு சென்றபோது எனது பையன்கள் ஒரு பெரிய விலாங்குமீனைப் பிடித்தனர்.

ஏராளமாகக் கொன்றுகுவித்த கஸ்தூரி எலிகளின் தோல் நாற்றம் மூக்கைத் துளைத்ததால், அவற்றை எடுத்துச் சென்று குகையிலிருந்து சற்றுத் தொலைவிலுள்ள ஒரு மரத்தின் உச்சிப் பகுதியில் கட்டி வைத்தோம்.

ஓர் ஏக்கர் நிலப்பரப்பு முழுவதையும் கொத்திப் பண்படுத்தினோம். ‘நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடுவது’ என்பதன் உண்மையான பொருளை அப்பொழுதுதான் அனுபவமுறையில் உணர்ந்தோம். நிலத்தை மூன்று பகுதிகளாக்கி, கோதுமை, சோளம், பார்லி ஆகிய தானியங்களைத் தனித்தனியாக மூன்று பகுதிகளிலும் விதைத்தோம்.

நெருப்புக்கோழி சுலபத்தில் எங்களிடம் வசப்படவில்லை. புகையிலைப் புகைபோடுதல், தீனி தராமல் பட்டினி போடுதல் போன்ற உபாயங்களைப் பயன்படுத்திய பிறகு அது ஓரளவிற்கு வசப்படத்

தொடங்கியது. அதற்கும் படிப்படியாக ஒவ்வொரு வேலையாகக் கற்றுக் கொடுத்தோம். அதற்குக் கடிவாளமோ, மூக்கணாங்கயிறோ மாட்டுவது எப்படி என்பதுதான் புரியாமலிருந்தது. கடைசியாகத் தோலால் அதற்கு ஒரு கண்கட்டு (குதிரை வண்டியில் பூட்டப்படும் குதிரைகளின் கண்களை மறைத்துக் கண்கட்டு அணிவிப்பார்களே, அதே போன்று) செய்து பொருத்தினேன். அவற்றின் விழியருகே கண்கட்டில் துளை செய்து, தேவைப்படும்போது மூடவும் திறக்கவுமான ஓர் அமைப்பை, சிறிய ஆமைகளின் ஓட்டினல் வடிவமைத்தேன். இடது கண்ணை மூடிவிட்டால் வலதுபுறமாகத் திரும்பும். வலது கண்ணை மூடினால் இடதுபுறமாகத் திரும்பும். ஒரே சமயத்தில் இரண்டு கண்களையும் மூடிவிட்டால் அப்படியே நின்றுவிடும்!

பின்னர் அதற்கென்று பிரத்தியெகமாக ஒரு சேணத்தையும் தயார் செய்தேன். இதையெல்லாம் செய்து முடித்த பிறகு அது ஜாக்கின் வாகனமாயிற்று.

ஐந்து முட்டைகளை அடைகாக்க வைத்ததில் மூன்று மட்டுமே குஞ்சு பொரித்தன. மூன்றிலும் ஒன்று, பொரித்து வெளிவந்த மறுநாளே இறந்து போனது!

கரடித்தோலைக் கொண்டு பலநாள் இடைவிடாமல் பக்குவப்படுத்திச் சீர்செய்ததால் அருமையான கம்பளிகள் கிடைத்தன. எலி, முயல் போன்றவற்றின் தோலைப் பயன்படுத்தி சிறுவன் ஃபிரான்ஸிஸிற்கு அழகான தொப்பி ஒன்றைச் செய்து கொடுத்தேன்.

குயவர்கள் பயன்படுத்தும் ஒரு சக்கரத்தை வடிவமைத்துக் கொண்டு, அதன் நடுவில் வெள்ளைக் களிமண்ணைக் குழைத்து வைத்துச் சக்கரத்தை இயக்கி, பல பாத்திரங்கள், கோப்பைகள், தட்டுகள் போன்றவற்றைத் தயாரித்தேன்.

அதற்குள் மழைக்காலம் தொடங்கிவிட்டதால் நாங்கள் குகை வீட்டிற்குள்ளேயே அடைபட்டுக் கிடக்க நேர்ந்தது. வேலைகள் எதுவும் செய்யாமலிருந்து பிள்ளைக்ள சோம்பல் அடைந்து விடுவார்களோ என்று பயந்தேன். ஆனால், ஃபிரிட்ஜ் ஒரு யோசனை தெரிவித்தான்: “நம்முடைய படகு மிகவும் பெரியது. சிறிய படகு அவ்வளவு உதவிகரமாக இல்லை. எனவே, துருவப் பிரதேசத்தில் வாழும் எஸ்கிமோ மக்கள் பயன்படுத்தும் கயக் போல் நீரில் விரைந்து செல்லும் ஒரு படகை நாம் உருவாக்கினால் என்ன?”

யோசித்தேன். ஃபிரிட்ஜின் திட்டம் பயனுள்ளதுதான் என்று தோன்றியது. அந்தத் திட்டத்தை மழைக்காலத்தில் தொடங்குவது என்று தீர்மானித்தேன்.

திமிங்கலத்தின் எலும்பு, மூங்கில், மெல்லிய- ஆனால் வலுவான பிரம்பு போன்றவற்றின் உதவியுடன் முதலில் படகின் சட்டங்களை உருவாக்கினோம். பிறகு இவற்றை அடிக்கட்டையுடன் இணைத்தோம். படகைத் தள்ளிக்கொண்டு போவதற்கு வசதியாக அதனுடைய அடியில் இரண்டு சக்கரங்களைப் பொருத்தினேன். மற்ற வேலைகள் வெகுநாள் கழித்தே நடைபெற்றன. இருந்தாலும் நாங்கள் செய்ததைச் சொல்லிவிடுகிறேன். இரண்டு நீர்நாய்களின் பெரிய தோலைத் தேர்ந்தெடுத்து இரண்டு பக்கங்களிலும் போர்த்தியதுடன் இரண்டு தோலின் அடிப்புறத்தையும் ஒன்றாக இணைத்துத் தைத்தேன். நூல் வைத்துத் தைத்த இடங்களில் கீலை உருக்கி ஊற்றினேன். உட்புறத்தையும் இதே போல் நீர்நாய்த் தோல்களால் மூடினேன். படகைச் செலுத்துபவர் உட்காருவதற்கான இடமும், உணவுப் பொருள் மற்றும் முக்கியமான பொருள்களை வைத்துக் கொள்ள ஒரு பெட்டியையும் படகின் உட்புறம் அமைத்தேன். இவ்வாறு தோலாலான கயக் உருவானது!



உடைகளுக்கு மேல் அணியக்கூடிய கோட்டு போல் ஒரு நீச்சல் உடையையும் நீர்நாய்த் தோலின் உதவியால் செய்தேன். குழாயின் வழியே காற்றை ஊதினால் அந்த உடையின் பகுதிகளில் காற்று நிறைந்து கொள்ளுமாறு நீச்சல் உடையைத் தயாரித்தேன்.

ஒருநாள் இந்த நீச்சல் சட்டையில் காற்றை நிரப்பி ஃபிரான்ஸிஸுற்கு அணிவித்தேன். காற்றடைந்த பலூன் ஒன்று நடப்பது போல் அவன் நடந்து சென்றான். பிறகு கடலில் இறங்கி சுறாத்தீவை நோக்கி நீந்தத் தொடங்கினான். நாங்களும் படகில் அவனைப் பின்தொடர்ந்தோம். சுறாத்தீவை அடைந்த பிறகும்கூட அந்தச் சட்டைக்குள் ஒரு சொட்டு நீர்கூடச் செல்லவில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன்.

கலைமான் குட்டிகளும், முயல்களும் அந்தத் தீவில் மகிழ்ச்சியுடனிருந்தன. அன்றே திமிங்கிலத் தீவிற்கும் சென்றோம். திமிங்கலத்தின் சதைப் பகுதிகள் இற்றுப்போய் அது வெறும் எலும்புக்கூடாக மாறியிருந்தது. திமிங்கலத்தின் முதுகெலும்பு வளையங்களில் பன்னிரண்டை எடுத்துக்கொண்டு வீட்டிற்குச் திரும்பினோம். அந்த எலும்புகளை வைத்துக்கொண்டு மாவு அரைக்கும்

திரிகைக் கல் ஒன்றை அமைக்கத் திட்டமிட்டேன்.

எர்னஸ்ட் படிப்பதில் ஆர்வத்துடன் ஈடுபட்டான். மற்ற குழந்தைகள் எலிவேட்டைக்குச் சென்றிருந்தனர். எனவே நான் மட்டும் தனியாகச் சென்று திரிகைக்கு ஏற்ற மரக்கட்டைகளைக் கொண்டுவரப் புறப்பட்டேன். நரியாற்றங்கரையிலிருந்த எங்களது கிழங்குத் தோட்டத்தைப் பார்த்தபோது திடுக்கிட்டேன். பயிர் கிழங்குத் தோட்டத்தைப் பார்த்தபோது திடுகிட்டேன். பயிர் செய்திருந்த பகுதி முழுவதும் தாறுமாறாகக் கிளறப்பட்டிருந்தது. ஊன்றிக் கவனித்தபோது ஆங்காங்கே பன்றிகளின் கால்சுவடுகள் தென்பட்டன. உடனே நாய்களை ஏவி விட்டேன். சில நாள்களுக்கு முன் தப்பியோடிருந்த எங்களுடைய பெண் பன்றியையும், அதன் குட்டிகளையும் நாய்கள் துரத்திக் கொண்டுவந்து சேர்த்தன.

ஆத்திரத்தில் அறிவிழந்தனாக அவற்றை நோக்கிச் சுட்டுவிட்டேன். மூன்று குட்டிகள் குண்டடிபட்டு இறந்தன. மற்றவை சிதறி ஓடித் தப்பித்தன. அதற்காகப் பிறகு என்னை நானே நொந்து கொள்ளவும் செய்தேன். உணவுப் பொருள்கள் எங்களிடம் போதுமான அளவு கையிருப்பு உள்ளபோது, எங்களது கிழங்குத் தோட்டத்தைக் கிளறியதற்காக அவற்றைச் சுட்டுக் கொன்றது தவறு என்று விளங்கியது.

விரைவிலேயே திரிகை செய்வதற்குத் தோதான மரத்தைக் கண்டுபிடித்தேன். பிறகு அதில் ஓர் அடையாளமிட்டுவிட்டு, குகை வீட்டிற்குத் திரும்பினேன்.

சற்று நேரத்தில் இருண்டுவிடும். காலையில் சென்ற குழந்தைகள் இன்னும் திரும்பி வரவில்லை. நானும் என் மனைவியும் கவலைப்படத் தொடங்கியபோது ஜாக் முதலிலும் தொடர்ந்து மற்றவர்களும் வந்தனர். இருபதிற்கும் அதிகமான எலிகளுடன், பல்வேறு வகையான பன்றிகள், கங்காரு, குரங்கு, நெருஞ்சிச் செடியைப் போலவே தோற்றம் தரும் வேறொரு வகை முள்செடி, லவங்க மரக்கன்று போன்ற பல பொருள்களைக் கொண்டுவந்தனர். என் மனைவி அவர்கள் கொண்டுவந்த மரக்கன்றுகளை முதலில் தோட்டத்தில் நட்டு வைத்தாள்.

மறுநாள் நாங்கள் திரிகைக்கான வட்டமான கட்டைகளை வெட்டியெடுத்துக் காய வைத்தோம். ஒருசில நாட்களுக்குள் திரிகையை உருவாக்கினேன். என் மனைவி உடனேயே சிறிது அரிசியை அதில்

போட்டுத் திரித்துப் பார்த்தாள். வேகமாகத் திரிக்க முடிந்தது. அரிசி நன்றாக அரைபட்டு மாவாக மாறியது.

ஐந்து மாத காலத்தில் தானியங்கள் கதிர் முற்றித் தலை சாய்த்தன. மீன்கூட்டம் வரக்கூடிய பருவமும் நெருங்கியது. எனவே விரைவாகத் தானிய அறுவடையை மேற்கொண்டோம். குகை வீட்டின் முன்புறத்தில் இருந்த நிலப்பரப்பைச் சுத்தப்படுத்திக் களமாகப் பயன்படுத்தினோம். எங்களது கால்நடைகளைப் பயன்படுத்தி, தானியங்களைப் பிணையடித்தோம். பிறகு தானியங்களைச் சுத்தம் செய்து பாதுகாப்பாக எடுத்து வைத்தோம். எங்களது விவசாயத்தில் அறுபது படி பார்லியும், எண்பது படி கோதுமையும், நூறு படி சோளமும் கிடைத்தது.

நிலத்தை உடனே உழுது விடலாம் என்று கருதி உழவைத் தொடங்கியபோது, ஒரு சில கதிர்களுக்கு நடுவிலிருந்து காடைகள் பறக்கத்தொடங்கின. ஃபிரிட்ஜ் கல்லை வீசி எறிந்ததில் ஒரே ஒரு காடை மட்டும் இறந்து விழுந்தது. எனவே அடுத்த அறுவடைக்குப் பிறகு வயல் முழுவதும் உடனடியாகத் துப்பாக்கிச் சூடு நடத்தி வேட்டையாடுவது என்று தீர்மானித்தோம்.

நிலத்தை உழுது பண்படுத்திய பிறகு இந்தத் தடவை வேறு வகையான தானியங்களை விதைத்தோம். விதைப்பு முடிந்த சில நாள்களுக்குள் மீன் கூட்டம் வரத்தொடங்கியது. இரண்டு பெரிய பீப்பாய் நிறைய உலர்ந்த மீன்களைப் பதப்படுத்தி வைத்தோம். பிறகு நீர்நாய்களின் கூட்டம் வந்தது. அவற்றை வேட்டையாடி தோல்களை உரித்தெடுத்து உலரவைத்துப் பக்குவம் செய்த பின்னரே, முன்னர் தொடங்கியிருந்த கயக் படகின் வேலை நிறைவடைந்தது.

ஒருநாள் இந்தப் புதிய படகின் வெள்ளோட்டத்தை நடத்தினோம். ஃபிரிட்ஜ் நீச்சல் அங்கியை அணிந்து படகில் உட்கார்ந்து அதைச் செலுத்தினான். படகு மிகவும் விரைவாகச் சென்றது. பெரிய பெரிய அலைகளை எதிர்த்துப் பக்கவாட்டில் படகைச் செலுத்தி அவன் சுலபமாகப் பயணம் செய்தான்.

நாங்கள் அனைவரும் கை தட்டிப் பாராட்டுத் தெரிவித்தோம். பாராட்டின் உத்வேகத்தில் அவன் நரியாறு கலக்கும் பகுதிக்கே படகைச் செலுத்தினான். அங்கு இருந்த விசையான நீரோட்டம் அவனை நடுக்கடலுக்குத் தள்ளியது.

நான் பயந்துபோய் ஜாக்கையும், எர்னஸ்ட்டையும், சிறிய படகில் ஏற்றிக்கொண்டு அவனை நோக்கிப் புறப்பட்டேன். வழியெல்லாம் உரத்த குரலில் அவனை அழைத்தும் அவனிடமிருந்து பதில் எதுவும் வரவில்லை. நாங்கள் தேடியபடி இருந்தோம். சில மணிநேரம் கடந்தது. என் மனம் தளர்ந்து நம்பிக்கை இழந்தது. அந்தச் சமயத்தில் சற்றுத் தொலைவில் புகையெழுந்தது. தொடர்ந்து கைத்துப்பாக்கி வெடிக்கும் சத்தமும் கேட்டது. நானும் பதிலுக்குத் துப்பாக்கியை வெடிக்கச் செய்தேன். இதன் எதிரொலிபோல் மீண்டும் அங்கிருந்து வெடியோசை கேட்டது.

வெடியோசை கேட்ட திசைநோக்கி நாங்கள் படகைச் செலுத்தினோம். பத்து நிமிடப் பயணத்தில் நாங்கள் ஃபிரிட்ஜைக் கண்டோம். மேலும் ஐந்து நிமிடப் பயணத்தில் அவனை நெருங்கினோம். அவனது படகை ஒட்டியபடி இருந்த ஒரு பாறை மீது அவன் கொன்ற நீர்யானையின் பெரிய உடல் கிடந்தது. அந்த நீர்யானையை எப்படிக் கொன்றான் என்பதை அவனே பிற்பாடு விளக்கினான்.

“சற்றும் எதிர்பாராமல் நீரோட்டம் என்னை இழுத்துச் சென்றது. ஒருகணம் தடுமாறினேன். சற்று நேரத்திற்குள் நீர்யானைக் கூட்டம் ஒன்று எதிர்ப்பட்டது. உடனே விரைந்து செயல்படத் தீர்மானித்து எறியீட்டியை எடுத்து வேகமாக வீசினேன். அது ஒரு நீர்யானையின் உடம்பில் பதிந்தது. இருப்பினும் சிறிய அளவே காயமடைந்திருந்த நீர்யானை வேகமாக நீந்தத் தொடங்கியது. உடனே நான் மற்றொரு ஈட்டியை எடுத்து வீசினேன். நீந்தியபடியே ஒருகணம் துடிதுடித்த நீர்யானை இந்தப் பாறைக்கு வந்து உயிரை விட்டது. அது இறந்துவிட்டதா என்பதை உறுதி செய்வதற்காக ஒருமுறை சுட்டுப் பார்த்தேன். அதுதான் நீங்கள் கேட்ட முதல் துப்பாக்கிச் சத்தம்!”

ஃபிரிட்ஜ் ஒரு பெரிய ஆபத்திலிருந்து தப்பித்ததற்காக மகிழ்ச்சியடைந்தோம். பிறகு அவன் கேட்டுக்கொண்டபடி நீர்யானையின் தலையை மட்டும் அறுத்து எடுத்து எங்கள் படகில் வைத்துக் கொள்ளச் சம்மதித்தோம். அதனுடைய நீண்ட பற்களைத் தன்னுடைய படகில் பொருத்தி வைத்துக் கொள்வதுடன் அந்தப் படகிற்கு நீர்நாய் எனப் பொருள்படும் ஸீடாக் என்று பெயர் வைக்கப் போவதாகவும் கூறினான்.

புயல் வரும்போல் தோன்றியதால் உடனே அங்கிருந்து கிளம்ப விரும்பினேன். ஃபிரிட்ஜ் தன்னுடைய நீர்நாயை முன்னே செலுத்த

நாங்கள் எங்களது படகில் அவனைப் பின்தொடர்ந்தோம்.

# 20

நாங்கள் எதிர்பார்த்ததைவிட விரைவிலேயே புயல் வீசத் தொடங்கியது. பிள்ளைகளும் நானும் தயாராகப் படகுகளில் வைத்திருந்த, மிதக்க உதவும் நீர்ச்சட்டைகளை எடுத்து அணிந்து கொண்டோம். எங்கள் படகிலும் அவற்றைக் கட்டி வைத்தோம். மிகப் பெரிய அலையொன்று எங்களை வானத்திற்கு உயர்த்தியது. மறுகணம் நாங்கள் பாதாளத்திற்குள் பாய்வதுபோல மிகத் தாழ்ந்த அலைமீது மிதந்தோம்.

மின்னலும் மழையும் தொடங்கின. ஆண்டவனிடம் எங்களை ஒப்படைத்து விட்டோம். படகு புயலாலும், அலையாலும் மிக மோசமாக அலைக்கழிக்கப்பட்டது.

வந்தது போலவே புயல் விரைவிலேயே ஓயவும் செய்தது. அதாவது கால் மணி நேரம் மட்டுமே புயலடித்தது. எங்களது படகு புயலிலிருந்து தப்பித்து விட்டது. ஃபிரிட்ஜ் என்ன ஆனானோ என்ற கவலையுடன் நான் கரையை நெருங்கினேன். கரையை அடைந்தவுடன் எனது பயமெல்லாம் மறைந்து போனது. எங்களுக்கு முன்னதாகக் கரையேறியிருந்த ஃபிரிட்ஜ், நாங்கள் பத்திரமாக வந்து சேரவேண்டுமென்பதற்காகக் கடவுளிடம் பிரார்த்தனைசெய்து கொண்டிருந்தான்.

புயல் மற்றும் மழையால் காட்டாறான நரியாற்றில் வெள்ளம் பெருகியது. பல இடங்களில் கரை உடைத்துக் கொண்டது. நாங்கள் கட்டியிருந்த பாலம் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டது. ஆற்றங்கரையின் மணற்பரப்பில் வாசனைப் பொருளான கிராம்பு நிறையக் கிடந்தது. என் மனைவி அவற்றைச் சேகரித்தாள்.

புயலால் ஏற்பட்ட சேதங்களைச் சீர்செய்யத் தொடங்கினோம். இந்தச் சமயத்தில் வஞ்சிரமீன்களும், வேறுசில பெரிய மீன்களும் கூட்டமாக வந்தன. அவற்றைப் பிடித்துச் சுத்தம் செய்து உப்பிட்டுக் காய வைத்தோம். தார் பூசிய நீண்ட கயிற்றில் மீன்களின் வாய்பகுதியைக் கவ்விக்கொள்ளும்படிச் செய்து அவற்றை உலரவிட்டோம். பிறகு கயிற்றுடன் அவற்றைப் பத்திரமாக எடுத்துக் கட்டி வைத்தோம்.

தேவைப்பட்ட நேரத்தில் எடுத்துச் சமைக்க இந்த முறை உதவியது.

பன்றிக்கூட்டம் நடுஇரவில் எங்கள் குகை வீட்டின் முன்புறத்தில் ஆரவாரம் செய்யத் தொடங்கியது. பாலத்தின் எஞ்சியிருந்த குறுக்குக் கட்டைகளைப் பற்றிக்கொண்டு பன்றிகள் இக்கரையை அடைந்திருந்தன. எனவே, தொங்குபாலம் கட்ட வேண்டும் என்கிற எங்களது நீண்ட நாள் திட்டத்தைச் செயல்படுத்தத் தொடங்கினோம். பதினைந்து நாட்களில் தொங்குபாலத்தின் வேலை முடிவடைந்தது.

குழந்தைகள் தீவைச் சுற்றிப் பார்த்துவர விரும்பினர். இதற்கான ஏற்பாடுகளை அவர்கள் வெகுநாட்களுக்கு முன்பிருந்தே செய்திருந்தனர். இரண்டு புறாக்களைத் தங்களுடன் எடுத்துச் சென்றனர். புறா எதற்காக என்று கேட்டபோது பதில் சொல்லாமல் மௌனமாகச் சிரித்தான் ஜாக். எர்னஸ்ட் மட்டும் வீட்டில் தங்கிக் கொண்டான்.

பிள்ளைகள் புறப்பட்டுச் சென்ற பிறகு நான் எர்னஸ்ட்டின் உதவியுடன் கரும்பு ஆலை ஒன்றை அமைத்தேன். அதனால் மிக எளிதாக கரும்புச்சாறு பெற முடிந்தது.

மறுநாள் இரவு நான் குழந்தைகளைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அப்போது எனர்ஸ்ட் என்னை நெருங்கிவந்து கூறினான்: “அப்பா, இப்பொழுது ஒரு புறா வந்து சேர்ந்துள்ளது. அது நம்முடையதா இல்லையா என்பதை நாளைக் காலையில்தான் கண்டுபிடிக்க வேண்டும். நம்முடைய புறாவாக இருந்தால் அது கடிதம் கொண்டுவந்திருக்கும்.”

மறுநாள் காலையில் புறா கொண்டுவந்த கடிதத்தை எர்னஸ்ட் உரத்த குரலில் படித்தான்: “மிகப் பெரிய புலி ஒன்று நமது ஆடுகளில் மூன்றை அடித்துத் தின்றுவிட்டது. அந்தப் புலியை ஃபிரான்ஸிஸ் நாய்களின் உதவியுடன் கொன்று விட்டான். நாங்கள் எடுத்துவந்த கரடியிறைச்சி நன்றாக இல்லை. நாங்கள் அனைவரும் நலம். அன்புடன் ஃபிரிட்ஜ்.”

புலி எவ்வாறு பண்ணைக்குள் புகுந்தது என்று வியப்புடன் யோசித்தேன். அன்று மாலையே மற்றொரு கடிதம் வந்து சேர்ந்தது. ‘அமைதியாக இரவு கழிந்தது. உற்சாகமான காலைநேரம், அன்னஏரியில் கயக்கில் ஏறிச் சென்றேன். அன்னங்கள் சிலவற்றையும், ஒரு ராஜநாரையையும் பிடித்தேன். என்னவென்று புரியாத ஒரு

விலங்கை விரட்டிச் சென்றேன். அது தப்பித்து விட்டது. நாளை நாங்கள் நம்பிக்கைமலைக்குச் செல்கிறோம். அன்புடன் ஜாக்.'

தொடர்ந்து வந்த மற்றொரு கடிதம் எங்களைக் கவலைப்பட வைத்தது. 'மூங்கில் தட்டிகள் உடைந்து நொறுக்கப்பட்டுள்ளன். கரும்புத் தோட்டத்தில் நாம் அமைத்திருந்த குடிசை அழிக்கப்பட்டது. பீரங்கிக் குண்டு போட்டது போன்ற பெரிய பள்ளங்களும், பெரிய சாப்பட்டுத் தட்டு போன்ற காலடிச்சுவடுகளும் தென்படுகின்றன. உடனே புறப்படுங்கள். எங்களுக்கு உதவுங்கள்!'

சற்றும் தாமதிக்காமல் நான் காட்டுக்கழுதை மீது ஏறி பயணமானேன். மனைவியையும், எர்னஸ்ட்டையும் மறுநாள் புறப்பட்டு வருமாறு கூறிச் சென்றேன். மூன்று மணி நேர பயணத்திற்குப் பிறகு என் பிள்ளைகளைச் சந்தித்தேன். என்னைக் கண்டதும் அவர்கள் மகிழ்ந்தனர். எனக்கும் அவர்களைப் பார்த்தபோது மகிழ்ச்சி ஏற்பட்டது.

கரும்புகள் வேருடன் பிடுங்கி எறியப்பட்டும், மகிழ்ந்து நசுக்கப்பட்டும் தாறுமாறாகச் சிதைந்து கிடந்தன. நாங்கள் வேலியாகப் பதித்து வைத்திருந்த மூங்கில் தட்டிகள் நொறுங்கிக் கிடந்தன. நான் பாதச்சுவடுகளைக் கவனமாகப் பார்த்தேன். காட்டு யானைகளும் நீர்யானைகளுமே இப்படிப்பட்ட கொடுமையைச் செய்திருக்கும் என்பது புரிந்தது. பின்னாளில், ஒருநாள் ஆற்று வழியே படகில் சென்ற ஃபிரிட்ஜ், மேற்குறிப்பிட்ட யானைகளைச் சற்றுத் தொலைவில் பார்த்ததாகவும் கூறினான்.

எனவே நிரந்தரமான ஒரு குடிசையை அங்கு அமைக்க விரும்பினேன். நான்கு மரங்களின் மீது சுமார் இருபதடி உயரத்தில் உட்குழிவாகச் செதுக்கினேன். அவற்றில் மூங்கிலைப் பொருத்திக் குடிலின் அடித்தளமாக அமைத்தேன். பிறகு நான்கு புறமும் பிரம்புகளாலும் இலைதழைகளாலும் சுவர் எழுப்பினேன். மரப்பட்டைகளால் கூரை வேய்ந்தேன். இவ்வாறு நிலமட்டத்திற்கு இருபதடி உயரத்தில் குடில் ஒன்று கம்பீரமாக எழுந்தது. குடிலின் அடிப்பகுதியை கால்நடைத் தொழுவமாக மாற்றினேன்.

ஒருநாள் தன்னுடைய அம்மாவிற்கு வாழைப்பழங்கள் எடுத்து வருவதற்காகக் கயக்கில் ஆற்று வழியெ சென்றான் ஃபிரிட்ஜ். மாலை நேரமானபோது திரும்பி வந்தான். அவனுடைய படகில் பழங்களுடன் வேறுபல பொருள்களும் இருந்தன. படகிலிருந்து ஒரு சாக்குப்பையை

வெளியே எடுத்தான்.

“கொண்டு வந்ததற்கு நன்றி!” என்றான் ஜாக்.

எனக்கு எதுவும் புரியவில்லை!

ஆற்றுவழியே சென்ற ஃபிரிட்ஜ் மயில் போன்ற அழகான பல பறவைகளையும் யானை, வரிப்புலி, நீர்யானை போன்ற விலங்குகளையும் பார்த்ததாகக் கூறினான். அவன் கொண்டுவந்த பொருள்களில் தேயிலைச்செடி என் மனைவியை மிகவும் கவர்ந்தது.

அன்று இரவில் தான் பார்த்த காட்சிகளைப் பற்றி ஃபிரிட்ஜ் விரிவாக விளக்கினான். சற்றுத் தொலைவில் காட்டு வாத்துக்கள் வசிக்கும் சதுப்பு நிலப்பகுதியிலிருந்து திடீரென்று இடியோசை போன்ற இரைச்சல் கேட்டது. நான் துள்ளி எழுந்தேன். என் மனைவியும், எர்னஸ்ட்டும், ஃபிரான்ஸிஸும் திடுக்கிட்டு எழுந்தனர். வழக்கமாக எதற்கெடுத்தாலும் துப்பாக்கியைத் தூக்கும் ஃபிரிட்ஜ் புன்னகை செய்தபடி மௌனமாக இருந்தான். பிறகுதான் புரிந்தது. மாலைநேரத்தில் ஃபிரிட்ஜ் ஜாக்கிடம் கொடுத்த சாக்குப் பையில் பெரிய தவளைகள் இருந்தன. அவைதான் இந்த இரைச்சலுக்குக் காரணம்!

நாட்கள் சில கழிந்தன. “ஈகிள்ஸ்நெஸ்ட் கவனிப்பாரற்றுப் போய்விட்டது; அதைச் சீர்செய்யுங்கள்’ என்று கூறினாள் என் மனைவி. அதற்காக நாங்கள் எல்லோரும் அங்கு சென்று தங்கினோம். பல நாள்கள் கடுமையாக உழைத்துச் சீர்படுத்தியபோது ஈகிள்ஸ்நெஸ்ட் முன்பைவிட அதிகப் பொலிவு பெற்றது.

சுறாத்தீவில் ஒரு வேலியெழுப்ப வேண்டுமென்கிற திட்டத்தை ஃபிரிட்ஜ் நினைவூட்டினான். பாதுகாப்பிற்காக பீரங்கிகளை அங்கு கொண்டுசென்று சேர்ப்பது மிகவும் கடினமாக இருந்தது. இறுதியில் அதை மலை உச்சியின்மீது நிறுவினோம். அதன் பிறகு காவல் காப்பவர்கள் அங்கு தங்க நேர்தால், பயன்படுமாறு ஒரு சிறு குடிசையையும் எழுப்பினோம். மலை உச்சியில் வெள்ளைக்கொடி பறந்தால் நண்பர்களின் வருகையையும் சிவப்புக்கொடி பறந்தால் ஆபத்தைத் தெரியப்படுத்தும் என்றும் ஓர் ஏற்பாட்டைச் செய்தோம்.

இவற்றைச் செய்து முடிக்க இரண்டு மடாத காலமானது. இத்திட்டத்தைத் துவக்கும் நாளன்று வெற்றிக்கு அடையாளமாக

வெள்ளைக் கொடியைப் பறக்கவிட்டோம். ஆறுமுறை பீரங்கியை வெடிக்கச் செய்தோம்.

இப்படியே பத்து வருடங்கள் கழிந்தன. இப்பொழுது ஃபிரிட்ஜுக்கு இருபத்து நான்கு வயதாகிறது. எர்னஸ்ட்டிற்கு இருபத்திரண்டு வயது, ஜாக்கிற்கு இருபது வயது; ஃபிரான்ஸிஸீக்குப் பதினேழு வயது. நான்கு பேருமே வலிமையான, அழகான உடலமைப்பு பெற்றிருந்தனர்.

எங்களது தீவில் பயிர்கள் செழித்து வளர்ந்தன. விலங்குகள் ஏராளமாகப் பல்கிப் பெருகியிருந்தன. பிள்ளைகள் வளர வளரத் துணிச்சலான செயல்களில் தைரியத்துடன் ஈடுபடத் தொடங்கினர். ஒருநாள் யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் ஃபிரிட்ஜ் தன்னுடைய கயக்கில் ஏறி எங்கேயோ சென்றான். இரவாகியும் அவன் திரும்பி வரவில்லை. எனவே, நானும் மற்ற பையன்களும் காலையில் படகிலேறிச் சுறாத்தீவை அடைந்தோம். மலையின் மீதேறி, உச்சியிலிருந்தபடி சுற்றுமுற்றும் பார்த்தோம். சற்று நேரத்திற்குப் பின் அடிவானத்தில் ஒரு கரும்புள்ளி தெரிந்தது. ஃபிரிட்ஜ்தான் வருகிறான் என்பதைத் தொலைநோக்கி மூலம் தெரிந்து கொண்டேன். பீரங்கியின் ஒரு குண்டை வெடித்து அவனை வரவேற்றோம்.

அவனைப் படகுடன் வீட்டிற்குத் தூக்கி சென்றனர் அவனுடைய தம்பிகள். வீட்டில் எல்லோரும் ஒன்றாக அமர்ந்து பேசும்பொது ஃபிரிட்ஜ் அன்று நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினான்.

“முதலில் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். வெகுநாள்களாக இந்த தீவின் மேற்கு பகுதியைக் காணவேண்டுமென்று விரும்பினேன். ஆனால், நீங்கள் அதற்கு சம்மதிக்கமாட்டீர்கள் என்று தோன்றியதால், உங்களிடம் கேட்காமல் புறப்பட்டு விட்டேன்!

நாம் வந்த கப்பல் வெடித்து மூழ்கிய இடத்தின் வழியாகச் சென்றேன். பீரங்கிகளும், பெரிய பெரிய இரும்புக் கம்பிகளும் ஆழம் குறைவான இடத்தில் மூழ்கி இருப்பதைக் கண்டேன். போகின்ற வழியில் கடல்சிங்கம், கடல்யானை போன்ற பெரிய பெரிய விலங்குகளைப் பார்த்தேன். அவற்றின் கண்களில் படாமல் ஓரமாகவே படகைச் செலுத்தினேன். சுமார் ஒன்றரை மணி நேரப் பயணத்திற்குப் பிறகு குகை வழி போன்ற ஓர் இடத்தை அடைந்தேன். மூன்று புறங்களிலும் மலை சூழ்ந்த பகுதி. நடுவே கடல்! நான் சென்ற வழி சற்று நீண்டாக இருந்தது. அந்தக் குகைக்குள் தூக்கணாங்குருவிகள் வசித்துக்

கொண்டிருக்கின்றன. அங்கிருந்து நான் சில கூடுகளை எடுத்து வந்திருக்கிறேன்.

குகை வழியைத் தாண்டி ஒரு பெரிய குடாப்பகுதி உள்ளது. கரைப் பகுதியில், உயர்ந்த மலையின் சரிவுப் பகுதி அமைந்திருக்கிறது. அந்தக் குடாவில் ஓர் ஆறு வந்து கலக்கிறது குடாவிலிருந்த நீர் தெளிவாக இருந்தது. அடியில் முத்துச்சிப்பிகளின் குவியல்கள் தென்பட்டன. சிலவற்றைத் தொறட்டிக் குச்சியின் உதவியால் கரையில் எடுத்துப் போட்டேன். மேலும் சிலவற்றை எடுக்க முற்படுவதற்குள் கரையில் போட்ட சிப்பிகள் வெடிக்கத் தொடங்கின. எனவே அதற்குள் இருக்கும் இறைச்சி உண்பதற்குப் பயன்படாது என்று தெரிந்தது. ஆனால், அவ்றறுக்குள் முத்துக்கள் இருந்தன. அதன் அழகைக் கண்டு வியப்படைந்த நான் ஏராளமான முத்துக்களைக் கொண்டு வந்துள்ளேன்.

ஆற்றின் மேல்பரப்பில் பலவகையான செடிகள் மிதந்து கொண்டிருந்தன. அந்தச் செடியின் மீது பறவைகள் நடந்து சென்றன. அதையொட்டி இருந்த தீவில் பல வகையான விலங்குகள் தென்பட்டன. அவற்றுள் ஒன்றைக் கொல்வதற்காகப் படகை கரையில் கட்டிவைத்துவிட்டுக் கரையேறினேன். கழுகைத் தயார் செய்து அதை நோக்கி ஏவினேன். விநாடி நேரத்திற்குள் அந்தக் கடல்குதிரை கண்ணிழந்து குருடானது. பிறகு அதை என்னுடைய தொறட்டியால் அடித்துக் கொன்றேன். அதையும் கொண்டு வந்துள்ளேன். சற்று நேரத்தில் பலவிதமான கடற்பறவைகள் என்னைச் சூழந்து கொண்டன. அவற்றில் சிவற்றையும் அடித்துக் கொன்றேன். நேரம் இருட்டத் தொடங்குகிறது என்பதை அறிந்தவுடன் வீட்டை நோக்கி புறப்பட்டேன்!”

ஃபிரிட்ஜ் தன்னுடைய கதையைக் கூறி முடித்ததும் மற்ற பிள்ளைகள் அவனது பையைச் சோதனை போடத் தொடங்கினர். ஃபிரிட்ஜ் என்னைத் தனியெ அழைத்துச் சென்று ஒரு செய்தியைக் கூறினான்: “அப்பா! ஒரே ஒரு நிகழ்ச்சி என் மனத்தை இன்னும் உறுத்திக் கொண்டிருக்கிறது. கடற்பறவை ஒன்றில் காலில் துணியில் எழுதப்பட்ட கடிதம் ஒன்று கட்டப்பட்டிருந்தது.

அந்தக் கடிதத்தில் ‘கப்பல் உடைந்து போனதால் புகைப்பாறையில் தங்கியுள்ள ஒரு மாலுமியைக் காப்பாற்றுங்கள்’ என்று எழுதப்பட்டிருந்தது. உடனே நான் அதன் மறுபுறம் ‘கவலைப்படாதீர்கள்!’ என்று எழுதி அதே பறவையின் காலில் கட்டி

அனப்பினேன்!”

“இத்தனை வருடங்களாக நடைபெற்றுள்ளதில் இது மிகவும் வியப்பிற்குரிய செய்தி. கடிதம் எழுதியவர் ஒருவேளை இதற்குள் இறந்து போயிருக்கவும் கூடும். எனவே நீ இதை மற்றவர்களிடம் சொல்லாமல் இருந்ததே நல்லது! எதற்கும் முயற்சி செய்து பார்ப்போம்” என்று நான் அவனுக்கு ஆறுதல் கூறினேன்.

அண்ணன் குறிப்பிட்ட முத்துக்களை உடனே அள்ளி வரவேண்டுமென்று அவசரப்பட்டனர் மற்ற பிள்ளைகள்.

“புறப்படுவதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யுங்கள். ஒருநாள் புறப்படலாம்!” என்று அவர்களுக்குச் சமாதானம் கூறினேன்.

மறுநாளிலிருந்து முத்துக்களை வாருவதற்கும், தூக்கணாங்குருவிக் கூடுகளைக் கலைத்து எடுப்பதற்கும், பாறைகளில் ஏறி நடப்பதற்கும் வேண்டிய கருவிகளைச் சேகரிக்கவும், உருவாக்கவும் முனைந்தோம். அந்தப் பயணத்தின்போது கொண்டு செல்வதற்குத் தேவையான உணவுப் பொருள்களையும் திரட்டிச் சேகரித்தோம்.

## 21

பருவநிலை நன்றாக இருந்த ஒருநாள் நாங்கள் படகில் ஏறிப் புறப்பட்டோம். என் மனைவியும் ஃபிரான்ஸிஸும் எங்களை வழியனுப்பி வைத்தனர். ஃபிரிட்ஜ் தன்னுடைய கயக்கில் அமர்ந்து வழிகாட்டிச் சென்றான். நாங்கள் அவனைப் பின்தொடர்ந்தோம். குகைப் பாதையில் பல தூக்கணாங்குருவிக் கூடுகளைக் கைப்பற்றினோம்.

முத்துக்குடாவின் அழகும் அமைதியும் எங்களது மனத்தைக் கவர்ந்தது. ஃபிரிட்ஜ் குறிப்பிட்டதுபோல் அந்த இடத்து நீர் தெளிவாக இருந்தது. முத்துப் படுகைக்கு அருகே ஓர் ஆறு கடலில் கலந்து கொண்டிருந்தது. மாலை நேரமாகிவிட்டதால் மீண்டும் படகிற்குத் திரும்பினோம். பாய்மரத்தின் தார்ப்பாயைக் கூடாரமாகக் கட்டி, கரடித் தோலைப் போர்த்திக் கொண்டு அன்றிரவு படுத்து உறங்கினோம்.

மறுநாள் காலையில் எழுந்து முத்துப்படுகையுள் புகுந்தோம். எங்களிடமிருந்த கருவிகளின் உதவியால் நிறைய முத்துச்சிப்பிகளை

வாரிவாரிக் கரையில் குவித்தோம். மதியத்திற்குப் பிறகு பக்கத்திலிருந்த காட்டில் வேட்டையாடப் புறப்பட்டோம். எர்னஸ்ட் நாயை அழைத்துக்கொண்டு எங்களுக்கு முன்பாகப் புறப்பட்டான். ஜாக், தனது நரியுடன் அவனைப் பின்தொடர்ந்தான். நானும் ஃபிரிட்ஜும் கடற்கரையிலிருந்து புறப்பட்டிருக்கவில்லை.

எர்னஸ்ட் காட்டில் புகுந்த உடனேயே அவனுடைய நாய் ஒரு புதரை நோக்கிக் குரைத்தது. அது ஒரு காட்டுப்பன்றியைப் பார்த்து விட்டதுதான் காரணம். உடனேயே ஜாக்கின் நரி அந்தப் பன்றியின் மீது பாய்ந்தது. பன்றி, நரியை வெகு சுலபமாக முட்டித் தள்ளிவிட்டது. கோபமடைந்த ஜாக் பன்றியை நோக்கிச் சுட்டான். அவனது குறி தவறியது. வெறி கொண்ட பன்றி அவன் மீது பாயத் தயாரானது. ஜாக் தலைதெறிக்க ஓடினான். எர்னஸ்ட் பன்றியைச் சுட்டும் பயனில்லாமல் போனது. பன்றியின் வேகமும் வெறியும் நிமிடத்திற்கு நிமிடம் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஓடும்போது ஒரு வேரில் கால் இடறியதால் ஜாக் தடுமாறி விழுந்தான். இதற்குள் நாய்க்ள இரண்டும் காட்டுப்பன்றியைப் பின்புறத்தில் தாக்கத் தொடங்கியிருந்தன. எனவே பன்றி, ஜாக்கைத் தொடர்வதை விட்டுவிட்டு நாய்களைக் கவனிக்க வேண்டியதாயிற்று. அப்போது அங்க வந்த ஃபிரிட்ஜ் பன்றியைச் சுட்டுக் கொன்றான். ஜாக் சிறுசிறு சிராய்ப்புகளுடன் ஒரு வழியாகத் தப்பித்தான்.

இருட்டத் தொடங்கவே நாங்கள் படகிற்குத் திரும்பினோம்.

இறந்துபோன காட்டுப்பன்றியின் தலையை மறுநாள் காலையில் எர்னஸ்ட் உருவாக்கியிருந்த பொருட்காட்சி சாலைக்காக அறுத்து எடுத்து வந்தோம். ஆனால், சற்று நேரங்கழித்து இந்தத் தலை வேண்டாம் என்று கூறவே, ஃபிரிட்ஜும், எர்னஸ்டும் ஒரு பள்ளம் பறித்து அதில் நெருப்புத் தணலையும், பழுக்கக் காய்ந்த கற்களையும் நிரப்பி, காட்டுப்பன்றியின் தலையை வேக வைத்தனர்.

இருள் பரவத் தொடங்கியது. மலைகளில் பெரு முழக்கமாக மோதிப் பிரதிபலித்த ஒரு முழக்கம் எங்கள் அனைவரையும் நடுங்க வைத்தது. அது என்னவென்று அறிந்து கொள்வதற்காக ஃபிரிட்ஜ் தன்னுடைய படகில் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

பிரமாண்டமான அந்த முழக்கம் எங்களை நெருங்கி வந்துகொண்டிருந்தது. நாங்கள் மூட்டியிருந்த நெருப்பின் அருகே ஒரு

மிகப் பெரிய சிங்கம் வந்து நின்றது. வாலைப் பின்புறமாகச் சுழற்றிச் சுழற்றி வீசியபடி கம்பீரமாக அது நெருப்பையும், நாய்களையும் மாறி மாறிப் பார்த்தது. சிங்கத்திற்கும் எங்களுக்கும் இடையில் குறுக்கிட்ட ஆற்றின் கரையில் அது வாலைச் சுழற்றியபடி பின்வாங்கியது. சற்றும் தாமதிக்காமல் வெடியோசை கேட்டது. உடனே சிங்கம் அலறி விழுந்தது.

ஃபிரிட்ஜ் சரியான சமயத்தில் நம் எல்லோரையும் காப்பாற்றி விட்டான்!" எர்னஸ்ட் நன்றியையும், பாராட்டையும் தெரிவித்தான். உடனே அண்ணனுக்கு உதவக் கிளம்பினான். அவனிடம் படகிலேயெ உட்காருமாறு கூறிவிட்டு நான் தணலை நெருங்கினேன். மறுபடியும் நாய்கள் திடீரென்று காட்டை நோக்கிக் குரைக்கத் தொடங்கின.

சற்று நேரத்தில் மற்றொரு பெண்சிங்கம் நாய்களை பொருட்படுத்தாமல் வெளிப்பட்டது. இறந்து கிடந்த ஆண்சிங்கத்தைக் கண்டதும் அது வானமே அதிரும்படி கர்ஜித்தது. பற்களைக் கடித்தபடி வெறித்தது. சட்டென்று வெடியோசை கேட்டது. இம்முறை ஃபிரிட்ஜின் குறி தவறிவிட்டது. பெண் சிங்கத்தின் முன்னங்காலில் ஒன்று மட்டுமே முறிந்தது. நாய்களும் விடாமல் சிங்கத்தின் மீது பாய்ந்தன. சிங்கம் மற்றொரு முன்னங்காலால் எங்களுடைய ஃபுளோராவை அறைந்து கொன்றது. அதற்குள் அந்தச் சிங்கத்தைப் பின்புறமாக நெருங்கியிருந்த நான் அதனுடைய, கழுத்தில் நீண்ட வேட்டை கத்தியைப் பாய்ச்சினேன். ஃபிரிட்ஜ் ஓடிவந்து என்னைக் கட்டித் தழுவிக் கொண்டான். ஃபுளோராவைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு நாங்கள் அங்கிருந்து எங்களது படகிற்குத் திரும்பினோம்.

மறுநாள் காலையில் சிங்கங்களின் தோலை உரித்து எடுத்தோம். பிறகு முத்துக்குடாப் பகுதியிலிருந்து கிளம்பி ஒன்றரை மணி நேரப் பயணத்தில் குகை வழியை அடைந்தோம். அதைக் கடக்கும்போது ஃபிரிட்ஜின் படகும் எங்களை நெருங்கியது. வந்தவன் என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டு தன்னுடைய படகை எதிர்த்திசையில் செலுத்திக் கொண்டு போனான். 'இனியும் தாமதிப்பதற்கில்லை. மாலுமியைத் தேடிச் செல்கிறேன்!' என்று கடிதத்தில் எழுதியிருந்தான். நான் தடுக்க நினைப்பதற்குள் அவனது படகு நெடுந்தூரம் சென்று விட்டிருந்தது. மனதிற்குள் அவனை வாழ்த்தி வழியனுப்பி வைத்தேன்.

மாலை நேரத்தில் நாங்கள் குகை வீட்டை அடைந்தோம். ஐந்து நாட்களாகியும் ஃபிரிட்ஜிடமிருந்து எந்தவிதமான தகவலும் இல்லை.

கவலை தோன்றியது. என் மனைவியிடம் அவன் சென்றிருக்கும் நோக்கத்தை விளக்கினேன். அவளுடைய பதற்றமும், கவலையும் அதிகரித்தன.

மறுநாளே நாங்கள் எல்லோரும் முத்துக்குடாவிற்குப் புறப்பட்டோம். குகை வழியை நாங்கள் நெருங்கும் சமயத்தில் எங்கள் படகின் மீது எதுவோ மோதியது போல் இருந்தது. அது ஒரு திமிங்கலம் என்பது தெரிந்ததும். படகிலிருந்த பீரங்கிகள் முழங்கின. திமிங்கலம் நீருக்குள் மூழ்கியது. சற்று நேரத்தில் மறுபடியும் தலை உயர்த்தியது. ரத்தம் கலந்த கடல் நீர் அதனுடைய உடம்பிலிருந்து பீய்ச்சி அடித்தது. மகன்கள் மறுபடியும் பீரங்கியால் சுட்டனர். திமிங்கலம் உடலைச் சிலிர்த்தபடி பக்கத்துக் கரைப்பக்கமாக ஒதுங்கி உயிரை விட்டது!

அதே சமயம் சற்றும் எதிர்பாராமல் எர்னஸ்ட் அதிர்ச்சியடைந்தவனைப் போல், “அதோ ஒரு மனிதன்... காட்டுமிராண்டி!” என்று கூக்குரலிட்டான். மட்டுமின்றி எதிர் வந்து கொண்டிருந்த ஒரு சிறு படகையும் சுட்டிக் காட்டினான்.

வந்த மனிதனும் எங்களைப் பார்த்துவிட்டு, சட்டென்று ஒரு பாறைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டான். நாங்கள் தாமதிக்காமல் பீரங்கிகளிலும், துப்பாக்கிகளும் மருந்தை நிறைத்தோம். பிறகு வெள்ளைக்கொடியைப் பறக்க விட்டோம். எனக்குத் தெரிந்த மலாய்மொழிச் சொற்கள் சிலவற்றை நான் உரத்துக் கூவினேன். எந்தவிதப் பலனுமில்லை. ஜாக், மாலுமிகளுக்கே உரிய சில ஆங்கில வார்த்தைகளை உரத்த குரலில் கூறினான். மறைந்துள்ள காட்டுமிராண்டி யார் என்று அறிந்து கொள்ளும் ஆர்வம் எங்களுக்கு அதிகரித்தது. இறுதியில் அந்த மனதன் எங்களை நெருங்கியபோது, நாங்கள் வாய்விட்டு உரக்கச் சிரித்தோம். காரணம் வந்தவன் ஃபிரிட்ஜ்தான்!

# 22

மகிழ்ச்சியும் கூச்சலும் ஆரவாரமும் அடங்கிய பிறகு அவனைத் தனியே அழைத்துச் சென்று “போன காரியம் வெற்றியடைந்து விட்டதா?” என்று கேட்டேன். “ஆமாம்!” என்று பதிலளித்தான்.

“எதற்காக இதுபோன்ற காட்டுமிராண்டி வேடம் அணிந்து எங்களைப் பயமுறுத்தினாய்?” என்று கேட்டேன்

எங்களை மலாய்க் கொள்ளைக்காரர்கள் என்று கருதியதால் அப்படி வேடம்போட்டதாகக் கூறினான். இதைக் கேட்டு நாங்கள் எல்லோரும் சிரித்தோம்.

ஃபிரிட்ஜ் நெருங்கி வந்து எனக்கு மட்டும் கேட்கும் குரலில் ரகசியமாகக் கூறினான். “கடிதத்தை எழுதியிருந்தவள் ஒரு பெண். அதைக் கண்டுபிடித்து விட்டேன். நம்மைப் பற்றிய விவரங்களை அவளிடம் ஓரளவிற்குத் தெரிவித்தேன். உடனே அவள் இந்த ரகசியத்தை உங்களிடமும் அம்மாவிடமும் மட்டும் கூறும்படி வேண்டிக் கொண்டாள். அவளைப் பக்த்திலுள்ள ஒரு தீவில் விட்டுவிட்டு வநதிருக்கிறேன். வேண்டுமானால் இப்பொழுதே போய் அழைத்து வருகிறேன்!”

மறுபடியும் தன்னுடைய கயக்கில் உட்கார்ந்து அதைச் செலுத்தத் தொடங்கினான் ஃபிரிட்ஜ். எங்களது படகும் அவனைப் பின்தொடர்ந்தது. ஒரு தீவை நெருங்கி, “யாரங்கே?” என்று குரல் கொடுத்தான். சட்டென்று மாலுமி உடையில் ஓர் இளைஞன் எதிர்ப்பட்டான். அந்த இளைஞனை, “மிஸ்டர் எட்வர்டு!” என்று எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தான் ஃபிரிட்ஜ். நாங்கள் அவனை முழுமனதுடன் வரவேற்றோம்.

அன்று இரவு உணவு முடிந்தவுடன் என் மனைவி அந்த இளைஞனைப் படகிற்கு அழைத்துச் சென்றாள். நாங்கள் எல்லோரும் கடற்கரையில் நெருப்பை எரியவிட்டு அதன் கனப்பில் சுற்றிலும் உட்கார்ந்திருந்தோம். ஃபிரிட்ஜ் கடற்பறவை கொண்டு வந்து சேர்ப்பித்த கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட்டான். பேச்சுவாக்கில் அவளுடைய பெயர் ஜென்னி என்பதையும், இளம்பெண் என்பதையும், அவனை அறியாமல் வெளிப்படுத்தி விட்டான். “ஓகோ! மிஸ்டர் எட்வர்டு உண்மையிலேயே மிஸ். ஜென்ஸியா?” என்று அவனுடைய தம்பிகள் அவனைக் கேலி செய்தனர். உண்மை வெளிப்பட்டதால் ஃபிரிட்ஜும் அவர்களுடன் சேர்ந்து சிரித்தான்.

இறந்துபோன திமிங்கலத்தின் எண்ணெய்ப்பசை நிறைந்த தலையையும், எலும்புகளையும் எவ்வாறு எடுத்துச் செல்வது என்று மறுநாள் காலையில் யோசித்தேன். கேன்வாஸ் பைகளிலேயே அவற்றைக் கொண்டுவந்துவிடலாமென்று ஜென்ஸி கூறினாள். எனவே, நான் பிள்ளைகளுடன் புறப்பட்டேன்.

திமிங்கலத்தின் உடலை ஓநாய்களின் கூட்டம் சூழ்ந்து கொண்டிருந்தது.

நாய்களுக்கும், ஓநாய்களுக்கும் இடையில் ஒரு பெரிய போரே நடைபெற்றது. இரண்டு ஓநாய்கள் இறந்து விழுந்தன. மேலும் இரண்டு ஓநாய்களை அசையவிடாமல் நாய்கள் தரையில் போட்டு அழுத்தின. மற்ற ஓநாய்கள் ஓட்டமெடுத்தன. அவற்றுடன் நரிகளும் ஒரு வரிசையாகச் செல்வதைப் பார்த்த ஜாக்கின் நரி துள்ளிப் பாய்ந்து அதன் இனத்துடன் சேர்ந்துகொண்டது. ஜாக் எவ்வளவு அழைத்தும் அந்த நரி அதன் பிறகு திரும்பி வரவே இல்லை!

நாங்கள் கொண்டுசென்ற பைகள் அனைத்தும் நிரம்பிவிட்டன. அவை எல்லாவற்றையும் படகில் ஏற்றுவது முடியாத காரியமாகத் தோன்றியது. எனவே அவற்றை நன்றாக மூடி வைத்துவிட்டுத் தீவிற்குத் திரும்பினேன். மறுநாள் ஓநாய்களின் தோல்களையும் உரித்து எடுக்க வேண்டும். திமிங்கலக் கொழுப்பையும் எடுத்து வரவெண்டும். என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, “நான் போய் அவற்றை எடுத்து வருகிறேன். அத்துடன் ஜாக்கிடமிருந்து பிரிந்து போன நரியையும் மீட்டு வருகிறேன்!” என்று கூறினாள் ஜென்னி.

‘ஓர் இளம்பெண்ணைத் தனியாக அனுப்புவதா?’ என்று தயங்கி நான் மௌனமாக இருந்தேன். நான் ஏதோ ஒரு வேலையில் ஈடுபட்டிருந்தபோது, ஃபிரிட்ஜின் படகை எடுத்துக் கொண்டு அவள் கிளம்பி விட்டாள்.

கேன்வாஸ் பைகளை ஒரு கயிற்றில் இறுக்கமாகக் கட்டிப் படகின் பின்றும் இணைத்தாள். நரியைப் பெயர் கூறி அழைத்தபடி நான் எடுத்துச் சென்றிருந்த இறைச்சித் துண்டுகளை வீசியெறிந்தாள். ஜாக்கின் நரி மிகவும் அருகில் வந்தவுடன் அதைப் பிடித்துப் படகில் கட்டிவைத்து விட்டாள். எங்களது தீவை

நெருங்குவதற்கு முன் அந்த நரிக்குச் சட்டை, தொப்பி போன்றவற்றை அணிவித்தாள்.

நாங்கள் கடற்கரையில் நின்ற பார்த்தக் கொண்டிருந்தோம். படகில் அவளுடன் வந்து கொண்டிருக்கும் குள்ள மனிதன் யார் என்ற வியப்புத் தோன்றியது. உற்றுப் பார்த்த ஃபிரிட்ஜ், பின்பு உரத்த குரலில் சிரிக்கத் தொடங்கினான்.

அதன் பிறகுதான் எங்களுக்கும் அது மனிதனல்ல, ஜாக்கின் நரி என்பது புரிந்தது!

மதிய உணவிற்குப் பிறகு நாங்கள் எல்லாப் பொருள்களையும் பயணத்திற்குத் தயாராக மூட்டை கட்டத் தொடங்கினோம். ஜென்னியும் தன்னுடைய சில பொருள்களைப் பயணத்திற்கு தயார் செய்து மூட்டை கட்டினாள்.

திரும்பி வரும் வழியில் நாங்கள் குவித்து வைத்திருந்த முத்துச்சிப்பிகளைப் படகில் ஏற்றுவதற்காக முத்துக்குடாவில் சில மணிநேரம் தங்கினோம்.

ஜென்னி வளர்த்தும் மீன்கொத்திப் பறவையின் உதவியால் நிறைய மீன்களைப் பிடித்து எங்களுக்கு விருந்தளித்தாள். அன்றைய பகலுணவு முற்றிலும் ருசியான மீன்களால் அமைந்தது.

இரவு உணவிற்காகச் சில விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடி வரலாம் என்று மற்ற பிள்ளைகள் புறப்பட்டபோது ஜென்னியும் அவர்களுடன் புறப்பட்டாள். வேட்டையில் போட்டி போட்டு ஏராளமானவற்றைக் கொண்டு வந்திருந்தனர். அன்று மாலையிலேயே குகைவீட்டை நோக்கி எங்களது பயணம் தொடர்ந்திருக்கும். ஆனால், எதிர்பாராத விதமாகக் கடற்கரையில் கண்டுபிடித்த கச்சான் பாறையிலிருந்து சுண்ணாம்பு எடுக்கலாம் என்று தோன்றியது. காளான் சேகரிப்பதும் சுண்ணாம்புப் பாறையைச் சேகரிப்பதும் நீண்ட நேரத்தை விழுங்கின. எனவே, அன்றைய இரவும் அங்கேயே தங்க நேர்ந்தது.

இரவு உணவு முடிந்தபிறகு ஃபிரிட்ஜ் தன்னுடைய கதையைச் சொன்னான். அவன் பல நாள்கள் பல தீவுகளில் சுற்றினான். ஆங்காங்கே நீர்யானைகளும், கரடி, புலி போன்றவையும் வெளிப்பட்டுப் பயமுறுத்தின. மற்றொரு தீவில் இறங்கி நெருப்பு மூட்டினான். வாலில்லாக் குரங்குகளான சிம்பன்ஸிகள் கூட்டமாக அவனைச் சூழ்ந்துகொண்டன. துப்பாக்கியைப் பயன்படுத்திச் சுட்டபிறகு அவை பயந்து ஓடின. இரவைக் கழிப்பதற்காக ஒரு குகைக்குச் சென்றான். அங்கு மிகப் பெரிய வௌவால் ஒன்று இருந்தது. பலமுறை அவன் துப்பாக்கியால் சுட்டபிறகே அது குகையை விட்டு வெளியேறியது.

மறுநாள் அமைதியான ஓர் ஆற்றின் வழியே படகு சென்றது. அங்கு மூன்று முதலைகளுடன் துடுப்புகளை வைத்துப் போராட நேர்ந்தது. அவற்றை விரட்டியடித்த பிறகு ஓர் இடத்தில் கரையேறினேன். கழுகை

ஏவியபோது அது ஒரு கிளியைப் பிடித்து வந்தது. பின்புறமாகச் சட்டென்ற ஓர் உறுமல் கேட்டுத் திரும்பினான். நாற்பதடி தூரத்தில் புலி ஒன்று படுத்துக் கிடந்தது. கழுகு பாய்ந்து சென்று புலியின் கண்களைக் கொத்தியது. அதே சமயம் ஃபிரிட்ஜும் துப்பாக்கியால் புலியைச் சுட்டான். அதுவரை கழுகுடன் போராடிய புலி இறந்தது. அதே சமயத்தில் புலியின் நகம் பாய்நது கழுகும் இறந்து போனது.

மீண்டும் கடலில் படகைச் செலுத்தினான். சற்றுத் தூரத்தில் ஒரு சிறிய தீவிலிருந்த குன்றின் உச்சியில் புகை உயர்ந்தது. அதுதான் புகைத்தீவு என்று ஊகித்து அதை நெருங்கினான். அங்கு மனிதர்கள் சேர்ந்து வெட்டி வைத்தது போல் பாறையில் கடிக்கட்டு அழகாக அமைந்திருந்தது.

அவன் மலை மீது ஏறினான். அழகான இளம்பெண் ஒருத்தி தணலருகே குளிர்காய்ந்து கொண்டிருந்தாள். அவளிடம் கடற்பறவை பற்றியும், அந்தச் செய்தி அனுப்பியவரைக் காப்பாற்ற வந்திருப்பதாகவும் கூறினான். முதலில் அவள் தயங்கினாள். பிறகு நேரம் செல்லச் செல்ல இருவரும் மனம் விட்டுப் பேசிப் பரஸ்பரம் தங்களது கதைகளைப் பரிமாறிக் கொண்டனர். மறுநாளே அவள் தன்னுடைய பொருள்களை எடுத்துக்கொண்டு ஃபிரிட்ஜுடன் அவனுடைய படகில் புறப்பட்டான்.

வரும் வழியில் படகில் ஏற்பட்ட பழுதைச் சரிபார்ப்பதற்காக ஒரு தீவில் இறங்கினார்கள். ஃபிரிட்ஜின் வீட்டைச் சேர்ந்த மற்றவர்களைக் காண வெட்கப்பட்ட அவன் அங்கேயே தங்கிவிட்டான். முதலில் ஃபிரிட்ஜ் மட்டும் திரும்பி வந்தான். அதன்பிறகு எல்லோரும் சென்றபோது அவளை அழைத்து வந்தனர்.

மறுநாள் காலையில் பிள்ளைகள் ஜென்னியின் கதையைக் கேட்க விரும்பினர்.

மிகச் சிறுவயதிலேயே தாயை இழந்துவிட்ட ஜென்னி தன் தந்தையார் வில்லியம் மாண்ட்ரோஸுடன் இந்தியாவில் வசித்து வந்தாள். தன் தந்தையிடமிருந்து ஆண்களுக்கே உரித்தான வேட்டையாடுவது முதல் துப்பாக்கி சுடுதல் போன்றவற்றைக் கற்றுக்கொண்டிருந்தாலும், பெண்களுக்கே உரித்தான வெட்கம், அச்சம் போன்ற இயல்புகள் அவளிடம் குடி கொண்டிருந்தன.

ராணுவத்தில் கர்னலாக இருந்த மிஸ்டர் வில்லியம் தம் படையினருடன்

இங்கிலாந்து செல்ல நேர்ந்தது. ஜென்னி அவர்களுடன் போர்க்கப்பலில் பயணம் செய்ய முடியாததால் வேறொரு கப்பலில் புறப்பட்டாள். அப்பொழுது அவளது வயது பதினேழு. சில நாள் பயணத்திற்குப் பிறகு அவள் பயணம் செய்த கப்பல் புயலில் சிக்கி, பாறைகளில் மோதி உடைந்தது. ஜென்னி எப்படியோ ஒரு சிறிய படகில் தொற்றினாள். சற்றுத் தொலைவு செல்வதற்குள் அந்தப் படகும் நீரில் மூழ்கிவிட்டது.

மயக்கமடைந்த ஜென்னி கண்விழித்துப் பார்த்தபோது ஆள் நடமாட்டமற்ற, ஒரு தீவின் கரையில் ஒதுக்கப்பட்டிருந்தாள். நல்ல வேளையாக மாலுமிகளின் பெட்டி ஒன்றும் கரையில் அவளருகே ஒதுங்கியிருந்தது. அந்தத் தீவிலேயே அவள் ஏறத்தாழ மூன்றாண்டுக் காலம் வசித்தாள். கடல் பறவைகளின் கால்களில் அடிக்கடி கடிதங்களைக் கட்டி அனுப்பிக் கொண்டிருந்தாள். ஒன்றுகூட அதுவரையில் பதிலுடன் திரும்பி வரவில்லை. அதேபோல் ஃபிரிட்ஜ் அனுப்பிய கடிதமும் அவளிடம் வந்து சேரவில்லை.

இதுதான் அவள் சொன்ன வரலாற்றின் சாராம்சம்.

ஜென்னி எங்களது குகை வீட்டையும், மற்ற வீடுகளையும் பார்க்க விரும்பினாள்.

மறுநாள் ஃபிரிட்ஜையும், ஃபிரான்ஸிஸையும் எல்லாவற்றையும் சுத்தப்படுத்தித் தயாராக்கி வைக்குமாறு கூறி எங்களது குடியிருப்புக் முன்னதாக அனுப்பி வைத்தேன். பின்பு நாங்கள் புறப்பட்டோம்.

திருவருள் குடாவில் நாங்கள் நுழைந்தபோது பன்னிரண்டு தடவை பீரங்கிக் குண்டுகள் வெடித்து எங்களை வரவேற்றது. எர்னஸ்ட் எங்கள் படகின் பீரங்கியையும் பன்னிரண்டு முறை வெடிக்கச் செய்தான். சரியான கணக்கின்படி ஓர் அரசியை வரவேற்க அவர்கள் பதின்மூன்று முறை வெடித்திருக்க வேண்டும் என்பதை எர்னஸ்ட் குறிப்பிட்டான்.

ஜென்னி படகை விட்டு இறங்கியதும் ஃபிரிட்ஜ் அவளது கையைக் குலுக்கி வரவேற்பளித்தான். குகைவீட்டில் அவளுக்காக ஒரு பெரிய விருந்து தயாராகி இருந்தது!

இந்த வருடத்தின் மழைக்காலம் ஒரு வகையாக ஓய்ந்தது. நாங்கள் தோட்டங்களையும் பண்ணைகளையும் ஒவ்வொன்றாகப் பார்வையிட்டோம். பீரங்கிகள் ஒழுங்காக வேலை செய்கின்றனவா என்பதைச் சோதித்து பார்ப்பதற்காக ஒன்று அல்லது இரண்டு தடவை அவற்றை வெடித்துச் சோதிக்கமாறு கூறி ஃபிரிட்ஜையும், ஜாக்கையம் கூறாத்தீவிற்கு அனுப்பி வைத்தேன்.

அவர்கள் சுறாத்தீவையடைந்து இரண்டு தடவை பீரங்கிக் குண்டுகளை வெடிக்கச் செய்தனர். மூன்று நிமிட இடைவெளிக்குப் பிறகு மேற்குத் திசையிலிருந்து பதிலுக்கு மூன்று குண்டுகள் வெடிக்கும் ஓசை கேட்டது!

பரபரப்படைந்த பிள்ளைகள் உடனே ஓடிவந்து என்னிடம் இந்தச் செய்தியைத் தெரிவித்தனர்.

இருள் கவியத் தொடங்கியதால் பதில் வெடிச் சத்தம் எதனால் எழுந்தது என்ற காரணத்தை எங்களால் அறிய முடியவில்லை. அடுத்து வந்த இரண்டு நாட்களும் கடுமையான மழையும் புயலும் எங்களை வெளியேற விடாமல் தடுத்தன. இவையெல்லாம் ஒய்ந்த மூன்றாவது நாளன்றும் கடல் கொந்தளிப்பு மட்டும் குயைவில்லை. இருப்பினும் நாங்கள் சுறாத்தீவை அடைந்து மூன்று முறை பீரங்கியால் சுட்டு ஓசையெழுப்பினோம். இரண்டு நிமிட இடைவெளிக்குப் பிறகு ஏழு குண்டுகள் வெடிக்கும் ஓசை பதிலாக்க கேட்டது. அப்போது மகிழ்ச்சியினால் என் கண்கள் நீரைச் சொரிந்தன!

படகு கரை சேர்வதற்கு முன்பே .ஃபிரான்ஸிஸ் எங்கள் படகினுள் குதித்தான். “கப்பல் எங்கே அப்பா நிற்கிறது? ஐரோப்பியரா வந்திருக்கிறார்கள்?” என்று ஆர்வத்துடன் கேட்டான். தன்னைக் காப்பாற்றி அழைத்துச் செல்வதற்காக ஒருவேளை தன்னுடைய தந்தை வந்திருக்கலாம் என்று ஜென்னி கூறினாள்.

“ஒருவேளை கடல் கொள்ளைக்காரர்களாக இருப்பார்களோ?” என்று பயந்த நான் பெண்களையும், மற்ற பிள்ளைகளையும் ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்கு அனுப்பிவிட்டு, நானும் ஃபிரிட்ஜும் மட்டும் சிறிய படகில ஏறிப் புறப்பட்டோம். ஒன்றரை மணி நேரப் பயணத்திற்குப் பிறகு கடலுக்குள் நீண்டு நின்றிருந்த மலைப்பகுதியைச் சுற்றிக் கொண்டு நாங்கள் மறுபுறத்தை அடைந்தபோது, அங்கு ஒரு கப்பல் நிற்பது தெரிந்தது. கப்பலில் இங்கிலாந்தின் கொடி பறந்து கொண்டிருந்தது. இருப்பினும் நாங்கள் கப்பலை நெருங்கவில்லை.

கப்பலின் மேற்புறத்தில் காவலுக்காக நின்றிருந்தவர் எங்களது உடையையும் தோற்றத்தையும் கண்டு, காட்டுமிராண்டிகள் என்று முடிவு செய்தார் என்று தோன்றியது.

அவர் உடனே கத்தி, கத்தரி, பாசிகள், மணிகள் போன்ற பொருள்களை என்னிடம் நீட்டினார். இந்தச் செயல் எங்களைச் சிரிக்க வைத்தது.

உடனே ஈகிள்ஸ்நெஸ்ட்டிற்குத் திரும்பிய நாங்கள் இந்தச் செய்தியை மற்றவர்களிடம் தெரியப்படுத்தினோம். நாங்கள் நல்ல உடைகளை அணியாமல் சென்றதும், பெரிய படகை எடுத்துச் செல்லாமல் போனதும் அவர்கள் அப்படி நினைக்கக் காரணம் என்று என் மனைவி மிகவும் வருத்தப்பட்டாள்.

மறுநாள் நாங்கள் எங்களது பெரிய படகில் புறப்பட்டோம். படகில் பிரிட்டிஷ் கொடியைப் பறக்கவிட்டோம். ஃபிரிட்ஜ், கப்பற்படை அலுவலருக்கு உரிய உடையை மிடுக்குடன் அணிந்திருந்தான்.

அந்தக் கப்பலின் கேப்டன் லிட்டில்ட்டன் எங்களை மாலுமிகளுக்கே உரிய முறையில் அன்புடன் வரவேற்று உபசரித்து முதலில் மது வழங்கினார். மிகவும் பணிவுடன் எங்களைப் பற்றி விசாரித்தார். முதலில் எங்களுடைய கதையைச் சொன்ன பிறகு ஜென்னியின் கதையையும் கூறினேன். ஆஸ்திரேலியா நாட்டில் கரையேறிய உடைந்த கப்பலின் மாலுமிகள் சிலர் கொடுத்த தகவலின்படியே, கப்பல் உடைந்த இந்த இடத்தைத் தேடி லிட்டில்ட்டன் வந்தார் என்பதும், குடிதண்ணீர் பிடிப்பதற்காகக் கப்பல் நிற்கிறது என்பதும் புரிந்தது.

“எங்கள் பயணிகளில் ஒருவரும் புகழ்பெற்ற பொறியியல் வல்லுநருமான மிஸ்டர் உல்ஸ்ட்டன் உடல்நலம் குன்றியுள்ளார். இந்த நிலையில் அவர் தொடர்ந்து பயணம் செய்வது இயலாததாகத் தோன்றுகிறது” என்று கூறினார் கேப்டன் லிட்டில்ட்டன்.

கப்பலின் கேப்டனையும், உல்ஸ்ட்டன் குடும்பத்தினரையும் அழைத்து வந்து எங்கள் மலைவீட்டில் விருந்தளித்தேன். இந்த தீவின் அழகையும் அமைதியையும் கண்ட உல்ஸ்ட்டன் தம்பதி இந்தத் தீவிலேயே தங்கிவிட முடிவு செய்தனர். அவருடைய பெண்கள் இருவரில் மூத்த பெண், நன்னம்பிக்கை முனையிலுள்ள தன் அண்ணனுடைய வீட்டிற்குச் செல்ல விரும்பினாள். இளைய பெண் பெற்றோருடன் எங்களது தீவிலேயே தங்கிக் கொள்ள விரும்பினாள்.

எங்களது பிள்ளைகளில் ஃபிரிட்ஜும், ஃபிரான்ஸிஸும் ஐரோப்பாவிற்குத் திரும்பிச் செல்ல விரும்பினர்.

ஒரு வாரத்திற்கு பிறகு ஒருநாள் விடியற்காலையில் நாங்கள் அனைவரும் கடற்கரைக்குச் சென்றோம். ஃபிரிட்ஜ், பிரான்ஸிஸ், ஜென்னி ஆகியவர்களைக் கடைசி முறையாகத் தழுவி விடைகொடுத்து அனுப்பினோம்!

நான் இதுவரை எழுதியிருந்த குறிப்புகளைத் தொகுத்துப் புத்தகமாக அச்சிடும்படி ஃபிரிட்ஜிடம் ஒப்படைத்தேன்.

கப்பலின் நங்கூரங்கள் உயர்ந்தன. பாய்கள் விரிந்தன. பாய்மரத்தின் உச்சியை நோக்கிக் கொடி உயர்ந்தது.

என்னுடைய பிள்ளைகளை அழைத்துச் செல்வதற்காக கப்பலின் படகு காத்துக் கொண்டிருக்கிறது. ‘கடவுள் அவர்களுக்கு எப்பொழுதும் அருள் புரிவராக!’ என்று நான் மனமார வேண்டிக் கொண்டேன்!

*************************************